# பொருளடக்கம்.

---

# FOREWORD.

MY aim in writing this book has been a humble one. The book does not pretend to be a full revelation of Kalidasa's genius or a complete delineation of the perfections and potencies of that marvellous epoch of our history when India was most fully herself and therefore gave light and leading to the world at large. I shall endeavour to assay that ambitious task on a later occasion. I have set before myself in this book a much smaller and humbler object. I have long felt that, though India was easily the first and the greatest of story-tellers in ancient times and though the fables of Bilpay (*Panchatantra*) and other Indian stories have circled the globe, yet the contribution of modern India to the literature of amusement and delectation (especially in the case of the young) has been very poor indeed. On the other hand, the record of modern Europe and of America, both by way of preserving and perpetuating fairy tales and other children's stories of ancient times and of fashioning new realms of joy and wonderland for children, has been remarkable in its range and diversity and imaginative bloom and grace and attractiveness. A patriotism which is undoubtedly sincere and passionate but which is pre-occupied

with grave issues and forgets the real place of imagination as a moulder of patriotic feeling, especially in the minds of children, will never be able to achieve that radiant and continuous buoyancy and energy without which all national effort will be spasmodic and lacking in progressive power and fruitfulness. It is as a contribution in the above direction that this work is intended. I shall esteem it as a piece of good fortune if this work meets with public acceptance and approval and if we have soon a goodly crop of books which will stimulate the imagination and patriotism of our boys and girls and which will bring about in our land the inner *Kumârasambhava* or the birth of the true spirit of Indian heroism which, by its victorious self-realising power of peace and harmony and godliness, will bring into existence the greater and the happier India of the future.

K. S. RAMASWAMI SASTRI.

*3rd May* 1926.

# காளிதாஸன்.

## அத்யாயம் 1

### காளிதாஸன் சரித்திரம்.

நம்முடைய நாட்டுக்கு உயர்ந்த அணியாக விளங்கி அதன் சிறப்பை உணர்ந்து தந்நாட்டிலுள்ளவர்களுக்கும் வெளிநாட்டிலுள்ளவர்களுக்கும் அதை உணர்த்தி அதன் பெருமையை நிலைநாட்டித் தன்னுடைய அழகு வாய்ந்த மணிவார்த்தைகளால் உலகத்தை இன்புறச் செய்த புலவர் பெருமானை காளிதாஸனை அறியாதவர்கள் கிடையாது. அவனுடைய காவ்ய நாடகங்களின் பெருமையை நம்மவர்கள் மட்டுமல்லாமல் மேல்நாட்டாரும் நன்குணர்ந்து கொண்டாடியிருக்கிறார்கள். போன நூற்றாண்டில் இருந்த புலவர் கோமானாகிய கேதே '(Goethe)' என்பவர் காளிதாஸனுடைய சாகுந்தலத்தைப்பற்றிப் பின் வருமாறு எழுதியிருக்கிறார்:

"உனக்குக் காலதத்துவத்தின் மலரை யொத்த அழகுகளையும் அதன் கனியை யொத்த முடிவுகளையும் அறியவேண்டுமானால், உனக்கு ஆத்மாவுக்கு ஆநந்தத்தையும் திருப்தியையும் சந்தோஷத்தையும் கொடுக்கக் கூடியதை அறியவேண்டுமானால், உனக்கு மண்ணுலகம் விண்ணுலகம் இரண்டையும் அறியவேண்டுமானால்,

நான் அவையாவும் ஒரே சொல்லிலடங்குமென்பேன். அது எது என்றால், சகுந்தலா."

அளவிடமுடியாத பெருமையும் சிறப்பும் வாய்ந்த கவிகுல சக்கரவர்த்தியான காளிதாஸன் சரிதத்தையும் நூல்களையும் என்னுடைய சிறிய புத்திக்கு எட்டினவரையில் இவ்விடம் கூறுகின்றேன்.

காளிதாஸன் இருந்தகாலம் நிச்சயமாகத் தீர்மானம் செய்வது மிகவும் அரிதாகவே இருக்கிறது. வெகு நாளாக அவன் விக்கிரமாதித்திய மகாராஜன் அரண்மனையில் அவ்வரசன கொலுவில் விளங்கின நவரத்தினங்களில் ஒருவனாக விளங்கினான் என்பது நமது நாட்டில் தொன்று தொட்டுவந்திருக்கும் பழமையான மொழி. விக்கிரமாதித்தியன் காலம் கி.மு. முதலாவது நூற்றாண்டு என்று சரித்திரம் எழுதுகிறவர்களின் அபிப்பிராயம். நான் காளிதாஸனைப்பற்றி ஆங்கிலத்திலும் விரிவாக எழுதப்போகிற நூலில் காளிதாஸன் காலத்தைக் குறித்து விவரித்து ஆராய்ச்சி செய்யப் போகிறேன் என்னுடைய தீர்மானம் காளிதாஸன் காலம் கி.மு. முதல் நூற்றாண்டு என்பதுதான்.

காளிதாஸன் அநேகமாக உஜ்ஜயினி பட்டணம் விளங்கிய இந்தியாவின் மத்திய தேசத்தில் பிறந்தவனாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. ஆனால் இந்த விஷயம் அவன் உஜ்ஜயினி முதலான விடங்களை வர்ணிக்கும் திறத்திலிருந்து ஊகிக்கலாமே தவிர நிச்சயமாகச் சொல்லக்கூடவில்லை. அவன் இமய மலை முதல் ஸேதுவரையில் அநேக இடங்களைத் திறமாகவும்

உண்மையாகவும் வர்ணித்திருப்பதால் நம்முடைய நாட்டின் சிறப்பைச் சுற்றிப் பார்த்துக் கண் கூடாகவே கண்டிருக்கவேண்டுமென்று தோன்றுகின்றது. அவனுடைய நூல்களிலிருந்து அவனை நல்ல அறிவும், நூல் பயிற்சியும், உயர்ந்த குணமும், நாகரிகமும், லோக ஞானமும், தெய்வ பக்தியும் பொருந்தினவன் என்பது நன்றாக விளங்குகின்றது. இவையாவும் என்னுடைய ஆங்கில நூலில் விவரித்துரைக்கப்படும். இப்புஸ்தகம் சிறுவர்களுக்காக அமைக்கப்பட்ட நூலானபடியால் அந்த விஷயங்களை இதில் விவரிக்கவில்லை.

காளிதாஸனைப்பற்றிச் சொல்லிவரும் கதை கட்டுக்கதையே. அதற்கு ஒரு ஆதாரமுமில்லை. ஆனாலும் அதன்சாரத்தை மட்டும் இவ்விடம் சொல்லுகின்றேன். மஹிஷபுரியில் அரசுபுரிந்த மஹேந்திரன் என்ற அரசனுக்கு ஒரு அருந்தவப்புதல்வி இருந்தாள். அவள் எல்லா கலைகளையும் கற்றவள். அற்புதமான அழகுவாய்ந்த கட்டழகி. அவளைத் தகுந்த நாயகனுக்கு மணம் முடித்து வைக்க ஆசைகொண்ட அரசன் அவளை வாதில் வெல்லுகின்றவர்களுக்கு அவளை மணம்முடித்து வைப்பதாக முரசறைவித்தான். அரசகுமாரர்களும், கவிவாணர்களும் தத்துவ சாஸ்திரிகளும் எவ்வளவோ [illegible]டியும் அவளை ஞானத்திலும் பேசுந்திறத்திலும் [illegible]ல், முடியவில்லை. பிறகு அவர்கள் ஒரு சதியாலோ[illegible] செய்தார்கள். அவ்வூரில் கற்றறிவே இல்லாம[illegible] மாடுமேய்த்துப் பொழுதுபோக்கிய ஓரந்தணப்[illegible]யனை வரவழைத்து அவனை மகாவித்துவான் [illegible]

கொண்டாடிக் கொலுமண்டபத்துக்கு அழைத்து வந்தனர். அவர்கள் அவனைத் தங்கள் குருவென்றும், மௌனமூர்த்தியென்றும் அறிவித்தார்கள். அரசகுமாரி அவனுடன் சமிக்கையாக வாதாட ஆரம்பித்தாள். உலகத்துக்கு மூலகாரணம் ஒன்று என்பதைச்சுட்டி ஒருவிரலைக் காட்டினாள். அதற்கு அவன் இரண்டுவிரலைக் காட்டினான். உடனே சீடர்கள் என்று சொல்லிக்கொண்ட புலவர்கள் இரண்டு தத்துவங்கள் சேர்ந்துதான் உலகம் உண்டாகின்றது என்று வாதாடி வாதில் அரசகுமாரியை வென்றார்கள். பிறகு அவளை அரசன் அவனுக்கு மணஞ்செய்வித்தான்.

அவன் அன்றிரவு மணவறையில அதுவரையில் ஒரு நாளும் காணாத மிருதுவான படுக்கையில் படுத்தவுடன் ஆழ்ந்து நித்திரை போயினான் அரசகுமாரி அவ்விடம் வந்து வீணையைமீட்டி இனிய கீதங்களைப் பாடினாள். அவன் அப்பொழுது இதைக்கண்டு "சீ! சீ! ஆடே!" என்று பிதற்றி விழித்தான். அதுகண்ட அவள் கோபங்கொண்டு, 'நீ யார்'? என்று வினவ அவன் அவள் காலில்விழுந்து உண்மையை உரைத்து மன்னிக்கும்படி வேண்டினான். அவள் உண்மையை அறிந்து வருந்தி அவனைப் பார்த்து "நீ காளிதேவி கோயிலுக்குச் செல். இச்சமயத்தில் தேவி வெளியில் போயிருப்பாள். நீ கதவை தாளிட்டுக்கொள். அவள் வந்தவுடன் 'பீஜாக்ஷரத்தை என் நாவில உன் சூலத்தால் எழுதினால் அல்லது கதவைத் திறக்கமாட்டேன்' என்று சொல்லு. தேவி அநுக்கிரகம் பண்ணுவாள்" என்று சொல்லி அனுப்பினாள். அவனும் அப்படியே செய்யத் தேவியின் அருள் பெற்று மீண்டும் வந்தான்.

அவன் வரும்பொழுதே அவன் முகம் அறிவால் ஒளி வீசுவதைக்கண்ட அரசகுமாரி மகிழ்ந்து, "அஸ்தி கச்சித் வாகர்த்த:?" என்று கேட்டாள். இதன் பொருள், "ஏதாவது கல்விப்பயன் உண்டா?" என்பது. உடனே அவன் "அஸ்தி" என்று ஆரம்பித்துக் 'குமாரஸம்பவம்' என்ற காவ்யத்தையும், "கச்சித்" என்று தொடங்கி 'மேகஸந்தேசம்' என்ற காவ்யத்தையும், "வாகர்த்தாவிவ" என்று தொடங்கி ரகுவம்சம் என்ற காவியத்தையும் அமிர்த மழை பொழிவதுபோல் பொழிந்தான்.

அதைக்கண்டு அவள் மகிழ்ந்தாலும் தன் வித்தைக்குக் காரணமான அவளை அவன் தன் தாயெனக் கருதியதால் அவள் மனவருத்தமுற்றாள். அவன் அவளை வணங்கி நீங்கிய பிறகு விக்கிரமாதித்திய மன்னன் அரண்மனையை அடைந்து அங்கே கவிகுலதிலகமாக விளங்கினான். அவனைப்பற்றிய வேறு விஷயங்கள் ஒன்றுமே நிச்சயமாகத் தெரியவில்லை. அவனைப்பற்றிக் கட்டுக் கதையாகச் சொல்லும் விருத்தாந்தங்களை நம்ப இடமே இல்லை. அவன் பரத்தையர்களிடத்தில் ஆசையாக இருந்தான் என்ற கட்டுக்கதை கொஞ்சமேனும்பொருந்தமில்லாதது என்பதில் ஐயமில்லை. அவனுடைய நூல்களில் மங்கையர்களின் பெருமையையும் தூய்மையையும் அவன் விவரித்திருப்பதுபோல வேறு ஒருவருமே வர்ணிக்கவில்லை.

அவனைப்பற்றி ஒரு வேடிக்கையான [illegible] சொல்லுகிறார்கள். ஒருநாள் ஒரு ஏழை [illegible] அவனிடம் வந்து அரசனிடம் வெகுமதி [illegible]

கொடுக்க வேண்டினன். அந்த எளியவன் அறிவும் படிப்புமில்லாதவன். அவனுக்குப் பெரிதாக எதாவது சொல்லிக்கொடுத்தனுப்பினால் அரசனிடம் சென்று ஏதாவது உளறிவிடுவான் என்று பயந்து, "நீ அரசனிடம் சென்று த்ரிபீடா பரிஹாரோஸ்து என்று சொல்" என்று புத்திசொல்லி அனுப்பினன். அடுத்தநாள் கொலுமண்டபத்தில் புலவர்கள் நிறைந்த ஸபையில் அந்த எளியவன்வந்து அரசனை நோக்கி "த்ரிபீடாஸ்து" என்று உளறிவிட்டான். அரசன் தன்னை நோக்கி இப்படிச் சாபமிட்டதுபோல உளறினவனைப் பார்த்து சினங்கொண்டபொழுது, காளிதாஸன் எழுந்து, "அரசே, அவன் சொன்னது சரிதான். அவன் கருத்து

ஆஸநே விப்ரபீடாஸ்து சிசுபீடாச போஜநே |
சயனே தாரபீடாசத்ரிபீடாஸ்து தினே தினே ||"

என்று அழகாகச் சொன்னன். இதன் பொருள் என்னவென்றால் :

"நீ ஆஸநத்தில் அமர்ந்திருக்கும்பொழுது பெரியோர்கள் வரின் அவர்களை எழுந்து வணங்கி வழிபடவேண்டிய சிரமம் இருக்கட்டும்; நீ போஜனம் பண்ணும்பொழுது குழந்தைகளுடைய உபத்திரவம் இருக்கட்டும்; உன் படுக்கையில் உன் மனைவியால் தூக்கம் கலையும் வருத்தம் இருக்கட்டும். இப்படி உனக்கு மூன்று பீடை ஒவ்வொரு தினமும் நாள் தவறாமல் இருக்கட்டும்." இப்பொருளைக் கேட்டுணர்ந்த அரசன் மிகவும் மகிழ்ந்து அந்த எளியவனுக்கு அளவற்ற பரிசுகளை அளித்தான்.

இனி வரும் அத்தியாயங்களில் காளிதாஸன் நூல்களின் கருத்தையும் அழகையும் உணர்த்திப் பிறகு அவனுடைய சொற்சுவை பொருட்சுவை இவைகளைப்பற்றி சுருக்கமாகச் சொல்வதாக என்னுடைய எண்ணம். அவை முழுவதையும் விரிவாக எடுத்துரைப்பது இச் சிறிய நூலில் முடியாதபோதிலும் அவற்றின் அழகுகளை ஒருவாறு வெளியிட முயற்சி செய்கின்றேன்.

# அத்யாயம் 2.

## குமார ஸம்பவம்.

### 1. முகவுரை.

**குமார ஸம்பவம்** காளிதாசன் முதல் முதலாக எழுதின நூல் என்பது ஏற்கனவே நான் முன்னுரைத்த கதையால்மட்டும் விளங்குவதன்று; பழமையான பாரம்பரிய வாக்காலும் காவ்யத்தின் நடையாலுமே யே அது விளங்கும். யௌவனமும், சிங்காரமும், புத்தி நுட்பமும், எழுதும் திறமும் அதிகமாக வாய்ந்த மகாகவி தன்னுடைய வாலிபப் பருவத்திலே உலக ஞானம் நிரம்புவதற்கு முன் இன்ப நுகர்ச்சியின் ஆநந்தத்தாலும், சொல்லழகை அநுபவிக்கும் திறத்தாலும் மிதமிஞ்சி வாரி இறைக்கும் சொல்லமிர்தம் நிறைந்து எழுதிய காவ்வியம் குமார ஸம்பவம்.

### 2. பார்வதி ஜநநம்.

வடதிசையிலே தெய்வத் தன்மை வாய்ந்த இமய மலையென்ற பெயருடைய மலையானது கீழ் சமுத்திரம், மேல் சமுத்திரம் இரண்டையும் தொட்டு பூமிக்கு ஒரு அளவுகோல்போல விளங்குகின்றது. அநேக ரத்தினங்களுக்கு இருப்பிடமாதலால் அதற்குப் பனி ஒரு குறைவாக இல்லை. சந்திரனுடைய கிரணங்களில் களங்கம் மறைவதுபோல அநேக குணங்களில் ஒரு தோஷம் மறைந்துபோகும். மேகங்கள் அதன் மத்ய

பாகம்வரையில்தான் இருக்கும் மேக மண்டலத்தை யும் தாண்டி அதன் உச்சிகள் விளங்கும். அதில் அழகிய உருவங்களும் இன்பமான ஒலிகளும் மனத்தைக் கவரும் நறுமணங்களும் நிரம்பி இருக்கும். அது இரவில் ஒளி வீசும் ஔஷதிக் கொடிகளால் பிரகாசிக்கும். கையின் நீரால் குளிர்ச்சியடைந்து, தேவதாருமலர்களால் நறுமணம் பெற்று மிருதுவாக வீசுங்காற்று அப்பிரதேசங்களில் இன்பத்தைத் தரும். மலைகளுக்கெல்லாம் இமய மலையே அரசன்.

அந்த இமய மலையின் தெய்வமான ஹிமவானென்பவர் மேனை என்ற பெண்ணை விவாகம் செய்துகொண்டார். அவர்களுக்கு முதல் பிறந்தது மைநாகம் என்ற பர்வதம். இரண்டாவது பிறந்தவள் பார்வதி தேவி. அவள் அவதாரம் பண்ணியபொழுது பூமாரி பொழிந்தது, தேவ துந்துபிகள் முழங்கின. கந்தர்வர்கள் கானம் செய்தார்கள் அப்சரப்பெண்கள் பாடினார்கள். எல்லாப் பிராணிகளும் இன்பமெய்தின. அந்தக் குழந்தை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்பிறைபோல வளர்ந்து பிரகாசித்து வந்தாள்.

தீபம் சுடரின் ஒளியால் எப்படி விளங்குமோ, சுவர்க்கம் ஆகாச கங்கையால் எப்படி விளங்குமோ, அறிஞன் ஸரஸ்வதி கடாக்ஷத்தால் எப்படி விளங்குவானோ அப்படி ஹிமவானென்பவர் பார்வதி தேவியால் விளங்கினார். அவளுக்குக் கல்வி கற்பித்தபொழுது அவ[illegible] இயற்கையாய் முற்பிறப்பில் பிரகாசித்த வித்[illegible] மழைநாளில் அன்னங்கள் கங்கையை எப்படி[illegible] அடையுமோ, ஒளி வீசுங்கொடிகளின் ஒளி

மறைந்து இருந்து இரவில் எப்படி ஓஷதிக்கொடிகளைச் சேருமோ அப்படி அவளை அடைந்தன. ஸரஸ்வதியை வென்ற ஞானத்துடன் அவள் விளங்கினாள்.

சிறிது காலமானபிறகு அவள் யௌவன பருவத்தை அடைந்து அழகால் எழுதப்பட்ட சித்திரம் போலவும் புதிதாய் மலர்ந்த தாமரை போலவும் அவள் விளங்கினாள். அவள் நடக்கும்பொழுது அவளுடைய பாதங்கள் நிலத்தாமரைகள்போல் பிரகாசித்தன. அன்னநடையுள்ளவள். சிறந்த எழிலுடையவள். மிருதுவான கொடிபோன்ற கைகளையுடையவள். ஆபரணங்களுக்கெல்லாம் அழகுசெய்து அணியாக விளங்கும் தேக சௌந்தர்யம் வாய்ந்தவள். சந்திரனுடைய ஒளியும் தாமரையுடைய மணமும் கூடின முகத்தை உடையவள்; முத்தைப்போன்ற பற்களை உடையவள்; பவளம்போன்ற உதடுகளை உடையவள்; குயிலைப்பழித்த குரலுடையவள்; பெண்மானைப்பழித்த கண்ணுடையவள்; மன்மதன் வில்லைப்பழித்த புருவமுடையவள்; அழகிய கூந்தலு உள்ளவள்; சர்வாங்க சுந்தரியான அவளுக்கு ஸமானமான பெண் எங்கேயும் எப்பொழுதும் இல்லவே இல்லை.

ஒருநாள் நாரதரிஷி வந்திருந்தபொழுது ஹிமவானைப் பார்த்து, "இவள் ஈச்வரனுக்குப் பத்தினியாக ஆகப்போகிறாள். அவர் இவளுடன் அர்த்தநாரீச்வர மூர்த்தமாக விளங்கி உலகங்களை எல்லாம் அனுக்கிரகிக்கப் போகிறார்" என்று சொன்னார். சிறிதுகாலமானபின் ஈச்வரன் இமயமலைச்சாரலிலேயே தவஞ் செய்ய 'வ ஹிமவானனவர் பார்வதியை அவள்தோழிகளுடன்

ஈச்வரனுக்குப் பணிவிடை செய்யநியமித்தார். அவளும் பூஜைக்குவேண்டிய பூக்களைக்கொண்டுவந்து வைத்து ஈச்வரன் இருக்கும் இடத்தை யலகிட்டுக் கோலந் தீற்றித் தூய்மை வாய்ந்த தர்ப்பைகளைப் பரப் பிப் பரமேச்வரனுக்குப் பணிவிடை செய்தாள். அவர் சடையிலுள்ள சந்திரனுடைய குளிர்ந்த கிரணங் களால் களைப்பு நீங்கி எப்பொழுதும பக்தியாகவும் வணக்கமாகவும் அவரை ஆராதனம் பண்ணிவந்தாள்.

## 3. தேவர்கள் பிரார்த்தனை.

இங்கு இப்படி இருக்கத் தேவர்கள் எல்லாரும் தாரகா சுரனால் பிடிக்கப்பட்டு வருந்தி இந்திரனை முன்னிட் டுப் பிரமலோகம் சென்றார்கள். அங்கே சென்று அவ ரைப் பின் வருமாறு துதித்தார்கள்:

"திரிமூர்த்தி சுரூபமாக விளங்குகிறவரே! நீர் சிருஷ்டிக்கு முன் பரமாத்மாவான சச்சிதானந்த தத் துவமாக இருந்தீர். சிருஷ்டிக்குப் பின் திரிமூர்த்தி யாக இருக்கிறீர். இந்த அநேக கோடி பிரம்மாண் டங்களுக்கு நீரே கர்த்தராக இருக்கிறீர். படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலை நடத்தும் முப்பொருளும் நீரே. பரமாத்மாவாகவும் பராசக்தி யாகவும் இருக்கிறீர். நீர் கண் திறப்பதே சிருஷ்டி, கண் மூடுவதே பிரளயம். உலகத்துக்குப் பிறப்பிட மாகவும், பிறப்பற்றவராகவும் இருக்கிறீர்; உலகத் துக்கு முடிவாகவும் முடிவற்றவராகவும் இருக்கிறீர். உலகத்துக்கு பிரபுவாகவும் பிரபுவற்றவராகவும் இருக் கிறீர். உம்மை உம்மால்தான் அறியமுடியும். உமக்

அணிமாதி அஷ்ட ஸித்திகளும் ஸர்வ சக்திகளும் இருக்கின்றன. நீர் வேதங்களுக்கெல்லாம் முதற்காரணம் உம்மைத்தான் பிரகிருதியாகவும் புருஷனாகவும் சொல்லுகிறார்கள்.''

அதைக் கேட்ட பிரம்மா அவர்களுக்கு நல்வரவு கூறி, ''நீங்கள் எல்லோரும் கூடி ஒரே சமயத்தில் ஏன் இவ்விடம் வந்தீர்கள்? மூடுபனியால் ஒளி மழுங்கின நக்ஷத்திரங்கள்போல உங்கள் தெய்வீகப்பிரகாசம் மழுங்கி இருக்கின்றதே. இந்திரனுடைய வஜ்ராயுதமும், வருணனுடைய பாசமும், குபேரனுடைய கதாயுதமும் யமனுடைய தண்டமும் ஏன் இப்படி வீர்யமற்று இருக்கவேண்டும்? இந்த ஆதித்யா பாவநம் சித்திரத்தில் எழுதிய சூர்யன்போல ஒளியற்று இருப்பானேன்? மருத்துக்களின் வேகமெங்கே போய்விட்டது? உருத்திரர்களுடைய வீர்யம் மழுங்கிப்போனதேன்?'' என்று வினவினார்.

பிறகு இந்திரன் பிருஹஸ்பதியை விடையளிக்க வேண்டவே அவர் பின்வருமாறு சொன்னார்: ''எல்லாம் அறிந்த உங்களுக்குத் தெரியாத விஷயமே கிடையாது. உங்களிடத்தில் வரம்பெற்ற தாரகாசுரன் தேவர்களை வென்று உலகங்களையெல்லாம் வருத்துகிறான். அவனிடம் உள்ள பயத்தால் சூர்யன் வெப்பமற்று இருக்கிறான். அவனிடம் அச்சத்தால் சந்திரன் ஸர்வகலைகளுடன் பூரணமாக தினம் ப்ரகாசிக்கிறான். வாயு பகவான் விசிறியால் விசிறுவதுபோல அமைதியாகவே வீசிக்கொண்டிருக்கிறான். எல்லா ருதுக்களும் காலத்திலேயே விளங்கும்படி தாரகாசுரன் உத்

தாவு. வருணன் ரத்தினங்களைக் காணிக்கையாக எடுத்துக்கொண்டு சென்று அவன் அரண்மனை வாயிலில் காத்து நிற்கின்றான். நாகராஜர்கள் தங்கள் நாகரத்தினங்களால் அவனுக்குத் தீபங்களாகப் பிரகாசித்து அவனை சேவிக்கிறார்கள், இந்திரனும் கல்பக விருக்ஷமீன்ற ஆபரணங்களைக் காணிக்கையாக அனுப்பிக்கொண்டே இருக்கிறான். இவ்வாறு வணங்கி தேவர்கள் நடந்தும் தாரகாசுரன் உபத்திரவம் பொறுக்க முடியவே யில்லை. நந்தவனத் தோட்டத்திலுள்ள மரங்களை எல்லாம் வெட்டிக்கொண்டு போய்விட்டான். அப்சரப்பெண்களனைவரையும் சிறை வைத்துவிட்டான். மேருவின் சிகரங்களைப் பிடுங்கிக் கொண்டுபோய்விட்டான். ஆகாச கங்கையில் விளங்கும் பொற்றாமரைகள் ஒன்றுகூட இல்லை. வேள்விகளில் தேவர்களுக்குக் கொடுக்கப்பட்ட ஹவிர்ப்பாகங்களை அவனே பிடுங்கி எடுத்துக்கொள்ளுகிறான். அவனிடமுள்ள பயத்தால் தேவர்கள் ஓடி ஒளிந்திருக்கிறார்கள். இந்திரனுடைய உச்சைச்ரவஸ் என்ற குதிரையைக் கவர்ந்துக்கொண்டான். எந்த விஷ்ணுவின் சக்ரத்தால் நாங்கள் வெற்றியடையலாம் என்று நம்பி இருந்தோமோ அது விஷ்ணுவால் அவன்மேல் எய்யப்பட்டபொழுது அவனது கழுத்தில் பொன்னணியாகவே தங்கிவிட்டது. ஆகையால் எங்களுக்கு ஒரு மஹா சக்தி பொருந்திய சேனானைத் தந்தருளி வெற்றி அளிக்கவேண்டும்."

அப்பொழுது பிரமதேவர், "வெகு விரைவில் உங்கள் எண்ணம் நிறைவேறும். அவனுக்கு வரம் த்து நானே அவனைக் கொல்லுவது சரியன்று

வளர்த்த மரம் விஷமரமானபோதிலும் நாமே அதை வெட்டலாமா? பரமசிவனுடைய சக்தியால்தான் அவனை வெல்ல முடியும். நீங்கள் பார்வதி தேவியின் அனுக்கிரஹத்தை அடைந்து பரமசிவன் தவத்தைக்கலைத்துப் பார்வதி பரமேச்வர கல்யாண மஹோத்ஸவத்தை நடத்திவைத்து அவர்கள் மகனை குமாரக் கடவுளால் தாரகசங்காரம் செய்யுங்கள்" என்று மொழிந்து மறைந்தார் தேவர்களுஞ் சுவர்க்கஞ் சென்றார்கள்.

## 4. காம தஹனம்.

தேவர்களுக்கெல்லாம் அரசனான இந்திரன் கார்ய ஸித்தி அடைவதற்காக மன்மதனை நினைத்தான். உடனே மன்மதன் வந்து இந்திரனைப் பார்த்து, "எதற்காக நினைத்தீர்கள்? உங்கள் உத்தரவு என்ன? யாராவது தவஞ் செய்து இந்திரப்பட்டத்தை அடைவதற்கோ மோக்ஷமடைவதற்கோ முயற்சி செய்கிறார்களா? அவர்கள் தவத்தைக் கலைத்துப்பெண்கள் கடைக்கண் பார்வையின் அடிமையாக ஒரு க்ஷணத்தில் செய்து விடுகிறேன். அல்லது, எந்த சுந்தரியையாவது நீர் விரும்புகின்றீரா? பரமசிவனுடைய தவத்தையும் கலைத்து உம்முடைய விருப்பத்தைநிறைவேற்றுவேன்" என்றான். இந்திரனும் பரமசிவனுக்குப் பார்வதி தேவியிடத்தில் அன்புண்டாகும்படி செய்யவேண்டும் என்று வேண்டினான். "அவர்கள் குமாரனுல்தான் தேவ கார்யம் நிறைவேறும். குமாரஸம்பவம் உன்னால்தான் நிறைவேறும்" என்று மொழிந்தான். மன்மதனும் ஒப்புக்கொண்டு இமயமலைக்கு வந்து சேர்ந்தான்.

## 5. ரதிப்ரலாபம்.

இப்பெரிய துன்பத்தை அடைந்த ரதிதேவி புலம்பி அழுது புரண்டு கதறினாள். "ஐயோ! என் நாதன் போய்விட்டாரே! அழகிலும் அன்பிலும் ஒப்புயர்வற்ற கணவன் சென்றபின் நான் தங்கலாமா? நாயகனே! எப்படி என்னை விட்டுவிட்டுச் சென்றீர்? உமக்கு வெறுப்பான காரியம் ஒன்றும் நான் செய்யவில்லையே! அப்படி ஏதாகிலும் செய்திருந்தேனோ? உம்மாலன்றோ உலகம் இன்புற்றிருந்தது! வசந்த காலமும் திங்கள் ஒளியும் இனிப்பயனற்றதே! உமக்குத் தோழனான வசந்தன் எங்கே உம்மை விட்டுப் போய்விட்டான்? நான் இனி உயிர் வாழமாட்டேன். நானும் உயிர் துறந்து உம்முடனேயே வருவேன்." இதைக் கேட்டு வசந்தன் வேகமாக ஓடி வந்து அவளைத் தேற்றினான். அவளைக்கண்டவுடன் அவள் துயரம் பன்மடங்கு அதிகரித்தது. துன்பத்தால் நிறைந்த மனம் உற்றாரைக் கண்டால் பொங்குமன்றோ? அவள் அவனைப் பார்த்து, "என் நாயகனது அருமைத் தோழனே! உன் அருமைத் தோழனெங்கே? நாதா! என்னிடத்தில் பிரியமில்லாவிட்டாலும் உம்முடைய தோழனுக்காகவாவது வரக் கூடாதா? காதலிகளை வெறுத்தாலும் மனதுக்குகந்த தோழர்களை வெறுப்பவர்களுண்டா? வசந்தா! புயற் காற்றால் அணைந்த தீபம்போல உன் தோழன் போய்விட்டாரே! தீயை மூட்டி என்னை அதன் வழியாக அவரிடம் அனுப்பு. சந்திரன் போனால் நிலவும் போய்விடுகிறது. மேகம் போனால் மின்னலும் தங்குவதில்லை. அறிவில்லாதவைகளுக்கு அவ்வளவு ஒற்றுமை இருக்கு

பொழுது அன்புள்ள காதலி நாயகன் பிரிவைப் பொருத்துத்தங்குவளா? மன்மதனுடைய ஜீவன் பரலோகம் போய்ச் சேருவதற்கு முன் நானும் அங்கே போய்க் கூடுகிறேன். பிறகு நீ கொடுக்கும் சிராத்த பலியை நாங்கள் சேர்ந்தே உண்ணுவோம். நீ சிராத்த பலியாகக் கொடுக்க வேண்டியது மாந்தளிர்களே. விரைவாக அக்கினியை மூட்டு" என்று பிரார்த்தித்தாள். அப்பொழுது ஆகாயவாணி, "ரதி! நீ வருந்தாதே. துன்பத்தைப் பொறுத்துக்கொள். பரமசிவன் பார்வதீ தேவியை மணந்துகொள்ளும்பொழுது உன் கணவன் உருவமடைந்து உன்னைக் களிப்பிப்பான்" என்று மொழிந்தது. ரதி தேவியும் ஒருவாறு ஆறுதலடைந்து நல்லகாலம் எப்பொழுது வரும் என்று ஆவலுடன் எதிர் பார்த்திருந்தாள்.

## 6. பார்வதீ தவம்.

பரமசிவன் வேறு இடம் சென்றதும் பார்வதீ தன் சௌந்தரியத்தைப் பழித்துக்கொண்டாள். நாயகன் அன்பை விளைவிக்காத அழகால் பயனென்ன? இனித் தவத்தால்தான் அத்தகைய நாயகனையும் அத்தகைய அன்பையும் அடையலாம் என்று அவள் தீர்மானித்தாள். அவள் தாய் மேனா தேவி, "அம்மா! கிருக தேவதைகளைப் பூசித்தால் போதும். உன் மிருதுவான தேகம் எங்கே! மிகவும் கடுமையான தவம் எங்கே!" என்று தடுத்தும் பார்வதீ தவத்துக்குப் புறப்பட்டுக் காட்டிற்குச் சென்று பரமசிவனைக் குறித்துக் கடுந்தவம் புரிந்தாள். வெண்பட்டைக் களைந்து வல்கலத்தை உடுத்தாள். ஒட்டியாணத்தைக் கழற்

றித் தர்ப்பையால் செய்த மௌஞ்சியைக் கட்டிக்கொண்டாள். ஜபமாலையைக் கைக்கொண்டாள். மஞ்சத்திலுள்ள பட்டுப் படுக்கையை விட்டுத் தரையிலேயே படுத்தாள் கந்தனை வளர்க்கப் போகிற கைகளால் அவளிடமுள்ள பிரியத்தைக்காட்டிலும் பதின்மடங்கு அதிகமான அன்புடன் ஆசிரமச் செடிகளுக்கு ஜலம் வார்த்து வளர்த்தாள். அங்கே தவம் செய்யும் ரிஷிகள்கூட அவள் தவத்தைக் கண்டு வியந்தார்கள். பார்வதி தபோவனம் ஒப்புயர்வில்லாத் தூய்மை வாய்ந்திருந்தது. புலியும் பசுவும் ஒரே துறையில் நீரருந்தின. பஞ்சாக்கினி நடுவில் சூரியனை இமைகொட்டாமல் நோக்கித் தவம் செய்தாள். பந்து விளையாட்டாலும் வாடும் அவள் திருமேனி நெடுந் தவம் செய்தும் தங்கத் தாமரைபோல் வாட்டமின்றி விளங்கிற்று. மேகத்திலிருந்து விழும் நீர்த் துளிகளும் சந்திர கிரணங்களும் தவிர அவளுக்கு வேறு உணவே கிடையாது. அவள் கீழே விழும் இலைகளையும் உணவாக உட்கொள்ளாததால் அவளுக்கு அபர்ணை என்று பெயர் வாய்ந்தது. அவள் பூர்ண யோக நிலையிலிருந்தபொழுது மேகத்தினின்று விழும் நீர்த் துளிகள் ஒரு கணம் உதட்டிலிருந்து பிறகு அவள் மார்பில் விழுந்து பிறகு அவள் மடியில் விழுந்தன. அப்படி நேராக உட்கார்ந்து தன் பார்வையைப் புருவ நடுவில் வைத்துச் சிவத்தியானத்தில் ஆழ்ந்திருந்தாள்.

ஒரு நாள் ஒரு நித்தியப் பிரம்மசாரி மான்தோல் தரித்துப் பலாச தண்டம் கையில் ஏந்திச் சடையுடன் கூடினவராக வந்து பார்வதி தேவியின் ஆசிரமத்தை அடைந்தார். பார்வதி தேவியும் அவருக்கு உபசாரம்

பண்ணினாள். பிறகு அவர் அவளை நோக்கி, "தர்ப்பை, நீர் முதலானவை உன் நியமத்துக்குத் தக்கவாறு கிடைக் கின்றனவா? உன் சரீரம் தவத்துக்குத் தகுந்ததான சக்தி பொருந்தி யிருக்கிறதா? ஏனென்றால் சரீரமே தர்ம சாதனங்களுள் முக்கிய சாதனம். உலகத்தில் 'அகத்தினழகு முகத்திலே' என்று சொல்வது உன க்கு ஒத்திருக்கின்றது. உன் தவத்தின் நிலை பெரிய ரிஷிகளுக்குக்கூட உபதேசம் செய்கின்றது. கங்கை யால் வாய்ந்த தூய்மையைக்காட்டிலும் உன்னுடைய தவத்தாலே இங்க நாடு மேலான தூய்மையை அடைந் திருக்கின்றது. நீயோ உயர்ந்த குலத்தில் பிறந்தவள். உன் சரீரமோ மூவுலகின் அழகும் திரண்டு உருவெடு த்தது போலிருக்கிறது. சம்பத்தோ அளவு கடந் திருக்கின்றது. வயதோ யௌவனம். நீ எதற்காகத் தவம் செய்யவேண்டும்? முதுமைப் பருவத்தில் தரிக்கும் மரவுரியை நீ இளமைப் பருவத்தில் ஏன் தரிக்கவேண்டும்? தெய்வலோகம் வேண்டுமென்ற ஆசையா? இமய மலையே தேவலோகமாயிற்றே. மண வாளனிடம் விருப்பமாயிருக்கலாமென்றாலோ? ரத்தி னம் தான் விரும்பி மக்களினைச் சென்றடைகின்றதா. மக்கள் தாமே அதை விரும்பிச் செல்வார்கள். நீ பெரு மூச்சு விடுவதைப் பார்த்தால் உனக்கு அந்தக் குறை தான் என்று தெரிகின்றது. ஆனால் நீ விரும்பியும் உன் னைப் பொருட்படுத்தா திருக்கும் நாயகன் இருக்கிறானா. அவன் யார்? என்னுடைய தவத்திலும் பாதி உனக்குத் தருகிறேன். உன் எண்ணம் நிறைவேறும்" என்று மொழிந்தார்.

உடனே பார்வதி தன் தோழியை நோக்க அவளும் அச்சான்றோரை நோக்கி, "இவள் இந்திராதிதேவர் களுக்கும் ஈசனுவரும் மன்மதனையே எரித்ததால் அழகால்மட்டும் வசப்படுத்தக்கூடாதவருமான பரம சிவனைப் பதியாக அடைய விரும்புகிறாள். இரவு களில் கனவிலும் 'நீலகண்டா! எங்கே போகிறீர்'? என்று சொல்லித் திடீரென்று விழித்துக்கொள்ளுகி றாள். இவள் வளர்த்த மரங்கள் பூக்குக் கனிகள் தொங்கிக்கொண்டிருக்கின்றன. ஆனால் இவள் ஆசை மரமோ அரும்பவுமில்லை," என்று கூறினாள்.

உடனே அவர் நகைத்து, "இதென்ன ஆச்சர்யம்! அர வத்தை அணியாகப் பூண்ட அவர் பாணிக்கிரகணம் பண்ணினால் நீ எப்படிப் பொறுக்க முடியும்? உன்பட்டு ஆடைக்கும் அவர் யானைத் தோலுக்கும் என்ன பொரு த்தம்? பூவில் நடக்கும் நீ சுடுகாட்டில் நடக்கலாமா? யானையில் ஏறிச் செல்லும் நீ கிழ மாட்டில் ஏறினால் எல்லோரும் நகைப்பார்களே! பரமசிவனைப்பற்றின பிறையையும் உன்னையும் பார்க்க வருத்தமாக இருக்கி றது. அவருக்கோ மூன்று கண்கள். பிறந்த குலமும் தெரியாது. அவர் திகம்பரராக இருப்பதாலேயே அவர் ஐச்வர்யவான் அல்லர் என்பது விளங்கும். விவாகத் திற்கேற்ற மாப்பிள்ளைக்கு இருக்கவேண்டிய குணங் கள் ஏதாவது ஒன்று அவரிடம் உண்டா?" என்று உரைத்தார். உடனே பார்வதியின் கண் சிவந்தது. அவள் புருவத்தை நெரித்தாள். "நீர் அவருடைய பெரு மையைச் சிறிதும் அறியீர். உலகத்துக்கெல்லாம் அடை க்கலமாகவும் ஆசைபற்றவராகவும் இருக்கும் பரமனுக்கு

நீருரைத்த சாம்ராஜ்யங்கள் எதற்கு? அவர் பொருளற்றவராக இருந்தும் எல்லோருடைய பொருளும் அவரால் உண்டாகும். சுடுகாட்டிலிருந்தாலும் அவர் மூவுலகுக்கும் பிரபு. அவர் பேயராக இருந்தாலும் அவரே பரமசிவம். அவர் பெருமையை யார் அறிவார்கள்? அவர் ஆபரணங்கள் அணிந்தாலும் அரவங்கள் பூண்டாலும்; அவர் தோலையுடுத்தாலும் பட்டைத்தரித்தாலும்; அவர் கபாலமேடுத்தாலும் சந்திரனை முடித்தாலும் யாவும் சமமே. அவர் உடலிற் சேர்ந்ததால் சுடுகாட்டுச் சாம்பலும் மகா தூய்மை வாய்ந்ததாகும். தேவர்கள் யாவரும் அதை விரும்பித் தேடிப் பூசிக்கொள்ளுகிறார்கள். அவர் மாட்டில் ஏறிச் சென்றாலும் யானையேறிச் செல்லும் இந்திரன் அவருடைய பொன்னடிகளை வணங்குகிறான். பிரம்மாண்டத்துக்கே மூலகாரணமான அவருக்குக் குலம் கோத்திரம் உண்டா? உம்முடன் பேசி என்ன பயன்? நீர் சொல்லியபடியே இருந்தாலும் என் மனம் அவரையே பற்றி நிற்கின்றது. தோழீ! இவருடன் என்ன பேச்சு? பெரியோர்களை இகழ்பவர்களுக்குமட்டுமன்று தோஷம். அவர்கள் தூஷிப்பதைக் கேட்பதுகூட பாபம். நான் இந்த இடத்தை விட்டு நீங்குவேன்" என்றுரைத்து வெகு கோபமாகப் புறப்பட்டாள்.

உடனே அத் தபோதனர் தமது ஸ்வரூபத்துடன் அவளுக்குத் தரிசனம் தந்தார். பரமசிவனைக் கண் குளிரக் கண்டதும் அவள் நாணி முன்போகவும் மனமில்லாமல், நிற்கவும் வெட்கி மலையால் தடுக்கப்பட்ட ஆற்று வெள்ளம்போலத் தயங்கினாள். அப்பொழுது

பரமசிவன் அவளை நோக்கி, "இன்று முதல் நான் உனக்கு அடிமை. உன் தவத்துக்கு நான் விலைப்பட்டேன்" என்றார். இந்த அருமையான காதல் மொழிகளைக் கேட்ட தேவிக்குத் தவக்களைப்பு நீங்க அவள் பரமானந்தத்தை அடைந்தாள்.

## 7. பார்வதீ கல்யாணம்.

பிறகு பரமசிவன் கைலாயஞ் சென்று ஸப்தரிஷிகளை நினைத்தார் உடனே அவர்கள் ஆகாயமார்க்கமாக அருந்ததியுடன் கிளம்பினார்கள். அவர்கள் ஆகாய கங்கையில் நீராடித் தங்க மரவுரிகளை உடுத்து முத்துப் பூணூல்களைத் தரித்து நவரத்தின ஜபமாலைகளைக் கையில் வகித்துத் திருமேனியின் திவ்விய ஒளி யாண்டும் வீசப் புறப்பட்டார்கள். ஸப்தரிஷி மண்டலம் சூரிய மண்டலத்திற்கும் அப்பால் இருந்ததால் சூரியன் உயர்ந்து செல்லும் கிரணங்களால் அவர்களைத் தரிசித்து மகிழ்ந்து வணங்கினன.

அவர்கள் அழிவற்றவர்கள். பிரளயகாலத்தில் ஆதிவராகஸ்வாமியின் கோரப் பற்களில் பூதேவி தங்கிய பொழுது அவர்களும்தாங்கப்பட்டு அப்போது காப்பாற்றப்பட்டவர்கள். பிரமதேவனுக்கு உதவியாக விருந்து உலகங்களைப் படைத்தவர்கள். உத்தம தவத்தின் பயனாக உயர்ந்த பதவியை அடைந்தும் தவத்திலேயே இருப்பவர்கள். அவர்கள் நடுவில் அருந்ததீதேவி தன் நாயகன் வசிஷ்டரின் பாதசேவையில் ஈடுபட்டவளாய் அவர்கள் தவத்தின் சித்தியே உருவெடுத்து வந்தவள் போல விளங்கினாள். அவர்கள் எல்லோரும் ஈச்வரன் சன்னிதியில் வந்தபொழுது ஈச்வரன் மிகவும் சந்தோ

ஷித்து அவர்கள் யாவரையும் ஆதரவுடனும் அன்புட னும் கௌரவத்துடனும் நல்வரவு கூறினார். மகாத்மாக் களுக்கு ஆண் பெண் என்ற பேதமுண்டா? ஒழுக்கமே உயர்வுக்குக் காரணம். பார்வதியை மணஞ்செய்ய எண்ணங்கொண்ட சிவனுக்கு வசிஷ்டரும் அருந்ததி யும் தம்பதியாக வந்தது பெரிய சுபத்தைக் குறிக்கும் நல்ல சகுனமாக நேர்ந்தது.

பிறகு சப்தரிஷிகள் ஈச்வரனை நோக்கி, "பரமேச் வரா! இன்றைய தினமே எங்கள் வேதமோதலும், வேள் வியுந் தவமும பலித்தன. ஏனென்றால் இன்றைய தினம் உலகங்களுக்கெல்லாம் ஈச்வரனை நீர் எங்களை யும் பொருட்படுத்தி நினைத்தீர். எவன மனத்தில் நீர் இருக்கிறீரோ அவனே மகா புண்ணியவான். அப்படி யிருக்க எவன் உங்கள் மனத்தில் இருக்கிறானோ அவன் புண்ணியத்தையும் பாக்கியத்தையும் உரைக்க முடியுமா. எல்லோருடைய மனத்திலும் விளங்கும் பரமாத்மா வான உங்களுக்கு எங்களுடைய பக்தியை நாங்கள் தெரி விக்கவேண்டியதில்லை. எங்களுக்கு நீங்கள் இடுங் கட் டளையைத் தெரிவிக்கவேண்டுகிறோம்" என்றுரைத் தார்கள் பரமேச்வரன் களிகூர்ந்து, "நான் அஷ்ட மூர்த்தியாக இருந்து உலகத்தைக் காப்பதற்காகவே எண்ணங்கொண்டிருப்பது உங்களுக்கே தெரியும். இப்பொழுது தேவர்கள் என்னிடமிருந்து குமாரனை விரும்புகிறார்கள் ஆகையால் நீங்கள் ஹிமவானிடம் சென்று பார்வதீதேவியை எனக்கு மணஞ் செய்து கொடுக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டும்" என்று கடா க்ஷித்தார்.

அம்முனிவர்கள் அவரிடம் விடைபெற்று உடனே ஆகாயமார்க்கமாகக் கிளம்பி ஹிமவானிருக்கும் நகரத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் அசையும் நீரில் தோன்றும் சூரிய பிரதிபிம்பங்களின் தொகுதிபோல் வந்தார்கள் அவர்களை ஹிமவான் எதிர்கொண்டழைத்து மரியாதை செய்து அர்க்கியமளித்து நல்வரவு கூறினார். முகிலில்லாமலே மழை பொழிந்தது போலும் மலராமலே கனி உண்டானதுபோலும். எதிர்பாராதவண்ணமாக உங்கள் வரவு நேர்ந்தது அறிவீனனுக்கு அறிவு வரினும், இரும்பு தங்கமாக மாறினும், பூமியிலிருந்து சுவர்க்கம் செல்லினும் உண்டாகும் ஆநந்தத்தை நான் உங்களைக்கண்டு அடைந்தேன். இன்றுமுதல்தான் உங்கள் பொன்னடி சூட்டியதால் என் தேசம் தூய்மையடைந்தது கங்கையின் நீராலும் உங்கள் பாக்கியத்தாலும் நான் புனிதனாயிருக்கிறேன். உள்ளிருளை அகற்றும் புண்ணிய மூர்த்திகளே! ஆசையெல்லாம் கடந்த உங்களுக்கு என்ன விருப்பம் இப்பொழுது வந்தது?" என்று வினவினார்.

அப்பொழுது அவர்களுக்குள் முதல்வரான அங்கிரஸ ரிஷி, "உம்முடைய உச்சி எப்படி உயர்ந்ததோ அப்படியே உம் மனமும் உயர்ந்திருக்கிறது. ஆகையால்தான் உம்மை விஷ்ணு மலைகளுக்குள் தான் உம்முடைய உருவமாக இருப்பதாக மொழிந்தார். எல்லாப் பக்கங்களிலும் உம்முடைய சக்தியும் கீர்த்தியும் பரவி இருக்கின்றன. நாங்கள் வந்த செய்தியைக் கேளும். சந்திரசேகரான பரமேச்

வரன் உங்கள் பெண்ணை மணஞ்செய்ய விருப்பங் கொண்டிருக்கிறார். அவர் எண்ணத்தையும் உலகத்தின் நன்மையையும் நீங்கள் நிறைவேற்றவேண்டும். இவளோ உலகத்துக்கெல்லாம் தாய்; அவரோ தந்தை. அவர்கள் மணத்தைக் கண்குளிரக்காண உலகமெல்லாம் விரும்புகின்றது” என்றார்.

அதைக்கேட்ட பார்வதீதேவி நாணத்தால் தலை வணங்கிக் கையில் இருந்த தாமரைமலரின் இதழ்களை ஒவ்வொன்றாக எண்ணி நின்றாள். ஹிமவானுக்கு அளவிடக்கூடாத ஆனந்தம் உண்டாயிற்று. மேனையை நோக்கி அவள் எண்ணத்தை எதிர்பார்த்தார். விவாக விஷயங்களில் மனைவிக்கன்றோ முதற்பொறுப்பு. அவளும் நாயகன் மனப்படியே இணங்கினாள். பதிவிரதைகள் பதி மனங் கோணுதபடியே நடப்பார்கள். உடனே ஹிமவான் பார்வதியைக் கூப்பிட்டு சப்த ரிஷிகளையும் அருந்ததிதேவியையும் நமஸ்காரம் பண்ணச்செய்து, “இதோ பரமேச்வரனுக்கு நிச்சயம் பண்ணப்பட்ட மணப்பெண் உங்களை வணங்குகிறாள்” என்று மகிழ்ந்துரைத்தார். உடனே அருந்ததி நாணி நிற்கும் பார்வதீதேவியைப் பரிந்தெடுத்து முத்தமிட்டுத் தன் மடியில் வைத்து மகிழ்ந்தாள். அதற்கு நாலாவது நாள் விவாகமுகூர்த்தம் நிச்சயமாகப் பின் சப்தரிஷிகளும் அருந்ததியும் சென்றார்கள்.

உடனே ஹிமவானுடைய நகரமெல்லாம் மணக்கோலமாக அலங்கரிக்கப்பட்டது. விவாகதினமன்று விவாகமானஸ்திரீகள் பார்வதிக்கு மங்களநீராட்டி வெண்பட்டுடுத்திச் சர்வாபரண பூஷிதையாக அலங்கரித்து அவளை

மணவறைக்கு அழைத்து வந்தார்கள். மலர் நிறைந்த கொடிபோலவும் நக்ஷத்திரம் நிறைந்த இரவுபோலவும் அவள் மிகவும் விளங்கினாள். மேனாதேவி அவளுக்குப் பொட்டிட்டு, "நாயகனுடைய பிரிவற்ற பிரேமையை அடைவாயாக" என்று ஆசீர்வதித்து ஆனந்தக்கண்ணீர் விட்டாள். அச்சமயத்தில் சப்த மாத்ருகாதேவிகள் ஈச்வரனுக்கு மணக்கோலமாகக் கைலாயத்தில் அலங்காரம் செய்தார்கள் அவர்கள் பக்திக்கு இணங்கினாரே தவிர அவருக்கு மங்களரூபம் இயற்கையானதே. சாம்பலே சந்தனப்பூச்சாயிற்று தலையில் தரித்த கபாலமே அழகிய தலைப்பாகையாக மாறி நின்றது. யானைத்தோலே பட்டாடையாக மாறிற்று. நெற்றிக்கண்ணே திலகமாக ஆயிற்று மெய்யில் இருந்த அரவங்களெல்லாம் நாகரத்தினங்களாக ஒளிவீசின. களங்கமற்றதும் நிகரற்றதுமான பிறைச்சந்திரன் தலையில் பிரகாசித்தான். சிவகணங்களாலும் எல்லாத் தேவர்களாலும் சூழப்பட்டுப் பரமேச்வரன் விருஷபாரூடராக நந்திகேச்வரன் கைலாகு கொடுக்க மகாவைபவமாக மணக்கோலத்துடன் வந்து சேர்ந்தார். சப்த மாத்ருகா தேவிகளும் பரமேச்வரனுடனே வந்தார்கள். அவர்களுக்குள் காளிகாதேவி மிகவும் பிரகாசித்தாள். பரமேச்வரனுக்கு முன்பாக தேவதுந்துபி வாத்தியம் வாசித்துப் பேரொலிசெய்ய மங்களமுழக்கத்துடன் அவரை அழைத்து வந்தார்கள். சூரியன் பரமேச்வரனுக்குவெண்குடை பிடித்தான். கங்காதேவியும் யமுனாதேவியும் பகவானுக்குச் சாமரம் வீசினார்கள். பிரமனும், விஷ்ணுவும் 'ஜய விஜயீ பவ!" என்று ஜயசப்

வெற்றிமுழங்கினார்கள். மும்மூர்த்திகளும் ஒரே பரமாத்மதத்துவமானபடியால் அவர்கள் லீலைகளில் ஒருசமயம் ஒருவரும் மற்றொரு சமயம் மற்றவரும் நடுநாயகமாக விளங்குவது அவர்களது சுதந்திர சங்கல்பம். தேவர்கள் எல்லாரும் கைகட்டி வாய்பொத்தித் தலைவணங்கிக் கலியாண மகோத்சவத்தைப் பார்க்க நின்றார்கள். பரமேச்வரன் பிரமனை தலையசைவாலும், விஷ்ணுவைப் பேச்சாலும், இந்திரனைப் புன்சிரிப்பாலும், மற்ற தேவர்களை கடாக்ஷத்தாலும் நல்வரவு கூறினார். அவர் சப்தரிஷிகளைப் பார்த்து, 'நீங்களேதான் புரோகிதர்களாக இருக்கவேண்டு' மென்று வேண்டினார். கந்தர்வர்கள் பாடினார்கள். அப்ஸரமாதர்கள் நடனமாடினார்கள். இப்படி ஆகாயமார்க்கமாக வந்தவர்களை எதிர்கொண்டழைத்து ஹிமவான் மணமண்டபத்திற்குச் சென்றார். பட்டணவீதிவழியாக ஊர்வலம் வரும்பொழுது அந்த நகரத்துப்பெண்கள் சாளரங்கள் வழியாக ஆவலுடன் எட்டிப்பார்த்தார்கள். மன்மதனை வென்ற அழகுடன் வரும் மகேச்வரனைப் பார்த்து, "இந்த அழகிய மணவாளனைக்கண்டு தன்னழகைப்பழித்தே மன்மதன் ஓடி ஒளிந்துவிட்டான்" என்று புகழ்ந்தார்கள். விவாக மண்டபத்தின் அருகில் வந்தவுடன் அச்சுதன் அரனுக்குக் கைதந்து உதவிக் கீழே இறக்கப் பரமசிவன் விவாக மண்டபத்தை அடைந்தார். அங்கே ரத்தினாசனத்தில் அமர்ந்து ஹிமவானளித்த பட்டாடையை அணிந்து அக்கினி சாக்ஷியாக வேதமந்திரங்களுடன் பார்வதிதேவியைப் பாணிக்கிரகணம் செய்தார். சப்தபதி, லாஜஹோமம் முதலிய கிரியைகள் நிறைவேறின.

துருவ தர்சனம் முடிந்தது. ஸரஸ்வதிதேவியே மங்களம் பாடினாள். தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். பிறகு அவர்கள் அரனைநோக்கி மன்மதனுடைய நமஸ்காரத்தையும் ஏற்றுக்கொள்ளும்படி பிரார்த்திக்கப் பகவானும் இணங்கி அவனை உயிர்ப்பித்து அவனுக்கு அனுக்கிரகம் பண்ணினார்.

## 8. குமார ஸம்பவம்.

பிறகு பார்வதீ பரமேச்வரர்கள் மிகவும் அன்புடன் தம்பதிகளாக சுகித்திருந்தார்கள். கைலாயத்திலே பரமானந்த பூர்ணர்களாக நூறு வருஷகாலம் ரமித்தார்கள். குமாரக்கடவுளை அடைய விரும்பிய விருப்பம் நிறைவேறத் தாமதமாவதைப் பொறுக்காமல் தேவர்கள் எல்லோரும் அக்கினி பகவானைப் பரம சிவனிடம் அனுப்பினார்கள். அவர் பரமேச்வரனிடம் சென்று, "ஈசனே, தேவர்கள் உங்கள் பிரசாதத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். கிருபைகூர்ந்து குமாரக் கடவுளை எங்களுக்குச் சேனைத் தலைவனாகக் கொடுக்கவேண்டும்" என்று வணங்கிப் பிரார்த்தித்தார். ஈசனுமிணங்கித் தன் அம்சத்தை அவரிடம் கொடுக்க அவர் அதை எடுத்துச் சென்று இந்திரனிடம் தெரிவித்து அதைத் தாங்குவது அசாத்தியமாக இருந்ததால் அதைக் கங்கையில் விட்டார். கங்காதேவி சுவர்க்கம் செல்வதற்கு ஏணிபோன்றவள். மோக்ஷ வழியைக் காட்டும் தெய்வம். பாபங்களையெல்லாம் போக்கி நற்பதமளிப்பவள். ஈசன் சடையிலிருப்பவள். விஷ்ணுவின் கால் விரலிலிருந்து பெருகினவள். மூவுலகையும் பரிசுத்தஞ் செய்யுந் தூய்மை வாய்ந்தவள். அத்

தகைய மகிமை வாய்ந்த கங்கா ஜலங்கூட சிவன் அம் சத்தைத் தாங்க முடியவில்லை. அப்பொழுது அங்கு ஆறு கிருத்திகா தேவிகளும் கங்கா ஸ்நானம் செய்ய வந்தார்கள். அவர்கள் நீராடினவுடன் அந்த நுத்தி ராம்ச சம்பந்தம் அவர்களுக்குண்டாகி ஒவ்வொருவ ருக்கும் ஒரு குழந்தை பிறந்தது. அவர்கள் அக்குழவி களைச் சரவணப் பொய்கையில் வைத்தார்கள். அவை ஆறும் பிறகு ஆறுமுகமான ஒரு குழந்தையாக அது கங்கையால் வளர்க்கப்பட்டது. அப்பொழுது சிவனும் பார்வதியும் அங்கே வந்து அந்தக் குழந்தை யைப் பரிந்து எடுத்து மகிழ்ந்தார்கள். பார்வதீ தேவி குமாரக் கடவுளை மடியில் வைத்து முத்தமிட்டு பரமா னந்தமடைந்தாள். தேவ துந்துபிகள் முழங்கின. கந் தர்வர்கள் பாடினார்கள். சப்த மாத்ருகா தேவிகள் குழந்தைக்கு ஆசிர்வாதம் செய்தார்கள்.

குமாரஸ்வாமியும் வளர்பிறைத் திங்கள்போல நா ளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்ந்து வந்தார். அவருடைய பால லீலை வெகு அழகாகவும் ஆச்சர்யமாகவும் ஆனந்தமாகவும் இருந்தது. ஒரு வேளை பரமேச்வரன் வாகனமான விருஷபத்தின் கொம்புகளை அசைப்பார்; ஒரு வேளை உமாதேவி வா கனமான சிங்கத்தின் பிடறியைப் பிடித்து இழுப்பார்; ஒரு வேளை பரமசிவன் மடியில் உட்கார்ந்து சிவன் கழுத்துக்கணியாக விளங்கும் கருநாகத்தின் பற்களை "ஒன்று, ஒன்பது, இரண்டு, பத்து, ஐந்து, ஏழு" என்று எண்ணறியாதார்போல்எண்ணி விளையாடுவார்; ஒரு வேளை சிவன் தலையில் இருக்கும் கங்கைநீரில்

கையிட்டதும் கை குளிரவே சிவனுடைய நெற்றிக் கண்ணின் நெருப்பு ஜ்வாலையில் அதைக் காய்ச்சுவார்; ஒரு வேளை சிவன் தலையில் விளங்கும் திங்களை முத்த மிடுவார்

ஒரு நாள் தேவேந்திரன் ஈச்வரனைத் தரிசிக்க வந்தான். அப்பொழுது திங்களைச் சடையிலலணிந்தவரும், கங்காதரரும், முக்கண்ணரும், நீலகண்டரும், மரித்த தேவாசுரர்களின் மெய்ச்சாம்பல்களால் வெளுத்த நித்யஸ்வரூபரும், பிரும்ம கபாலமேந்தியவரும், சூலத்தைத் தரித்தவரும், மின்னலகொடி போன்ற உமாதேவியுடன் விளங்குகிறவரும், திருபுராந்தகரும், வீடை அளிப்பவருமான சம்புவைக் கண்டு மெய்யன்புடன் வணங்கினான். ஆயிரங்கண்களுடன் கண்டு களித்தான். அப்பொழுது சிவன் அவனை ஆசனத்தில் அமரச்செய்து, "ஏன் தேவர்கள் எல்லோரும் ஒளி யிழந்து தேவலோகம் விட்டுப் பூவுலகில் அலைந்து வருந்துகின்றார்கள்? உங்களுக்குத் தாரகாசுரனால் உபத்திரவம் ஏற்பட்டிருக்கிறதா? நான் உங்கள் துயரங்களைத் தீர்த்து உங்களைத் திருப்தி பண்ணுகிறேன்" என்று வாக்களித்தார். உடனே இந்திரன், "பரமேச்வரா, நித்தியஜ்ஞானமயமான உங்களுக்கு முக்காலமும் நித்தியப் பிரகாசமன்றோ. தாரகாசுரனால் நாங்கள் மிகவும் வருந்துகிறோம். பிரமதேவரும் உங்கள் செல்வக் குமாரனால் எங்களுக்கு மங்களமுண்டாகுமென்று அபயமளித்தார். குமாரக்கடவுளை தேவசேனைத் தலைவனாக எங்களுக்கு அளித்துக் காத்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தான். பரமேச்வரனும் அப்படி

யே குமாரக்கடவுளை நோக்கி "தேவமங்களம் உண்டாகும் படி செய்வாயாக" என்று கட்டளையிட்டார்.

## 9. குமரக் கடவுளின் பிரதாபம்.

உடனே குமாரஸ்வாமி பரமேச்வரனையும் பார்வதீ தேவியாரையும் வலம்வந்து வணங்கி அவர்கள் அனுக்கிரகமும் ஆசீர்வாதமு மடைந்து விடைபெற்றுத் தேவேந்திரனுடன் சென்றார். பிறகு நக்ஷத்திரங்கள் நடுவில் சந்திரன்போல தேவசேனை நடுவில் நடுநாயகமாகப் பிரகாசித்தார். இந்திரன் தெய்விகமான பீதாம்பரத்தால் அவரைச் சிங்காரித்தான். பிரம்மா அவரைத் தழுவி முத்தமிட்டு ஆசீர்வதித்தார். கந்தர்வ வித்தியாதர சித்த கணங்கள் "ஜய விஜயீ பவ," என்று கட்டியங் கூறினார்கள். ரிஷிகள் யாவரும் அவருக்கு க்ஷேமமுண்டாகுகவென்று அனுக்கிரகம் செய்தார்கள். குமரக்கடவுளும் பார்வதீ கொடுத்த சக்தியைக் கையிலேந்தித் தேவ சேனையுடன் சென்று ஆகாய கங்கையை அடைந்தார். கங்காதேவியும கார்த்திகேயரைக் கண்டு களித்தாள். குமார ஸ்வாமி நந்தவனத்தையும், அமராவதீ நகரத்தையும் கண்டு அவைகளை அபகரித்துப் பாழ் பண்ணிய அசுரனைக் குறித்து மிகவுஞ் சினங்கொண்டார். பிறகு தேவர்களுக்கு மூல புருஷரான காசியபரையும் அவர் பத்தினியான அதிதிதேவியையும் வணங்கி அவர்களுடைய மங்களாசாசனம் பெற்று மகிழ்ந்தார். இந்திராணியும் அவரை ஆசீர்வதித்தாள்.

பிறகு யுத்த பூமிக்குத் தேவசேனைகளுடன் குமாரக் கடவுள் வெகு வைபவத்துடன் சென்றார். திக்பாலகர்

கள் அவரைச் சூழ்ந்து சென்றார்கள். அந்த தேவ சேனையைத் தாரகாசுரன் தன்னுடைய அளவற்ற அசுர சேனையுடன் எதிர்த்தான். அந்த யுத்தமானது உலகத்திற்கே பிரளயகாலம்போலத் தோன்றியது. கழுகுகளும் நரிகளும் கூட்டமாக வந்தன. ஆகாயத்திலிருந்து நக்ஷத்திரங்கள் உதிர்ந்தன. கோடையிடிகள் முழங்கி விழுந்தன. அச்சமயத்தில் கோரமான யுத்தத்தைக் குமரக் கடவுள் செய்தார். தாரகாசுரன் எய்த பாணங்களையும் ஆயுதங்களையும் விளையாட்டாக முறித்து விலக்கினார். தாரகன் சினந்து, "ஆண்டிப்பிள்ளையே! உனக்கு என்ன கர்வம்? நீயோ சிறு குழந்தை. உன்னுடன் போர் புரிவது எனக்கு வெட்கமாக இருக்கிறது. நீ உன் தாயார் மடியில் உட்கார்ந்து கொண்டு விளையாடு. ஓடிப்போய் உயிரைக் காப்பாற்றிக்கொள்" என்று அலட்சியமாகப் பேசினான். குமாரக்கடவுள் சிரித்து, "எங்கே! உன் பலத்தைப் பார்ப்போம்" என்றார். பிறகு வெகு கோரமான யுத்தம் நடந்தது. அவனுடைய அக்கினி அஸ்திரத்தை வருணாஸ்திரத்தால் விலக்கினார். இப்படி அவனுடைய ஒவ்வொரு அஸ்திரத்தையும் அவர் யோகிபாபங்களை வெல்லுவதுபோல் வென்று விலக்கினார். பிறகு பயங்கரமான கத்தியைக் கையில் எடுத்துத் தேரிலிருந்துகீழே குதித்து அவரைக் கொல்ல அவன் ஓடி வரவே அவர் சக்தி ஆயுதத்தைப் பிரயோகித்து அவனைச் சங்கரித்தார். தேவர்களெல்லாரும் களித்துப் பூமாரி பொழிந்தார்கள். உலகமெல்லாம் ஆனந்தமடைந்தது. குமரக் கடவுளின் பெருமையை எல்லோரும் போற்றிக் கொண்டாடி அளவில்லா மகிழ்வை அடைந்தார்கள்.

## 10. முடிவுரை.

இந்தக் கம்பீரமான காவ்யம் எவ்வளவு சிறப்பு வாய்ந்ததென்று அதை ஆழ்ந்து அனுபவிப்பவர்களுக்குத்தான் நன்கு விளங்கும். சிலர் இதில் ஏழு ஸர்க்கந்தான் காளிதாஸன் எழுதியதென்றும் மிகுதியை லக்ஷ்மண கவி என்ற ஒருவர் எழுதினார் என்றும் சொல்வது தவறு. பாகவதம் பொப்பதேவர் எழுதியது, வியாசர் எழுதியதன்று என்று சொல்லும் அறிவாளர் போன்றவர்தான் இந்தத் தவறான எண்ணங் கொள்ளவும், சொல்லவுங்கூடும். சர்வ லக்ஷணம் பொருந்திய இந்தக் காவ்யத்தில் நம்முடைய நாட்டின் சிறப்பும், பரமேச்வரன் அனுக்கிரகமும், பார்வதியின் கடாக்ஷமும், குமாரக் கடவுளின் மகிமையும் நிறைந்திருக்கின்றன. இதைப் படிக்கும் சிறுவர்களுக்கு கம்பீர வீரத்தன்மையும், ஞானமையும், சர்வ சாம்ராஜ்யமும் உண்டாகும் என்பது திண்ணம்.

## அத்யாயம் 3.

## மேக ஸந்தேசம்.

### 1. காவ்ய சௌந்தர்யம்.

இந்தக் காவ்யம் காளிதாஸனுடைய கற்பனைசக்தி யையும் வர்ணனையின் திறத்தையும் நன்றாகக் காட்டு கின்றது இந்தக் காவ்யம் 'ஸந்தேச காவ்யம்' என்று பிறகு ஏற்பட்ட வெகு காவ்யங்களுக்கு மூலகாரணம். ஸந்தேசம் என்றால் தூதுவிடுதல். ராமாயணத்தில் ராமர் அனுமானைத் தூதுவிட்டதிலிருந்து தூதுவிட்டு எண்ணத்தை அறிவிப்பது என்ற குறிப்பைக் காளி தாஸன் எடுத்துக்கொண்டான்போலத் தோன்றுகின் றது. இக்காவ்யம் எழுதியிருக்கும் விருத்தம் மந்தா க்ராந்தா என்ற பெயருள்ளது அது மிகவும் இனிமை யும் காம்பீர்யமும் பொருந்திய விருத்தம். காளிதாஸன் அதை உபயோகிக்கும் முறையும்வெகு திருத்தமாகவும், அழகாகவும் இருக்கின்றது. இந்த நூல் அவன் நன்றாகப் பழகித் தேர்ந்த கையான பிறகு எழுதிய நூலென்று நன்றாகவே விளங்குகின்றது இரண்டுபாகமாக அமைந் துள்ள இக்காவ்யம் மனைவியைப்பிரிந்த ஒரு யக்ஷன் அவ ளுக்கு ஒருமேகத்தைத் தூதுவிடுவதைப் பொருளாகக் கொண்டுள்ளது. இதில் முதற்பாகம் யக்ஷன் வசித்த ராம கிரியிலிருந்து அவன்மனைவி இருந்த அளகாபுரிக்குப் போகும் வழியைக் குறிக்கின்றது. இரண்டாவது பாகத் தில் அளகாபுரியும், அவன் மனைவியின் கற்பும் அன்பும்

வர்ணிக்கப்படுகின்றன. ஆகையால் இந்த நூலில் காவ்ய சோபைக்கு முக்கிய காரணமான இயற்கையழகும், அன்பினழகும் வர்ணிக்கப்படுகின்றமையால் இது இன்பச்சுவை நிரம்பிய காவ்யம் என்பதில் ஐயமே இல்லை.

## 2 பூர்வ மேகம்.

ஒரு யக்ஷன் தன் கடமையைச் சரியாகச் செய்யாததால் யக்ஷர்களின் அரசனான குபேரனால் ஒரு வருஷம் அளகாபுரியைவிட்டு நீக்கப்பட்டு, நாட்டையும், நாயகியையும் விட்டுப்பிரிந்து, சீதாதேவி நீராடியதால் மிகவும் தூய்மை வாய்ந்ததும் சோலைகள் அடர்ந்திருந்ததுமான ராமகிரி ஆச்ரமங்களில் ஒரு வருஷம் காலங்கழித்து வந்தான். தன் காதலியைப் பிரிந்ததால் தேகம் வாடி மெலிந்து கைக்காப்பு நழுவ வருந்தியபொழுது மழைகாலமும் வந்தது. ஆடி மாதத்தின் முதல்தேதியில் மலையில் தங்கிக் கரையை தந்தத்தால் முட்டி விளையாடும் யானையைப்போலக் கருத்துப் பருத்த ஒரு மேகத்தைக் கண்டான். அதை வெகுநேரம் அவன் கண்ணும் கண்ணீருமாக நோக்கினான். குடும்பத்திலேயே இருப்பவர்களுக்கே மழைகாலத்தில் மனோதைரியம் குறைவடையுமென்றால் மனைவி மக்களை விட்டு வெகு தூரம் சென்றவர்களுக்கு மனம் எப்படி இருக்கும்? ஆசையின் பெருக்கால் அந்த மேகத்தை மனைவிக்குத் தூது விட வேண்டும் என்று நிச்சயம் பண்ணி மலை மல்லிகைகளால் அதற்கு மரியாதை செய்து நல்வரவேற்றினான். அசேதனமான மேகம் எங்கே, தூது விடக்கூடிய மனிதன்

எங்கே என்று ஆசை மிகுதியால் நிரவிசாரிக்காமலே அதைத் தூது விட அவன் எண்ணங்கொண்டான். அதிக அன்புள்ளவர்களுக்குப் பகுத்தறிவு அதிகமாக விளங்காதல்லவா?

அந்த மேகத்தைப் பார்த்து அவன் சொன்னான்: "நீ சப்த மேகங்கள் குலத்தில் உண்டானவனல்லவா. இந்திரனுடைய முதன்மையான வேலைக்காரனல்லவா. ஆகையால் நாட்டையும் நாயகியையும் வெகு தூரம் விட்டு வந்த நான் உன்னிடம் ஒரு கொடையை விரும்புகிறேன். பெரியோர்களிடம் வேண்டுகோள் பயனற்றாலும் மேலானதே. தாழ்ந்தவர்களிடத்தில் வேண்டுகோள் பலித்தாலும் மேலானதல்ல. நீயோ வாடி இருப்பதற்கெல்லாம் காப்பாளியாக இருக்கிறாய். குபேரன் உத்தரவால் மனைவியைப் பிரிந்த எனக்கு நீ தூது போகவேண்டும். பரமசிவனுடைய சடையில் ஒளி வீசும் பிறையால் விளங்கும் மாளிகைகளுடன் கூடின அளகாபுரிக்கு நீ செல்லவேண்டும். நீ வாயுமார்க்கமாகப் போகும்பொழுது வியாபாரம் முதலான விஷயமாகப் போயிருப்பவர்களின் மனைவிகள் தங்களுடைய அழகிய கூந்தலின் சுருட்டை மயிரைத் தள்ளிக்கொண்டு உன்னைக் கண்ணெடுத்துப் பார்த்து ஆறுதலடைவார்கள். ஏனென்றால் என்னைப்போலச் சுதந்திர மிழந்தவனைத் தவிர மற்ற எவன்தான் உன்னைக் கண்ட பிறகு பிரியமான மனைவியை விட்டுப் பிரிந்திருக்க மனங்கொள்வான். நீ போகும் பெருமையை யாராலே வர்ணிக்கமுடியும். தென்றல் காற்று மிருதுவாக வீசி உன்னை சுமந்துகொண்டு செல்லும். சாதகப்

பறவை உன்னைப் பார்த்துக் களித்துக் கூவும். கொக்குகள் வரிசை வரிசைகளாகக் கூடிக் குலாவி உன்னையே பின் தொடர்ந்து வரும். நீ அளகாபுரிக்குச் சென்று அன்பு நிறைந்தவும் புண்ணியவதியும் பதிவிரதையுமான என் மனைவியான உன் மைதுனி என் வரவை எதிர்பார்த்து நாள் எண்ணிக்கொண்டிருப்பதை நீ நோக்குவாய். வெகு மிருதுவான பூவைப் போன்ற பெண்களுடைய மனது துயரத்தால் நொடிந்து தளர்ந்து போகும். ஆசை யென்ற கட்டுத்தான் அதைத் தளர்ந்து கீழே விழாமல் தாங்கிப் பாதுகாக்கும். பூமியைப் பலிக்கும்படி செய்யும் உன்னுடைய இடி முழக்கத்தைக்கேட்ட அன்னங்கள் தாமரைக் கிழங்குகளை உணவாக மூக்கில் கவ்விக்கொண்டு மழை காலத்தில் மானஸ தடாகத்தை அடைவதற்காகக் கைலாசம் வரையில் உன் கூடவே வரும். ஆகையால் நீ ஸ்ரீ ராமருடைய பொற்பாதங்களால் புண்ணியமாக்கப்பட்டதும் எல்லோராலும் வணங்கக்கூடியதுமான இந்த உன் உத்தம நண்பனான ராமகிரி யென்ற உயர்ந்த மலையை இறுகத் தழுவி அதனிடத்தில் விடைபெற்றுச் செல்லவேண்டும். ஒவ்வொரு மழை காலத்திலும் நீ இங்கே வந்து வெகு காலம் பிரிவாற்றாமையால் நண்பனைக் கண்டு கண்ணீர் விட்டு உன் அன்பைக்காட்டுகிறாயல்லவா."

இப்படி நயந்து சொல்லிப் பிறகு மேகம் போக வேண்டிய வழியைச் சொல்லத் துவக்கினான்: "வெகு தூரம் போகவேண்டியிருப்பதால் களைத்த பொழுது மலையுச்சிகளில் தங்கித்தங்கி இளைத்தபொழுது தூய்மை

யான ஆறுகளின் நீரை அருந்தி அருந்திக் களை தீர்ந்து பசிதீர்ந்து சுகமாகச் செல்லவேண்டும். உன்னைப் பார்த்துப் பயந்து பயந்து மலையின் சிகரமே பறந்து போகிறதோ என்று சித்தப் பெண்கள் முகம் நிமிர்ந்து பார்ப்பார்கள். எட்டு திசைகளைத் தாங்கும் யானைகளின் நீண்டு பருத்த அழகிய துதிக்கைகளின் செருக்கை அடக்கும் உருவத்தின் அழகுடன் நீ வட திசையை நோக்கிச் செல்லவேண்டும். எப்படி அணியாகப் பூண்ட மயில் தோகை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை அழகுபடுத்தியதோ அப்படி நவரத்தினங்கள் இழைத்ததுபோல் விளங்கிப் பூமியைத் தொட்டது போல் புலப்படுகின்ற வானவில்லானது உனக்குப் பரம சௌந்தரியத்தை உண்டு பண்ணும். உன்னால்தான் வயல்கள் விளைகின்றன என்று மிகவும் அன்பும் ஆதரவும் விளங்கும் பார்வையுடன் மடமை வாய்ந்த கிராமப் பெண்கள் களிப்புடன் உன்னைப் பருகுவதுபோல் நோக்குவார்கள். மாலம் என்று பெயருடன் கூடியதும் உழுத பிறகு நறுமணம் வீசுவதுமான உயர்ந்த இடத்திற்கு நீ செல்லவேண்டும். அங்கே வெகு தூரம் வந்து களைத்த உன்னை ஆம்ரகூடம் என்ற உயர்ந்த மலை நல்வரவேற்றிச் சந்தோஷிக்கும். உன் மழையால் நீயும் காட்டுத் தீயை அவிப்பாய். தாழ்ந்தவன் கூட நன்மை செய்த நண்பனைக் கண்டால் விடமாட்டானே. உயர்ந்தவனா விடுவான்? யௌவன மங்கையின் கூந்தலைப்போல அழகுவாய்ந்த நீ மலையுச்சியில் இருக்கும்பொழுது அந்த மலையின் சிறப்பு ஒப்புயர்வில்லாமல் விளங்கும். அதன் பக்கங்களெல்லாம் கனிகள்

கனிந்து தொங்கிப்பிரகாசிக்கும். அது காட்டு மாமரங்களால் நிரம்பியிருக்கும். அப்பொழுது தேவர்கள்கூடப் பார்த்து பூதேவியின் மார்பழகு எவ்வளவு நன்றாயிருக்கிறதென்று கொண்டாடுவார்கள்."

"பிறகு அங்கிருந்து கிளம்பிப் போகும் வழியில் விந்திய பர்வதத்தின் அடியில் நர்மதா நதி போவதை நீ பார்க்கலாம். யானையின் முதுகில் அலங்காரக்கோலம் போல அந்த ஆறு அந்த மலையில் விளங்கும். யானைகளின் மதஜலத்தால் நிறைந்து மணப்பதும் நாவல் மரங்களால் தடுக்கப்படுவதால் தாமதமாகப்போகும் அந்த ஆற்றின் நீரை உண்டு கம்பீரமாகச் செல். அப்பொழுது காற்று உன்னை விரட்டாது. சரக்கு இல்லாதவன் அல்லவா விரட்டப்படுவான். பொருள் நிறைந்தவனை விரட்ட முடியுமா? பச்சை நிறமும் பொன்னிறமும் வாய்ந்த பூந்தாதுக்களையுடைய கதம்ப மரங்களை நோக்கிக் கொண்டும் முதல் முதலாகப் பூ வாங்கின வாழைகளை ஒவ்வொரு மண் மேடுகளிலும் தின்று கொண்டும் கானகங்களில் தரையின் நறுமணத்தை மோந்து பார்த்துக்கொண்டும் களிப்புடன் போகும் மான்கள் உனக்கு நீ அங்கிருந்து போகவேண்டிய வழியைக் காட்டிக்கொண்டே போகும். சித்தர்களெல்லாம் நீ போகும் பொழுது உன் மழைத்துளிகளை வெகு சாமர்த்தியமாக உட்கொள்ளும் சாதகங்களையும் வரிசைகளாக உன் கூடவே பறந்து வரும் கொக்குகளையும் தங்கள் நாயகிகளுக்குக் காட்டுவார்கள். அச்சமயத்தில் உன் இடி முழக்கத்தைக் கேட்டுப் பயந்த அவர்களுடைய மனைவிகள் அவர்களை இறுக்கித் தழுவ

வே அவர்கள் மிகவும் களித்து உன்னை அன்புடன் நோக்குவார்கள். மலைமலையாக நீ தங்கிச் செல்லும் பொழுது மயில்கள் களித்து வெண்மையான கண்களில் ஆனந்தக் கண்ணீர் சொரிய உன்னை ஏறிட்டு நோக்கித் தோகைகளை விரித்து ஆடி உன் பின் தொடர்ந்து வர முயற்சி செய்யும். நீ தசார்ண தேசத்திற்குப் போகும் பொழுது தாழம்பூக்களால் அழகு பொருந்திய இடங்களையும் பறவைகள் கூடு கட்டி வாழும் கிராம விருக்ஷங்களையும் நாவற் பழம் நிறைந்த தோட்டங்களையும் காணுவாய். அந்த நாட்டிலே தலை நகரமான விதிசை என்ற பிரசித்தமான பட்டணத்தை அடைந்து சிறு அலைகளால் அழகிய புருவம் போல விளங்கும் வேத்ரவதி என்ற நதியின் சுந்தர முகத்தை முத்தமிடுவாய். பிறகு காட்டாறுகளின் கரைகளில் வளர்ந்து பூ நிறைந்த மல்லிகைச் செடிகளில் நீர் தெளித்துப் பூப்பறிப்பவர்களின் களைப்பை உன் நிழலால் தீர்ப்பாய்."

"அங்கேயிருந்து நீ போகும் வழி சுற்றாக இருந்தாலும் உஜ்ஜயினியின் அரண்மனைகளைப் பார்க்காமல் போகக்கூடாது. உன் மின்னல்களைக்கண்டு பயந்து உன்னைவெருண்ட விசாலமான விழிகளால்அந்நகரப் பெண்கள் நோக்குவதைக் காணாமல் நீ போனால் உன் பிறப்பு பயனற்றதாகும். அங்கிருந்து அலைகளில் அசைந்து கொண்டிருக்கும் பறவைக் கூட்டத்தையே இடையணியான ஒட்டியாணமாகத் தரித்து, விலாசமாக நடந்து வரும் கட்டழகியைப்போல வரும் நிர்விந்த்யா என்ற நதியை நீ பார்த்து இன்புறவேண்டும். பெண்கள்

தங்கள் உள்ளன்பை நாயகனிடத்தில் சொல்லாமல் குறிப்பாலல்லவா காட்டுவார்கள். நீர் குறைந்ததால் பெண்கள் கூந்தல் பின்னலைப்போல இருக்கும் சிறு பிரவாகத்துடன் இருப்பதும், வெளுத்த சிறகுகள் விழுவதால் பிறிவால் மெலிந்து வெளுத்த நாயகி போலிருப்பதும் அழகிய உன்னை விரும்பி வருந்திக் கொண்டிருப்பதுமான அந்த நதியை மெலிவு நீங்கித் துயரமற்றுப் பெருக்குக் களித்திருக்கும் நிலையை அடைவிக்கவேண்டும்."

"பிறகு அவந்தி தேசத்தை அடைந்து அதன் ராஜதானியான உஜ்ஜயினியை அடைவாயாக சுவர்க்கம் போய் திரும்பியவர்கள் தங்கள் கூடக் கொண்டுவந்த சுவர்க்கலோகம் போலவே அது விளங்கும். அந்த உஜ்ஜயினியில் சிப்ராநதியின் குளிர்ந்த காற்று நறுமணம் வீசி மனதைக் களிப்பித்துச் சரீரத்தின் களையையும் மாற்றும். அந்த நகரத்தின் கடைகளில் அளவற்ற நவரத்தினங்களும், முத்துக்களும், பவழங்களும், சங்குகளும் நிறைந்திருப்பதால் கடலில் ரத்தினங்கள் முத்துக்கள் பவழங்கள் இல்லாமல் நீர் மட்டுமே நிறைந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அது சதுரங்க சைனியம் நிறைந்த நகரம். அங்கே சாம்பிராணிப் புகை மேகம்போல் நிறையவும், மயில்கள் ஆடவும், அழகிய பெண்கள் அரண்மனைகளில் இருக்கவும் நீ பார்ப்பாய். அங்கே மகாகாலம் என்ற புண்ணிய க்ஷேத்திரத்தைத் தரிசித்துப் பேரிகை சத்தம் செய்வதுபோல இடிமுழுங்கி நீ பரமேச்வரனைப் பூஜிக்கவேண்டும். பிறகு தேவகிரியில் ஸ்கந்த மூர்த்தியைத்

தரிசிக்கவேண்டும். அங்கிருந்து குருக்ஷேத்திரம் சென்று பிரம்மாவர்த்த தேசத்தை அடையவேண்டும். பிறகு கங்கையை நீ அடைந்தால் உன் நிழல் அந்த ஜலத்தில் விழும்பொழுது கங்கை யமுனா சங்கமம் போலவே இருக்கும். அங்கிருந்து நீ இமய மலைக்குச் செல்லவேண்டும். அங்கிருந்து பரமேசுவரன் மந்த காசம் போல வெண்மை நிறத்துடன் விளங்கும் கைலாச மலையை நீ நெருங்க வேண்டும். அதன் அருகில் மானசசரசுடைய பக்கத்தில் விளங்கும் மிகவும் அழகு வாய்ந்த அளகாபுரியை நீ சென்று பரமானந்தத்தை அடைவாயாக.''

## 3. உத்தர மேகம்.

இந்தக் காவியத்தின் இரண்டாவது பாகத்தை உத்தர மேகம் என்று சொல்வது வழக்கம். பூர்வமேகத்தில் இயற்கை வர்ணனை எவ்வளவு அழகோ அதைக் காட்டிலும் உத்தர மேகத்தில் உள்ளன்பை வர்ணிக்கும் அழகு மிக இன்பமாகவும் சிறப்பாகவும் இருக்கும்.

யக்ஷன் மேகத்தைப் பார்த்துப் பின்னும் சொல்லலாயினன்: ''அளகாபுரியின் அரண்மனைகள் உன்னைப் போலவே இருக்கும். அவைகளில் மின்னலைப் போன்ற பெண்ணரசிகளும், வானவில்லைப்போன்ற சித்திர சாலைகளும், இடிமுழக்கம் போன்ற முரசின் ஒலிகளும், முகிலின் தளதளப்பை வெல்லும் மணிமயமான தரைகளும், ஆகாயம் அளாவும் மாளிகைகளும் கோபுரங்களும் விளங்குதலால் உன் அழகுகளை அவை ஒத்திருக்கும். நீ போனபொழுது அளகாபுரியிலிருக்கும் பெண்

கள் தாமரையைக் கையிலும், கூந்தலில் குந்தப் பூவை யும், மற்ற இடங்களில் வேறு அழகிய மணம் வீசும் மலர்களையும் அணிந்து கொள்வார்கள். அளகாபுரியில் மரங்கள் எல்லா ருதுக்களிலும் மலர்களால் நிறைந் திருக்கும். தாமரைக் குளங்களில் அன்னங்கள் தாமரை மலர்களில் நித்தியவாசஞ் செய்யும். வீட்டு மயில்கள் எப்பொழுதும தோகைகளை விரித்தாடிக்கொண்டிருக் கும். இருட்டென்பதே இல்லாமல் இரவெல்லாம் நிலா ஒளி வீசும். ஆனந்தக் கண்ணீரன்றி வேறு கண் ணீரே இராது. காமனால் உண்டாகும் தாபந் தவிர வேறு வெப்பமே இல்லை. அன்புடையிருவர் அன்பு மிகுதியால் பிணங்குவதால் அல்லது வேறு பிரிவே கிடையாது. யக்ஷர்களுக்கு வாலிபப் பருவம் தவிர வேறு பருவம் இல்லை. அவர்கள் தங்கள் நாயகிகளுடன் நக்ஷத்திரங்கள் பிரதிபிம்பிக்கும் பளிங்குக் கல் மேடை களில் இருந்து மதுவை உட்கொண்டு இன்பமான பாட்டுக்களைப் பாடியும் கேட்டுங் களிப்பார்கள். தேவர் களால் விரும்பப்பட்ட அந்த யக்ஷப் பெண்கள் கங்கை யின் குளிர்ந்த நீரின் சம்பந்தத்தால் இனிமையாக வீசும் காற்றை அநுபவித்து மந்தார மரங்களின் நிழ லில் சுகமாகத் தங்கமணலில் ரத்தினங்களை விளையாட் டுக் கருவிகளாகக் கொண்டு விளையாடுவார்கள். மிருது வானதும் பளபளப்புள்ளதுமான வெண் பட்டாடை களை உடுப்பார்கள். எங்கும் இரவில் ரத்தின தீபங் கள் பிரகாசிக்கும். மாளிகைகளுக்குள்ளாகவே மேகங் கள் சஞ்சரிக்கும்படியான உயர்ந்த பிரதேசத்தில் அள காபுரி இருப்பதால் அடிக்கடி மேகங்கள் வீடுகளுக்குள்

ளாகவே சென்று நீர்த் துளிகளை சித்திரித்திருக்கும் தரைகளில் வீழ்த்திப் பிறகு தவறு செய்த திருடன் போலச் சாளரங்கள் வழியாகப் புகைபோல் வேகமாக வெளிப்படும். இரவில் சந்திர கிரணங்கள் தாக்கிக் குளிர்ந்த நீரைக் கக்கும் சந்திரகாந்தக்கற்களிலிருந்து சிறு துளிகள் தங்கள் மேல் விழுதலால் இன்புற்றுக் களைப்பு நீங்கி அளகாபுரிப் பெண்கள் ஆனந்தமாக இருப்பார்கள். வைப்ராஜம் என்ற அழகிய பூங்காட்டத்தில கின்னரர்கள் அப்சரப் பெண்களுடன் குபேரன் பெருமையை மனோகரமாகப் பாடுவார்கள். அழகிய சாலைகளில் பூக்களாலும் அணிகளாலும் விளங்கும் மாதரசிகள் போவதால வழியெல்லாம் தாமரைகளும் மந்தாரப் புஷ்பங்களும் முத்துக்களும் ரத்தினங்களும் இறைந்திருக்கும். காமனை எரித்த பரமசிவன் அளகாபுரி பக்கத்தில் இருப்பதால் காமன் அவ்விடம் வந்து தன் கரும்பு வில்லை வளைத்து மலர்க் கணைகள் தொடுப்பதே இல்லை. அவனுடைய அதிகாரம் அங்கே எதற்கு? அவ்விடம் உள்ள அழகு வாய்ந்த பெண்களின் புருவ வில்லே அவன் வில்லைக் காட்டிலும் சக்தி வாய்ந்திருக்கின்றதே. அவர்களுக்கு அலங்காரத்திற்கு வேண்டிய பட்டாடைகள் நகைகள் பூக்கள் எல்லாம் நினைத்த உடனே கல்பகவிருக்ஷம் அளவின்றி அளிக்கின்றது."

இப்படி அளகாபுரியின் அழகுகளை விவரித்துப் பிறகு தன் மாளிகையையும் மனைவியையும் குறித்து யக்ஷன் மேகத்திற்குப் புகலுகிறான்: "அந்த அளகாபுரியில் குபேரனுடைய அரண்மனைக்கு வடக்கு திசையில் என் மாளிகை இருக்கின்றது. அதன் தலை வாயிலில்

அழகு வான வில்லின் அழகை ஒத்திருக்கும். கையாலேயே பறிக்கக்கூடிய மலர்கள் நிறைந்து என் மனைவியால் மகனைப்போல் வளர்க்கப்பட்ட மந்தார மரம் அந்த மாளிகையின் அருகில் நிற்கும். மரகதப் படிக்கட்டுடன் கூடித் தங்கத்தாமரைகளால் பிரகாசிக்கும் ஒரு குளம் அங்கே இருக்கும். அங்கே விளையாடும் அன்னங்கள் மானச வாவியைக்கூட விரும்பா. என் மாளிகையின் அருகில் நீல மணிகளால் விளங்கும் ஒரு சிறிய குன்று இருக்கின்றது. அங்கே தங்க வாழைகள் அதிகமாக இருக்கும். மின்னலால் ஒளி வீசும் உன்னைப்பார்க்கும் பொழுதெல்லாம் அது என் நினைவுக்கு வருகின்றது. அசோகம், வகுலம், குரவகம் முதலிய செடிகள் அங்கே மிகவும் பிரகாசிக்கும். அவைகள் நடுவில் பச்சைக் கற்கள் பதித்த பளிங்கு மேடையில் தங்கக் கொம்பின் மேல் வளை வீட்டு மயில் உன்னைக் கண்டவுடன் அழகிய தோகையை விரித்து என் மனைவியின் பாட்டுக்கும் தாளத்துக்கும் ஒத்து நடனம் செய்யும். நான் அங்கே இல்லாததால் என் மாளிகை இரவில் இருக்கும் தாமரைபோலச் சோபை இழந்தாலும் நான் சொன்ன அடையாளங்களாலும் கதவில் சங்கநிதி பதுமநிதி சித்திரித்திருப்பதாலும் என் மாளிகையை நீ கண்டுகொள்வாய்."

பின்னும் மிக ஆதரவுடன் யக்ஷன் சொல்லலாயினான்: "அங்கே நீ யானைக் குட்டியைப்போன்ற உருவத்துடன் சென்று நான் சொல்லிய விளையாட்டுக்குன்றில் தங்கி உன் மின்னல் விழிகளால் என் மாளிகையின் உள்ளே நோக்குவாயாக. அங்கே மங்கையர்க்கரசியான

என் மனைவியைப் பார்ப்பாய். முத்துப்போன்ற பல்வரிசையுடனும், கோவைப் பழம் போன்ற உதடுடனும், சிறுத்த இடையுடனும், மானை விழியைப் பழித்த கண்களுடனும், மெல்லிய நடையுடனும் அவள் கூடியிருப்பாள். அவள் தான் என்னுயிர் நிலை. நான் பிரிந்திருப்பதால் தன் கணவனைப் பிரிந்த சக்கிரவாகப் பட்சி போலவும் பனிகாலத் தாமரை போலவும் வாடி வருந்தித் துயரடைந்திருப்பாள். என் பிரிவாற்றாமையால் துக்கித்துப் பெருமூச்செறிந்து உதடு வெளுத்துக் கையில் தலைவைத்திருந்தால் அவள் முகம் உன்னால் மறைக்கப்பட்ட சந்திரனைப்போல ஒளி மழுங்கி இருக்கும். நீ போயிருக்கும் பொழுது அவள் பூசை செய்து தோத்தரித்துக் கொண்டாவது, அவளைப் பிரிந்ததால் வருந்தி மெலிந்த என்னை நினைத்துச் சித்திரத்தில் எழுதிக்கொண்டாவது, கூட்டில் இருக்கும் இனிமையாகப் பேசும் கிளியைப் பார்த்து "உன் நாயகனை உனக்கு ஞாபகம் இருக்கிறதா? நீ அவருக்கு மிகவும் பிரியமல்லவா" என்று கேட்டுக் கொண்டாவது இருப்பாள். ஒரு வேளை வீணையை அழுக்கடைந்த புடவையைக் கட்டியிருக்கும் தன் மடியில் வைத்து என் பெயரைச் சேர்த்துத் தான் அமைத்துள்ள பாட்டுக்களைப் பாட ஆரம்பித்த பொழுது என்னை நினைத்து அழுவதால் பெருகும் கண்ணீரால் வீணைத் தந்திகள் நனையவே அடிக்கடி அவைகளைத் துடைத்தும் தான் துவக்கின பாட்டும் ராகமும் மறந்தும் துயரத்தில் ஆழ்ந்திருப்பாள். எனக்கு ஏற்பட்டிருக்கும் ஒரு வருஷப் பிரிவை பூக்கள் வைத்து நாளெண்ணிக்

கொண்டிருப்பாள். என்னை மனதில் நினைத்து நினைத்து நினைவின் இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருப்பாள். இப்படி பகற் பொழுதை அவள் ஒருவாறு போக்கினாலும் இரவில் அவள் நிலை வெகு பரிதாபமாக இருக்கும். அப்பொழுதுதான் நீ தயை செய்து தூது சென்று சாளரத் தருகில் நின்று துயரத்தை ஆற்ற வேண்டும். அவள் பெருமூச்செறிந்து கூந்தலலங்காரமின்றித் துயரத்தால் தூக்க மற்றிருப்பாள். நான் பிரிந்ததால் நான் முடிந்த கூந்தலை நான் திரும்பி வந்து அன்புடன் அவிழ்க்கும் வரையில் எண்ணெய் தடவிச் சீவி முடிந்து அலங்கரித்துக் கொள்ளமாட்டாள். ஆபரணங்களை அணியாமல் படுக்கையில் படுத்தும் படுக்க மனம் வராமல் வருந்தும் அவள் நிலை உன்னையும் கண்ணீரைப்போல நீரை வீழ்த்தும்படி செய்யும். நெஞ்சில் ஈரம் உள்ளவர்களுக்குக் கருணை இருக்குமல்லவா. நான் ஏதோ என் பெருமையை நினைத்துச் சொல்லுகிறேன் என்று எண்ணாதே. உனக்கு அவள் நிலை நான் சொல்லியபடி இருப்பது விளங்கும். மை இட்டாததும் அடிக்கடி மறைக்கும் தலை மயிரால் தடுக்கப்பட்ட சண்டைக்கண் பார்வையுடன் கூடியதும் நீ வந்தவுடன் தூக்கிப் பார்க்கப்பட்டதுமான அவளுடைய கண்ணானது தாமரையை அழகினால் ஒத்திருக்கும். ஒரு வேளை அவள் உறங்கி என்னைக் கனவில் கண்டு களித்திருக்கும் வேளையாக இருந்தால் அவளை இடிமுழக்கத்தால் விழிக்கச் செய்ய வேண்டாம். அவள் விழித்த பிறகு நீ அவளைப் பின் வருமாறு சொல்லும்படி வேண்டுகிறேன்.''

“நான் உன கணவனுடைய பிரிய நண்பன். பிரிந்த காதலர்களைச் சேர்த்து வைப்பதில்தான் எனக்கு இன்பம் அவன் சொல்லி யனுப்பிய செய்தியைக் கேள். அவன் ராமகிரியில் புண்ணியமான ஆசிரமத்தில் இருந்து கொண்டு உன் க்ஷேமத்தைக் கோரிக் கொண்டிருக்கிறான். மெய் வருந்தி மனந் தளர்ந்து வாடித் துயரத்தில் ஆழ்ந்து உன்னையே எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்கிறான். கொடிகளில் உன் மெய் அழகையும், மான் கண்களில் உன் கண்ணழகையும், திங்களில் உன் முகத்தழகையும், மயில் சோலையில் உன் கூந்தலழகையும், ஆற்றின் சிறு அலைகளில் உன் புருவ அழகையும் தேடிப்பார்த்தும் ஒற்றுமையைக காணாமல் அவன் வருந்துகிறான். காவிக் கற்களால் உன் அழகிய உருவத்தை எழுத முயற்சித்தும் தடுக்கும் கண்ணீரால் சித்திரத்தைப் பூர்த்தி செய்ய முடியாமல் அவன் வாடி நிற்கிறான். கனவுகளில் உன்னைக் கண்டு தழுவ முயற்சித்துக் கைகளை வீசும் பொழுது அவன் பரிதாப நிலையைக் கண்ட வனதேவதைகளும் வருந்துகிறார்கள். இமய மலையிலிருந்து தென் திசையை நோக்கி வீசும் காற்று உன்னைத் தொட்டு வந்திருக்குமோ என்ற ஆசையால் அதை அதிக ஆசையுடன் அனுபவிக்கிறான் பிரிந்த நாட்களெல்லாம் குறுகி விரைவாகச் செல்லாதா என்று கோருகிறான். நீ மிகவும் வருந்தாதே. துன்பமும் இன்பமும் யாருக்குத்தான் நித்தியம்? அவை சகடக்கால் போல வரும். இன்னும் நான்கு மாதங்களானவுடன் சாபம் முடிந்து உன்னிடம் வந்து எண்ணியெண்ணி இருக்கும்

எண்ணிறந்த இன்பமடைவன். பிரிவால் ஆசை குறையும் என்பது தவறு. பிரிவால் ஆசை மலைபோல வளருகின்றது."

"இப்படி அவளிடம் என்னுடைய வார்த்தைகளைத் தெரிவித்துப் பிறகு விடை பெற்று இவ்விடம் வந்து அவள் சொல்லிய மறுமொழிகளைத் தெரிவித்து எனக்கு நீ உயிர்ப்பிச்சை தரவேண்டும். நீ மௌனமாகவே சாதகப் பக்ஷிகளுக்கு நீர் அளிப்பதால் நீ மௌனமாயிருந்தாலும் உன் மௌனமே சம்மதமென்று நான் கருதுகிறேன். பிரியமான பதிலைக்காட்டிலும் பிரியமான உபகாரமே பெரிது. என் வேண்டுகோளுக்கிணங்கியாவது, அன்பாலாவது, கருணையாலாவது இந்த உபகாரத்தை எனக்குச்செய்து நீ உன் மனைவியான மின்னலுடன் எப்பொழுதும் பிரிவின்றிக் கூடி ஆனந்தமாக இருக்கும்படி ஈசனை வேண்டுகிறேன்."

## அத்யாயம் 4.

## ரகு வம்சம்.

### 1. முகவுரை.

இது காளிதாஸன் காவ்ய முறைகளில் நன்றாகத் தேர்ச்சியடைந்து கைதேர்ந்த பிறகு எழுதிய மகா காவ்யம். உலகானுபவமும் அரசியல் முறைகளும் நாட்டின் சிறப்பும் நன்குணர்ந்த பிறகு எழுதப்பெற்றது. அதை நன்றாகப் படித்தால் நம்முடைய புண்ணிய தேசத்தின் பெருமையும், நம்முடைய தர்ம தத்துவங்களும் நன்கு விளங்கும். அதில் இராமபிரான் சரித்திரமே நடுநாயகமாக இருக்கப்பெற்றது. இராமாயணக் கதை மிகவும் நன்றாகத் தெரிந்த விஷயமானபடியால் அதில் காளிதாஸன் சாதுரியத்தைத் துலக்கிக்காட்டும் இடங்களைமட்டும் விவரித்து ஏனைய இடங்களைச் சுருங்கச் சொல்லுகிறேன். இக்காவ்யத்தின் சிறப்புகள் செய்யுட்களின் பாங்கும் அணிகளின் அழகுமேயாகும். நம்முடைய தேசத்தில் சம்ஸ்கிருத பாஷையைப் படிப்பவர்கள் இக்காவ்யத்தை முதலில் படிப்பது வழக்கம். அது எளிய நடையில் எழுதப்பட்டிருந்தாலும் உயர்ந்த அழகும் இனிமையும் பெருமையும் வாய்ந்துள்ளது.

காளிதாஸனுடைய தெய்வபக்தியும் வணக்கமும் பெருமையும் அவன் இக்காவ்யத்திற்கு முகவுரையாக எழுதியிருப்பதிலேயே நன்றாக விளங்குகின்றன.

"சொல்லும் பொருளும் போல் இடைவிடாத ஒற்றுமையுள்ளவும் உலகுக்கெல்லாம் தாய்தந்தையுமான பார்வதீ பரமேச்வரர்களைச் சொற்பொலிவும் பொருளழகும் அடைவதற்காக வணங்குகின்றேன். சூர்ய வம்சம் எங்கே, என்னுடைய தாழ்மையான அறிவு எங்கே. நான் ஒரு சிறு தோணியால் கடலைத் தாண்ட முயற்சிப்பவன் போலிருக்கின்றேன். உயர்வுள்ளவன் எட்டக்கூடிய உயர்ந்த கொம்பில் பழுத்துத் தொங்கும் கனியை விரும்பும் குள்ளனைப்போல எல்லோராலும் இகழக்கூடிய நிலையில் இருக்கிறேன். ஆனால் அறிவின் கூர்மை இல்லாவிட்டாலும் வயிரமணியால் துளைக்கப்பட்ட ரத்தினத்தில் நூலும் செல்வதுபோல் வால்மீகி சொன்ன கதையில் எனக்கும் போக்கு இருக்கும். ஆகையால் ரகுவம்ச மன்னர்களின் சரித்திரத்தைச் சொல்லுகிறேன். அவர்கள் பிறந்தது முதலே தூய்மை வாய்ந்தவர்கள்; முயற்சியின் பயனை அடையும்வரையில் கருமமே கண்ணானவர்கள்; கடலை ஆடையாக உடுத்த பூவுலகை ஒரு குடையின் கீழ் ஆண்டவர்கள்; தேரை ஆகாயமார்க்கமாகச் செலுத்திச் சுவர்க்கம் சென்று வரும் திறமையுள்ளவர்கள்; வேள்விகளைச் சரிவரச் செய்தவர்கள்; ஒப்புயர்வில்லாத கொடையாளிகள்; நியாயந் தவறாத செங்கோல் மன்னர்கள்; நெறி தவறாமல் முறைப்படி ஏற்பட்ட தூக்கமும் விழிப்புமுள்ளவர்கள். அவர்கள் பொக்கிஷத்திலுள்ள தனமெல்லாம் ஏழைகளுக்களிப்பதற்கேயாகும். சத்தியம் தவறாமலிருப்பதற்காக மிதமாகப் பேசுகிறவர்கள். அவர்கள் வெற்றியை விரும்புவது சுத்தமான

புகழை அடையவே யொழியப் போகத்திற்காகவன்று. அவர்கள் மணஞ்செய்துகொள்ளுவது மகனைப் பெற்றுக் கடமைகளைச் செலுத்துவதற்கேயாகும். அவர்கள் இளமையில் நூற்களைப் பயின்று, யௌவனத்தில் போகங்களை அநுபவித்து, முதுமையில் முனிவர்களாக இருந்து, முடிவில் யோகத்தால் உயிர் துறந்து வீட்டை அடையும் தன்மையுள்ள பெரியோர்கள். எனக்கு சொற்றிறம் இல்லாவிட்டாலும் அவர்களுடைய குணங்கள் என்னைத் தூண்டுகின்றபடியால் அவர்களுடைய திவ்விய சரித்திரத்தை உரைக்கின்றேன். அதை அறிவாளர்கள் அனைவரும் செவி கொடுத்துக் கேட்கவேண்டும். தங்கத்தின் மாற்று அக்கினியிலன்றோ அறிய முடியும்?"

## 2. திலீப மகாராஜன் சரித்திரம்.

மனு வம்சத்திற் பிறந்த திலீபன் விரிந்த மார்பும் நீண்ட கையும் திரண்ட தோளும் உள்ள மகா புருஷன். அவன் அரசியலே உருவெடுத்து வந்தவன்போலச் செங்கோல் நடத்திவந்தான். அவன் சக்தியாலும்ஒளியாலும் மேருமலைபோல் விளங்கினான். உருவத்திற்குத் தகுந்த அறிவும், அறிவுக்குத் தகுந்த ஆராய்ச்சியும், ஆராய்ச்சிக்குத் தகுந்த முயற்சியும், முயற்சிக்குத் தகுந்த தேர்ச்சியும் பொருந்தியவன். அவனுடைய அரசாட்சியின் காலத்தில் ஜனங்கள் ஒரு மயிரிழைகூட மனு முறையினின்று வழுவாதிருக்கும்படி அவன் அவர்களைப் பாது காத்து வந்தான். கதிரவன் நீரிலிருந்து நீராவியை எடுத்து அதையேதூய்மை வாய்ந்தநீராக அளிப்பதுபோல்,

அந்த திலீபனும் தன் குடிகளிடமிருந்து வசூலித்த வரியை அவர்களுடைய நன்மைக்காகவே செலவிட்டு வந்தான். அவனுக்குப் பெரிய சேனை இருந்தபோதி லும் அவனுடைய அறிவும் வில்லுமே உலகத்தைக் காத்தன. அவன் பேராசையை ஒழித்துத் தர்ம மூர்த்தியாக விளங்கினான். கல்வி யளிப்பதாலும், தான் பாதுகாத்தலாலும், தன் நியாயத்தாலும் குடிகளுக்கு அவனே தந்தையாக இருந்தான். அவனுடைய நாட் டில் அவனுடைய தர்மத்தின் பெருமையால் மாதம் மும்மாரி பொழிந்துவந்தது.

அவனுடைய பட்ட மகிஷிக்குச் சுதட்சிணாதேவி என்று பெயர். வெகுகாலம் அவர்களுக்கு மக்கட்பேறு இல்லாததால் அவர்கள் அக்குறையைத் தீர்த்துக் கொள்ள வசிஷ்ட மகரிஷியின் ஆசிரமம் சென்றார்கள். போகும் வழியில் குயில்கள் பாடுவதையும், மயில்கள் ஆடுவதையும், மான்கள் விளையாடுவதையும் பார்த்துக் கொண்டே அந்தப் புண்ணியமான தபோவனஞ் சென் றார்கள். அப்பொழுது மாலைவேளை. ரிஷிகள் சமித்துக் களையும் தர்ப்பைகளையும் எடுத்துக்கொண்டு ஆசிரமத் தை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள். பர்ணசாலை களின் வாயில்களில் தபசிகளின் மனைவிகள் மான்களு க்கு வனநெற்களைக் கொடுத்து உண்பித்தார்கள். தபசிப் பெண்கள் மரங்களுக்கும் செடிகளுக்கும் நீர் வார்த்துக் கொண்டிருந்தார்கள்.

உடனே அரசனும் அரசியும் தேரைவிட்டு இறங்கி வசிஷ்டரையும் அருந்ததி தேவியாரையும் வணங்கினா

கள். அவரும் அவனுக்கு ஆசிகூறி நல்வரவேற்றினர். அரசன் அவரை நோக்கி, "முனிவர்கோனே! தங்கள் கிருபையால் எங்களுக்கு ஒன்றும் குறைவில்லை. எனக்கு வரக்கூடிய இடையூறுகளெல்லாம் தங்கள் அனுக்கிரகத்தால் கதிரவன்முன் பனிபோல மறைகின்றன. தங்கள் வேள்விகளின் பெருமையால் மாதம் மும்மாரி பெய்கின்றது. குடிகள் எல்லோரும் நெறி தவறாமலும் சுகமாகவும் இருக்கிறார்கள். ஆனால் மக்கட்பேறு எனக்கு இல்லையே என்ற குறைமட்டும் எனக்கு இருக்கின்றது. அதனால் என் முன்னோர்களும் அவர்களுக்கு எள்ளும் நீரும் இறைக்கக்கூட வம்சத்தில் மகன் இல்லையே என்று வருந்துகின்றார்கள். மண்ணுலகிலும் பொன்னுலகிலும் மகனாலல்லவா இன்பமடைய வேண்டும். ஆகையால் எந்தப் பாபம் மக்கட் பேறடைவதற்கு இடையூறாக இருக்கின்றதோ அதைத் தீர்த்தருளல் வேண்டும்" என்று வணங்கிப் பிரார்த்தித்தான். வசிஷ்டரும் யோக நிஷ்டையில் இடையூறு என்னவென்று அறிந்து அரசனை நோக்கி "முன் ஒருநாள் நீ சுவர்க்கத்திலிருந்து பூமிக்கு விரைவாகப் போகும்பொழுது வழியிலிருந்த காமதேனுவை வலம் வாராமல் சென்றாய். அதன் பயனாகவே உனக்கு மக்கட் பேறின்மை நேர்ந்தது. அதன் கன்றான இந்த நந்தினியை நீ சிலகாலம் மேய்த்து அரசியும் நீயும் பணிவிடை செய்தால் அந்த இடையூறு நீங்கிவிடும்" என்று பகர்ந்தார்.

உடனே அரசனும் அரசியும் அவர் சொற்படியே செய்தார்கள். அப்பசு சிவப்பு நிறத்தில் வெண்மை கலந்த அழகு வாய்ந்த திருமேனியுடன் கூடிய தெய்வ

லோகப்பசு. அதன் குளம்புகளால் எழுந்தூசிகள் பட்டாலே பாபங்கள் விலகிப்போகும். அத்தகைய பசுவைக் காலையில் நெற்றியில் குங்குமமிட்டுக் கழுத்தில் மாலைபோட்டுப் பூசித்து அரசி வெளியில் அனுப்பு வாள். அரசன் அதை அழைத்துச் சென்று அதை மேய்த்துப் பசும் புற்களை உண்ணச் செய்து தூய்மை யான நீரை அருந்தச்செய்து நிழலில் நிறுத்தி விடாய் தீர்த்து மனக்களிப்புடன் மாலை வேளையில் அழைத்து வருவான். அப்பொழுது தேவியானவள் அதை எதிர் கொண்டு சென்று வலம் வந்து வணங்கிப் பூசித்துத் தொழுவில் கன்றுடன் கட்டுவாள். இப்படி வெகுகாலம் சென்றது. அப்பசுவும் அவர்களிடத்தில் தன் கன்றின்மேல் உள்ள அன்பைக்காட்டிலும் அதிக அன்புடன் கூடியிருந்தது.

ஒரு நாள் அதை மேய்த்துக் கொண்டிருக்கும் பொழுது ஒரு சிங்கம் ஒரு குகையிலிருந்து அதன் மேல் பாய்ந்தது. அதன் பேரொலியானது காட்டில் இடிமுழக்கம் போலிருந்தது. உடனே அரசன் சினந்து வில்லை வளைத்து நாணேற்றி அம்பைத் தொடுத்தான். அம்பை விடமுடியவில்லை. சித்திரத் தில் எழுதியவன்போல அவன் பிரமித்து நின்றான். மந்திரத்தால் கட்டுப்பட்ட சர்ப்பம்போல அவன் இருந்ததால் அவனால் ஒன்றும்செய்ய முடியவில்லை. அப்பொழுது அச்சிங்கம், "உன்னால் எனக்குத் தீங்கு செய்ய முடியாது நான் பரமசிவனுடைய வேலைக்கார னை கும்போதரன். இந்த தேவதாரு மரம் பார்வதீ தேவியே வளர்த்தது. கந்தபிரானிடத்தில் அவளுக்கு

எவ்வளவு அன்போ அவ்வளவு அன்பு இதனிடத்தி லும் அவளுக்கு உண்டு. ஆகையால் பரமசிவன் என் னைச் சிங்க உருவமாக இருந்து அதைப் பாதுகாக்கும் படியும் இங்கேவரும் விலங்குகளை யெல்லாம் உண்ணும் படியும் கட்டளை யிட்டிருக்கின்றார். ஆகையால் நீ திரும்பிப்போய்விடு. உன்னுடைய அம்புக்கும் ஆண்மை க்கும் இங்கே இடமில்லை. தெய்வத்தன்மை வாய்ந்தவர் களிடம் உன்னுடைய சக்தி பயன்படாவிட்டால் இழி வில்லை" என்று மொழிந்தது. உடனே அரசன் வேறு வழி ஒன்றும் இல்லாமல் அச்சிங்கத்தை நோக்கி, "இந்தப் பசு என் குருவின் பசு. அது எனக்கு என் உயிரைக் காட்டிலும் பிரியமானது. நீ என்னை உண்டு அதை விட்டுவிடு" என்று வணங்கிப் பிரார்த் தித்தான். அப்பொழுது சிங்கம், "உலகத்தை ஒரு குடையின் கீழ் ஆண்டு உலகத்தை இன்புறச் செய்யும் உயர்ந்த நிலையை ஒரு ஆவின் அன்புக்காகத் துறக்க லாமா? உன் குரு இப்பசுவின் விஷயமாகக் கோபம் அடைவாராயினும் இதைப்போன்ற கோடிப் பசுக் களை அவருக்கு நீ அளிக்கக் கூடும்" என்று புத்தி மதி கூறிற்று. உடனே அரசன் "தீங்கிலிருந்து காப்பாற்று வதன்றோ அரசனுக்கு அழகு. அந்த முக்கியமான கட மையைச் செய்யாத அரசியலால் என்ன பயன்? ஆகை யால் என்னைக்கொன்று தின்றுஇதை விட்டுவிடு" என்று மறுபடியும் வணங்கி வேண்டினன். உடனே ஆகாயத்தி லிருந்து பூமாரி பெய்தது. சிங்கத்தைக் காணவில்லை. நந்தினி அவனைப் பார்த்து "உன் உண்மையை அறிந்து மகிழ்ந்தேன். வசிஷ்டர் மகிமையால் என்னிடத்தில்

யமனும் அணுகமுடியாது. உனக்கு அவரிடத்தில் இருக்கும் பக்தியையும், என்னிடம் இருக்கும் மெய்யன்பையுங் கண்டு களித்தேன். உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று வினவிற்று. அரசன் தன் கோரிக்கையை அறிவிக்க நந்தனி அவனுக்கும் அரசிக்கும் மக்கட்பேறு உண்டாகும்படி அனுக்கிரகம் செய்தது.

பிறகு குருவிடம் விடைபெற்று அரசனும் அரசியும் தங்கள் ஊருக்குத் திரும்பி வந்தார்கள். அவர்களுக்கு எல்லா லக்ஷணமும் பொருந்திய ஒரு அழகிய குமாரன் பிறந்தான். அரசன் மிகவும் மனமகிழ்ந்து அனேக தானங்கள் வழங்கி அவனுக்கு ரகு என்று பெயர் வைத்தான். அந்தக் குழந்தை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து தாய்தந்தையர் மனதைக் களிப்பித்தான். அவன் எல்லா நூற்களையும் கற்று வில்வித்தையிற் சிறந்த தேர்ச்சி யடைந்த பிறகு அரசன் அவனுக்கு விவாகம் செய்வித்தான். அவனுடைய உதவியால் தொண்ணூற்றொன்பது அச்வமேத யாகங்களைத் திலீப மகாராஜன் செய்தான். பிறகு நூறாவது அச்வமேத யாகத்துக்கு முயற்சிசெய்து வெள்ளைக்குதிரையை ரகுவுடன் அனுப்பினான். நூறு அச்வமேத யாகஞ் செய்தவன் இந்திரபட்டம் அடைய வேண்டியவனானதால் இந்திரன் பயந்து அக்குதிரையை ஒளித்துவிட்டான். பிறகு ரகுவுக்கும் இந்திரனுக்கும் பெரிய போர் நடந்தது. இந்திரன் அவனை வஜ்ராயுதத்தால் அடித்தும் அது அவனுக்கு ஒரு தீங்கும் செய்யவில்லை. இந்திரன் வியந்து "நீ மகாபுருஷன். குதிரையைத் தவிர வேறு எதை வேண்டுமானாலும் கேள்" என்றான்.

அப்பொழுது ரகு அவனை நோக்கி, "இந்த யாகத்தின் பலனை என் தந்தைக்கு வரமாக அளிக்கவேண்டும்" என்றான். இந்திரனும் அப்படியே அனுக்கிரகம் செய்தான்.

சிறிது காலமான பிறகு திலீபன் ரகுவுக்குப் பட்டங் கட்டித் தான் தபோவனத்தை யடைந்து தவஞ் செய்து பரமபத மெய்தினான்.

## 3. ரகு மகாராஜன் சரித்திரம்.

ரகுமகாராஜன் திலீபன் அளித்த செங்கோலைக் கதிரவன் அளித்த ஒளியை அக்கினி தாங்குவதுபோல் தாங்கி விளங்கினான். உலகையெல்லாம் ஒரு குடையின் கீழாக ஆண்டான். குடிகள் மனதை யெல்லாம் தன் அரசாட்சியாலும் அன்பாலும் கவர்ந்து கொண்டான். எல்லா ஜனங்களும் அவனைப் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

சிங்காதனமேறிக் கொஞ்சகாலமான பின் ரகு திக்விஜயம் செய்யக் கிளம்பினான். அவன் போகும் வழிகளில் காடுகளை அழித்து ஆறுகளில் பாலங்களைக்கட்டிப் பாலைவனங்களில் குளங்கள் வெட்டி உலகத்தை இன்புறச் செய்தான். கிழக்கு சமுத்திரம் வரை சென்று வழியில் உள்ளநாடுகளையெல்லாம்வென்றான். சும்மதேசம், வங்கதேசம், கலிங்கதேசம் முதலிய நாடுகளை வென்று தென்றிசையை நோக்கிச் சென்று, காவேரி ஆறுவரையிலுள்ள நாடுகளை ஜெயித்துப் பாண்டிய நாட்டை வென்று, தென் சமுத்திரத்தைத் தரிசித்துப் பின் கேரளநாட்டைக் கீழ்ப்படுத்தி, பிறகு பாரசீகர்களை

வென்று, அப்பால் ஹூணர்களையும் காம்போஜர்களையுந் தோல்வியுறச்செய்து, காமரூப தேசத்தை வென்று ஜயலக்ஷ்மியுடன் விளங்கினன்.

பிறகு அவன் விச்வஜித் என்ற மகா வேள்வியை ஆரம்பித்து நடத்தினன். அது உலகத்தை முற்றும் வென்ற அரசர்கள் செய்யவேண்டிய வேள்வி. அதில் அவன் தன்னுடைய எல்லா சொத்தையும் தக்ஷிணையாகக் கொடுத்தான். அச்சமயத்தில் வரதந்து ரிஷியின் மாணாக்கரான கௌத்ஸர் குரு தக்ஷிணை அடைய வேண்டியதற்காக அவனை அடைந்தார். கையில் மண் பாத்திரத்தில் நீர் வைத்துக்கொண்டு அவருக்குக் காலலம்ப நீர் கொடுத்து உபசரித்தான். எல்லா சொத்தையும் வேள்வியில் தக்ஷிணையாகக் கொடுத்துவிட்டதால் அவன் கையில் பொன்னே இல்லை. கௌத்ஸர் அவனைக் கண்டு, "நான் உன்னை அண்டி குருதக்ஷிணை வாங்கிச் செல்ல வந்தேன். ஆனால் இப்பொழுது உன்னை வருத்துவது தகுதியன்றென்று அறிந்துகொண்டேன். நான் வேறிடஞ் சென்று என் கோரிக்கையைப் பூர்த்தி செய்து கொள்ளுகிறேன்" என்றார். அப்பொழுது ரகுமகாராஜன் அவரை இரண்டு மூன்று தினங்கள் காத்திருக்கும்படி மன்றாடி வேண்டினன். அன்றிரவே குபேரனை நோக்கிச் சென்று அவனை வென்று வேண்டிய திரவியங் கொண்டு வரப் புறப்படுவதாக நிச்சயித்தான். அச்சமயத்திலேயே குபேரன் அனுக்கிரகத்தால் அரசனது பொக்கிஷம் நிறைந்தது. அதை யறிந்த அரசன் களித்து கௌத்ஸருக்கு வேண்டிய திரவியம் அளித்தான். அவர் ஆசிர்வாத மகிமையால் அவனுக்கு ஒரு

அழகிய குமாரன் பிறந்தான். அவனுக்கு அரசன் அஜன் என்று பெயர் வைத்தான்.

அஜன் எல்லா வித்தைகளையுங் கற்று விளங்கினான். அப்பொழுது விதர்ப்ப தேசத்தில் அரச குமாரியான இந்துமதியின் சுயம்வரம் நேர்ந்தது. அதற்கு அஜன் சேனைகளுடன் சென்றான் போகும் வழியில் நர்மதையின் தீரத்தில் தங்கினபொழுது ஒரு பெரிய யானை அவ்விடம் புகுந்து கோலாகலம் செய்யவே அதை அவன் ஒரே பாணத்தால் வீழ்த்தினான் உடனே ப்ரியம்வதன் என்ற ஒரு கந்தர்வன் அந்த யானையின் உடலிலிருந்து புறப்பட்டு விமான மேறினான். அவன் அஜனை நோக்கி "நான் மதங்க ரிஷியின் சாபத்தால் காட்டானையானேன். இப்பொழுது உன்னால் விடுவிக்கப்பட்டுச் சுய ரூபத்தை அடைந்தேன். உனக்கு சம்மோகனம் என்ற அஸ்திரத்தை உபதேசம் செய்கிறேன்" என்று சொல்லி அந்த அருமையான வித்தையை அவனுக்கு உபதேசஞ் செய்து மறைந்தான்.

பிறகு அஜனும் மற்ற மன்னவர்களும் சுயம்வரத்தைக் கருதி விதர்ப்ப தேச மடைந்தார்கள். சுயம்வர தினமன்று கொலுமண்டபத்தில் எல்லோரும் அமர்ந்திருக்க இந்துமதி தேவி மணக்கோலத்துடன் பட்டாடை உடுத்து நகைகள் பூண்டு ரதிதேவிபோல் பல்லக்கில்வந்து இறங்கிக் கொலு மண்டபத்தில் தோழிகளுடன் வந்தாள். அவளுடைய தோழி ஒவ்வொரு அரசனையும் சுட்டிக்காட்டி அவன் நாட்டையும் பெருமையையும் வர்ணித்துக் கொண்டே சென்றாள். இந்துமதி தேவியும் ஒவ்வொரு அரசனையும்

தாண்டிப் போய்க்கொண்டேயிருந்தாள். ஒரு தெரு வில் இரண்டுபக்கமும் மாடமாளிகை கூட கோபுரங்கள் இருக்க ஒருவன் தீபத்தை எடுத்துச் சென்றால் எப்ப டித் தீபம் நெருங்கியபொழுது வீடுகள் விளங்கித் தீபம் சென்றவுடன் ஒளி மழுங்குமோ அப்படி அந்தத் தங்கதீபம் போன்ற இந்துமதி அந்த மன்னவர் வரிசை களின் நடுவில் செல்லச்செல்ல எந்த மன்னவன் முன் அவள் வந்தனளோ அவன் மனமகிழ்ந்து விளங்கி அவள் சென்றவுடன் அவன் ஒளிமழுங்கினான். அவள் அஜராஜகுமாரனிடம் நெருங்கி அவன் யாரென்று அறிந் து அவனை நோக்கி அவனது சிங்கார உருவத்தையும் கம்பீரத்தையும் கண்டு அவனுக்கு மாலையிட்டாள். ஊர் ஜனங்கள் எல்லோரும் கண்டு களித்தார்கள். நிலா திங் களைச் சார்வதுபோலும் கங்காதேவி சமுத்திர ராஜனை அடைவதுபோலும் இச்சேர்த்தியே அழகாகவும் பொ ருத்தமாகவும் இருக்கிறதென்று கொண்டாடினார்கள்.

பிறகு அஜனுக்கும் இந்துமதிதேவிக்கும் மணம் நடந் தது. மணம் முடிந்தபின் அவர்கள் தேரிலமர்ந்து தங்க ளுடைய கோசலதேசம்வரும் வழியில்சுயம்வரத்திற்கு வந்திருந்த மற்ற மன்னவர்கள் இந்துமதி அஜனைக் கணவனாக ஏற்றுக் கொண்டதைக் கண்டு சினந்து யுத்த கோலமாக விரைந்து வந்து அவனை வளைத்துக்கொண் டார்கள். அஜன் அவர்களுடன் ஆச்சரியமான போர் புரிந்தான். அவன் முடிவில் ப்ரியம்வதன் அளித்த சம் மோகனாஸ்திரத்தை ஏவி அவர்களைப் பிரமித்து கீழே விழும்படிசெய்து இந்துமதி தேவியுடன் அயோத்தியை அடைந்தான்.

பிறகு ரகு மகாராஜன் அஜனுக்குப் பட்டம் சூட்டினான். அவன் துறவறம் பூண்டு காட்டுக்குச் செல்ல எண்ணினான். அஜன் அவனைச் சிலகாலமாவது தன்னுடன்கூட இருக்க வேண்டவே, ரகுவும் அதற்கிணங்கிச் சிறிது காலம் அவனோடு இருந்தான். ஆனால் உரித்த சட்டையை விரும்பாது வெறுக்கும் பாம்பைப் போலவே ரகு அரசாட்சியை விரும்பவில்லை. அஜன் சத்துருக்களை வென்றான், ரகு ஆசை முதலான உள்ளிருக்கும் பகைவர்களை வென்றான். அஜன் மந்திரிகளுடன் காலங்கழித்தான், ரகு யோகிகளுடன் காலங்கழித்தான். அஜன் சிங்காதனத்திலமர்ந்தான், ரகு தர்ப்பாசனத்திலமர்ந்தான். அஜன் பூமியை ஆண்டான், ரகு தன்னையே ஆண்டான். இப்படிச் சில காலஞ் சென்றபின் ரகு பரமபதமடைந்தான்.

## 4. அஜ மகாராஜன் சரித்திரம்.

பிறகு அஜன் செங்கோல் செலுத்தி மனு நீதி தவறாமல் ஆண்டுவந்தான். ஒருநாள் தோட்டத்தில் இந்துமதி தேவியுடன் அவன் களித்திருக்கும்பொழுது ஆகாயத்தில் நாரதர் வீணையெடுத்துக்கொண்டு கோகர்ணத்தில் பரமசிவனைத் தரிசனஞ் செய்யச் சென்றார். அப்பொழுது அந்த வீணையிலிருந்த பூமாலையானது நழுவிக் கீழே இருந்த இந்துமதி தேவியின் மேல் விழுந்தது. உடனே அவள் மூர்ச்சையடைந்து மரித்தாள். தாங்கக் கூடாத துன்பத்தை அடைந்த அரசன் வருந்தித் துக்கத்திலாழ்ந்து "ஐயோ! இப்படியுமுண்டா? பூவுங் கொல்லுமோ. பனிபட்ட தாமரைபோல் வாடி விட்டனளே. இந்த மாலையை நான் அணிந்தால் அது என்னையும்

தொன்று அவளுடன் பரலோகம் அனுப்புமோ வென்று எண்ணி அதை நானணிந்தும் அது என்னை ஒன்று ஞ் செய்யவில்லையே. என் பாபமே இந்த மாலைபோல் உருவமெடுத்து இவள்மேல் இடிபோல விழுந்ததோ. ஒரு வேளை என்னுடைய அன்பு மெய்யன்பு அன்றென்று எண்ணித்தான் அவள் பொன்னுலகஞ் சென்றனளோ. ஆனால்நானோ உடல் பொருள் ஆவி யாவும் அவளுடைய தென்றெண்ணியிருந்தேனே. இன்றுடன் என்னுடைய இன்பமும், துணிவும், அமைதியும் அவளுடனேயே இறந்தன" என்று புலம்பினான். பிறகு சடங்குகள் யாவற்றையும் நிறைவேற்றித் துயரத்தில் ஆழ்ந்திருந்தான். வசிஷ்டர் தன் மாணாக்கரை அனுப்பி அவனைத் தேற்றினார். "மன்னவனே! நீ உன் துயரத்தைப் பொறுத்துக் கொள்ளவேண்டும். முன்னொருகாலம் திருணபிந்து என்ற முனிவர் தவஞ் செய்யும்பொழுது இந்திரனால் அனுப்பப்பட்ட ஒரு தெய்வப் பெண் அவரது தவத்தைக் கலைக்க முயன்றாள். அவர் சினந்து அவளை மானிடப் பெண்ணாகும்படி சபித்துவிட்டார். அவள் அவர் காலில் விழுந்து தன் பிழையைப் பொறுத்தருளும்படி அவரைப் பிரார்த்தித்தாள் அவரும் அவள் தேவலோக மலர்களைக் கண்ட வுடன் தேவலோகம் அடையும்படி அனுக்கிரஹித்தார். அதனால்தான் அவள் பொன்னுலக மடைந்தாள்" என்று தெரிவித்தார். முக்காலமறிந்த முனிவர் மொழியைக் கேட்ட மன்னவன் கொஞ்சம் தேறுதல் அடைந்தான். இப்படியே அவன் எட்டு வருஷங்களைக் கழித்தான். ஆனாலும் அவன் மனத்தில் அடங்காத துயரம் அவனுக்கு அதிகமான

பிணியை உண்டாக்கியது. அவனும் தான் இறந்து தன் தேவியை யடைய ஆசை கொண்டவனாய்ச் சிலகாலம் வாழ்ந்திருந்து உயிர் துறந்தான்.

### 5. தசரத மகாராஜன் சரித்திரம்.

அவனுக்குப் பிறகு அவன் மகனான தசரதர் வெகு காலம் நீதியோடு அரசாட்சி செய்தார். அவர் வேட்டை, சூது, கட்குடி முதலான தீய ஒழுக்கமே இல்லாமல் நல்லொழுக்கம வாய்ந்த புண்ணிய புருஷர். ஈகையில் சிறந்தவர். பொய், கொடுமை யொழிந்த வாய்மொழிவாய்ந்தவர். கடலையாடையாக வுடுத்த பூமியை அவர் முழுவதும் வென்று ஒரு குடையின்கீழ் ஆண்டார். இந்திரனுக்கு உதவி புரிந்து அவனால் ஆதரிக்கப்பட்டார். அவர் கௌஸல்யை, சுமித்திரை, கைகேயி என்று மூன்று இராணிகளுடன் விளங்கினார். ஆனால் அவர் தனக்கு மக்கட்பேறு இல்லையே என்று அயர்ப்பட்டிருந்தார்.

ஒருநாள் அவர் குடிகளின் வேண்டுகோளுக்கிரங்கி வேட்டையாடச் சென்றபொழுது யானை நீருண்ணும் சத்தத்தைக் கேட்டு அச்சத்தம் வந்த வழியிலேயே அம்பை எய்தார். அது அங்கே தண்ணீர் மொண்டு கொண்டிருந்த ஒரு சிறுவன்மீது பாய்ந்தது. உடனே அவன் காயமடைந்து கோவென்றலறிக் கீழேவிழுந்தான். அவர் ஓடிச்சென்று பார்த்துத் திடுக்கிட்டார். அவன் மரிக்கும்பொழுது அவரைப் பார்த்து "நீர் செய்தது என் பாபத்தாலேயே நேர்ந்தது. நீர் கெட்ட எண்ணத்துடன் செய்யவில்லை, என் தாய் தந்தைகள் குருடர்கள். நான் காலத்தில் செல்லாவிட்டால் அவர்கள் வருந்துவார்கள். அவர்களிடம் என்னைச் சேர்ப்பிக்கவே

ண்டும்” என்று வேண்டினான். அவர் மிகவும் துக்கப்பட்டு அப்படியே செய்ய அவன் தந்தை கோவென்றழுது தசரதருக்கு முன் நின்று “என்போல் நீரும் மகனைப் பிரிந்து மரிக்கவேண்டும்” என்று சபித்தார். வயலை எரித்த நெருப்புப் பயிர் வளர்ச்சியை விருத்தி செய்வது போல் அவர் சாபமும் மக்களில்லாத அரசனுக்கு அனுக்கிரகமாகவே முடிந்தது. உடனே அவர்களிருவரும் தசரதரை நோக்கி “எங்களையும் மகனுடனே எரித்து விடுங்கள்” என்று வேண்டி உயிர் துறந்தார்கள். அவரும் அப்படியே செய்து வருத்தத்துடன் அயோத்தியை அடைந்தார்.

இதுமுதல் ராமாயணக் கதையாயிருப்பதாலும் அது எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்ததானபடியாலும் அதை விவரமாகச் சொன்னால் இந்த நூல் மிகவும் விரிந்துபோகுமாகையாலும் அதைச் சுருக்கமாகவே வரைகின்றேன். அச்சமயத்தில் தேவர்கள் திருப்பாற் கடலை நோக்கிச் சென்றார்கள். அங்கே சேஷசயனத்திற் திருமகளுடன் விளங்கும் நாராயணனைக்கண்டுகளித்து வணங்கினார்கள். “மும்மூர்த்திகளாக விளங்கும் ஆதி மூலப்பொருளே! எல்லாமறிந்து எல்லாம் வல்ல எங்கும் நிறைந்த பரம்பொருளே! உன்னையடையும் வழிகள் வெவ்வேறாக இருந்தாலும் அவைகள் உன்னிடமே கொண்டு சேர்க்கின்றன. உன் அன்பே உன் அவதாரங்களுக்குக் காரணமன்றோ? எங்களைக் காப்பாற்றவேண்டும். அபயம், அபயம்” என்று முறையிட்டார்கள். பகவான் மனமிரங்கி “உங்களுக்கு ராவணனால் ஏற்பட்ட துயரத்தை நான் தீர்த்துவைக்கிறேன். அவன்

பிரமனிடத்தில் வரங்களைப் பெற்றான். அவன் தேவர்களிடத்திலிருந்து மரணம் கூடாது என்று வரங் கேட்டான். ஆனால் மனிதர்களை அவன் மதிக்கவேயில்லை. நான் ராமனாகப் பிறந்து உங்களைக் காப்பாற்றுகிறேன" என்று வாக்களித்தார்.

பிறகு தசரதர் ரிஷிய சிருங்க ரிஷியை வரவழைத்துப் புத்திரகாமேஷ்டியாகஞ் செய்தார். அப்பொழுதுவேள்வி நெருப்பிலிருந்து ஒரு மகாபுருஷன் கிளம்பிப் பாயசத்தைப் பொற்கிண்ணத்தில் அவருக்கு அளித்தான். அதை உட்கொண்ட இராணிகள் மக்களைப்பெற்றார்கள். கௌஸல்யைக்கு ராமனும், கைகேயிக்குப் பரதனும், சுமித்திரைக்கு இலக்குமணனுஞ் சத்துருக்கினனும் பிறந்தார்கள். அப்பொழுது தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள் தேவ துந்துபிகள் முழங்கின. கந்தர்வர்கள் பாடினார்கள். அப்ஸரப் பெண்கள் ஆடினார்கள். உலகம் இன்பமடைந்தது.

பிறகு விச்வாமித்திரர் வந்து தசரதருடைய அனுமதி பெற்று ராமனையும் இலக்குமணனையும் அழைத்துச் சென்றார். ராமர் தாடகையைக்கொன்று விச்வாமித்திரர் வேள்வியை இடையூறின்றி நடத்திவைத்து மகிமையை அடைந்தார். பிறகு மூவரும் மிதிலையை யடைந்து ஜனகரால் சீதாகல்யாணத்திற்குப் பந்தயமாக வைக்கப்பட்ட வில்லை ராமர் முறித்தார். பிறகு ராமர், இலக்குமணர், பரதர், சத்துருக்கினர் முறையே சீதாதேவியையும், ஜனகன் பெண் ஊர்மிளாதேவியையும், அவன் தம்பி பெண்களான மாண்டவீ சுருதகீர்த்திகளையும் மணந்து ஆனந்தமாக அயோத்தியை அடைந்தார்கள்.

பிறகு தசரதர் ராமனுக்கு இளவரசுப் பட்டங்கட்ட வெண்ணினர். கைகேயி பரதனுக்கே இளவரசுப்பட் டங்கட்டவேண்டுமென்றும் ராமன் பதினன்குவருஷம் கானகமேகவேண்டுமென்றும் வற்புறுத்தித் தசரதர் தனக்கு முன்னமே யளித்திருந்த இரண்டு வரமும் அத்தகைய வரமாகவே தரவேண்டுமென்று கட்டா யப்படுத்தினள். தசரதர் சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு மயங்கவே ராமன் இலக்குமணனோடும் சீதையோடும் தந்தை வாய்மையை உறுதிப்படுத்தக் கானகஞ் சென் ருர். ராமன் பிரிவிற்காற்ருமல் தசரதர் தனக்கு ஏற் பட்ட முனிவர் சாபத்தையும் நினைந்து உயிர்துறந்தார்.

## 6. ஸ்ரீராமர் சரித்திரம்.

பரதர் ஊர்வந்து வருந்தி ராமரிடஞ் செல்லப் புறப் பட்டுவந்து அவரைத் திரும்பி வரவேண்டும் என்று கோரியும் சத்தியத்துக்குக் கட்டுப்பட்ட ராமர் வர மறு த்ததால் அவர் பாதுகைகளை எடுத்துச் சென்று அவை களுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து அவைகளின் மந் திரியாக விருந்து ராமர் வரவை எதிர்பார்த்தபடியே அரசாட்சி செய்தார்.

பிறகு ராமரும் சீதையும் இலக்குமணரும் பஞ்சவடி யிலிருந்தபொழுது ராவணன் தங்கையான சூர்பனகை ராமரைக் காமுற்ருள். அவர் அதற்கு இணங்காததால் அவள் சீறிச் சினந்து சீதையைக் கொல்ல எத்தனித் தாள். உடனே இலக்குமணர் அவள் மூக்கை யறுக்கவே அவள் அலறி வோடிக் கர தூஷணர்களுடன் சொல்ல அவர்கள் ராமரை எதிர்த்துப் போர்புரிந்தார்கள். அவர் அவர்கள் யாவரையும் போர்க்களத்தில் கொன்ருர்.

பிறகு சூர்பனகை இலங்கைக்குச் சென்று ராவணனிடத்தில் சீதையின் அழகை வியந்து சொல்லவே, அவன் மாரீசனை அழைத்துச்சென்று அவனைப் பொன்மான் வேஷந்தரிக்கச்செய்து, சீதையின் மனதைக் கவரச்செய்தான். சீதை அதைப்பிடித்துத்தாச் சொல்லவே, ராமர் அதைப் பின்தொடர்ந்து சென்றார். அப்பொழுது அது வெகுதூரம் போகவே அவர் அதை ஓர் அம்பால் கொன்றார். அது இறக்கும்பொழுது "ஆ! சீதா, ஆ! இலக்குமணா" என்று ராமரின் குரலோடு கத்தி இறந்தது. உடனே சீதை இலக்குமணனை ராமர் உதவிக்குச்செல்ல வற்புறுத்தினாள். அவர் சென்றவுடன் ராவணன் சந்யாசி உருவத்துடன் வந்து சீதையை அபகரித்துப் புஷ்பக விமானத்தில் அவளைத் தூக்கிக்கொண்டுபோய் அசோக வனத்தில் சிறை வைத்தான்.

பிறகு ராமரும் இலக்குமணரும் கிஷ்கிந்தை சென்றார்கள். ராமர் சுக்கிரீவனுக்கு அபயங்கொடுத்து வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்குப் பட்டங்கட்டினார். பிறகு அவன் அனுமான் முதலிய வானரர்களைச் சீதையைத்தேடும்படி நான்கு திசைகளுக்கும் அனுப்பினான். அனுமான் இலங்கை சென்று விஷக்கொடிகளால் சூழப்பட்ட மகா மூலிகையைப்போல் அரக்கிகளால் சூழப்பட்டு விளங்கிய சீதையைக் கண்டார். அவளிடம் ராமர் மோதிரத்தைக்கொடுத்து அவள் தந்த சூடாமணியைப் பெற்று மீண்டு அதை ராமரிடம் கொடுத்தார்.

பிறகு ராமரும் இலக்குமணரும் வானரச் சேனைகளுடன் இலங்கையை நோக்கிப் புறப்பட்டுக் கடலில் சேது

யைக் கட்டி இலங்கையை யடைந்து அதை முற்றுகை யிட்டு ராவணனுடைய சைன்யங்களையும் அவனையும் கொன்றார்கள். பிறகு சீதை அக்கினிப்பிரவேசம் பண்ண ராமர் அவளை ஏற்றுக்கொண்டு விபீஷணனுக்கு இலங்கை ராஜ்யமளித்துப் புஷ்பக விமானத்தில் ஏறிக் கோசலதேசம் செல்லப் புறப்பட்டார். சேது முதல் பஞ்சவடி வரையிலுள்ள இடங்களையெல்லாம் சீதைக்குக்காட்டிக்கொண்டே சென்று அயோத்தியை அடைந்தார். பிறகு அங்கே முடி சூட்டப்பெற்று மனு நெறி தவறாதவண்ணம் அவர் செங்கோல் செலுத்தி வந்தார்.

அயோத்தி அமராவதிபோல் சிறப்பாக இருந்தது. அனைவரும் தேவர்களைப்போல ஆனந்தமாகவே இருந்தார்கள். ஆனாலும் அரக்கர் மாளிகையில் இருந்த சீதையை ராமர் ஏற்றுக்கொண்டது தவறென்று அவர்கள் மொழிந்தார்கள். ராமர் தூய்மைவாய்ந்த சீதையை விட்டுவிட மனமில்லாமலிருந்தும் உலகத்தில் குடிகளும் அப்படியே செய்தால் தர்மமழியுமேயென்று பயந்து அவளைக் காட்டுக்கு அனுப்ப நிச்சயித்து அவளைக் கானகஞ் சேர்ப்பிக்க இலக்குமணருக்குக் கட்டளையிட்டார். தர்மத்துக்காகப் பூமியைத் துறந்த புண்ணியாத்மா தர்மத்துக்காகக் கர்ப்பிணியான சீதையையும் விட்டுவிட்டார். இலக்குமணரும் சீதையை அழைத்துக் கானகம் சென்று ராமர் கட்டளையை அறிவித்தார். அவள் வெட்டின மரம்போல் கீழே மூர்ச்சையாகி விழுந்தாள். பிறகு அவள் எழுந்து வருந்திப் புண்ணியவதியான பதிவிரதையானபடியால் கணவனை இகழாமல் தன் தலைவிதியை நொந்துகொண்

டாள். "நான் மறுபடியும் தவஞ்செய்து உம்மையே மறுபிறப்பில் கணவனாக அடைவேன்" என்று அவள் நாயகனுக்குச் சொல்லியனுப்பினாள். இலக்குமணர் சென்றபிறகு வால்மீகி ரிஷி அவளைத் தேற்றித் தன் ஆசிரமத்துக் கழைத்துச் சென்றார். அங்கே அவள் குசன், லவன் என்ற இரட்டைப் பிள்ளைகளைப் பெற்றாள். வால்மீகி ரிஷி அக்குழவிகளுக்கு எல்லா வித்தைகளையும் கற்பித்தார். தான் செய்த ராமாயணம் என்ற மகா காவ்யத்தையும் அவர் அவர்களுக்குக் கற்றுக் கொடுத்தார். அவர்கள் அதைப் பாடும் அழகைக் கேட்டு சீதை தன் துயரத்தை மறந்தாள். ஒரு நாள் அந்தக் குழந்தைகள் தன் சரித்திரத்தையே பாடியதைக் கேட்ட ராமர் அளவில்லாத ஆனந்தமடைந்து அந்தக் காவ்யத்தைச் செய்தவர் வால்மீகி என்றறிந்து அவருடைய தபோவனத்தையடைந்து அவரை வணங்கினார். பிறகு ஒருநாள் ராமர் கொலுவிருக்கும்பொழுது வால்மீகி மாவுரி தரித்த சீதையையும் குசலவர்களையும் அங்கே அழைத்து வந்தார். அவளைத் தூஷித்த ஊர் ஜனங்கள் அவள் பெருமையையும், பொறுமையையுங் கண்டு வெட்கி அவளை வணங்கினார்கள். வால்மீகி அவளைப் பார்த்து, "அம்மா, உன் பரிசுத்த நிலையை மெய்ப்பிப்பாயாக" என்றார். உடனே அவள், "பூதேவி! நான் பதிவிரதையாக விருந்தால் நீ என்னை அழைத்துக்கொள்" என்றாள். உடனே பூமிபிளந்தது. ஒருமின்னல் மின்னியது போல்பூதேவி பூமியினின்று ஆவிர்ப்பவித்து ராமனையே நோக்கி நின்ற சீதையை அழைத்துப் பாதாளம் சென்

ரூன். பிறகு ராமர் குசனுக்கு குசாவதி என்ற நகரத்தை யளித்து லவனுக்கு லவபுரத்தை யளித்து அயோத்தியா வாசிகளான ஜனங்களுடன் ஸரயூ நதியில் பிரவேசித்து அவர்களுக்கு ஒரு புதிய சுவர்க்கத்தைச் சிருஷ்டித்து மோக்ஷமளித்தார். தேவாம்சமாக வந்த வானரர்களெல்லோரும் சுவர்க்கஞ் சென்றார்கள். ராம இலக்குமண பரத சத்துருக்கினர்கள் தத்தம் சுய ரூபமடைந்து வைகுண்டஞ் சென்றார்கள்.

## 7. குச மகாராஜன் சரித்திரம்.

ஒருநாள் குசன் நள்ளிரவில் ஓர் அழகிய தெய்வ மங்கையைக் கண்டான். அவளை அவன் 'நீ யார்' என்று வினவ "நான் அயோத்தியின் தேவதை. அந்த நகர வாசிகள் ராமருடன் பொன்னுலகம் போனதால் மகிமை இழந்துவிட்டேன். அழகிய பெண்கள் நடக்கும் வீதிகளில் நரிகள் ஊளையிட்டு ஓடுகின்றன அவர்கள் பாடிய வீடுகளில் கோட்டான்கள் சத்தமிடுகின்றன. நல்ல பட்டாடைகளிருந்து விளங்கிய இடங்களில் பாம்புச் சட்டைகள் கிடக்கின்றன. அழகிய மாளிகைகளிலும் கோபுரங்களிலும் புல் முளைத்துப்போய்விட்டது. ஆகையால் நீ குசாவதியை விட்டுவிட்டு அயோத்தியை யடைந்து அரசுபுரிய வேண்டும்" என்று பிரார்த்தித்தாள். உடனே குசன் குசாவதியைத் தானமாகக் கொடுத்துவிட்டுத் தன் சைன்யங்களுடன் அயோத்திக்கு வந்து அதை ஆண்டுவந்தான். அப்பொழுது அயோத்திமாநகர் பட்டாடைகளாலும் நகைகளாலும் விளங்கும் அணங்கைப்போல் விளங்கிற்று.

ஒருநாள் ஸரயூநதியில் குசன் இராணிகளுடன் ஜல க்ரீடை செய்யும்பொழுது அவனுக்கு ராமர் அளித்த ஜைத்ரம் என்ற ஆபரணம் கையிலிருந்து நழுவித் தண்ணீரில் விழுந்து விட்டது. தேடியும் அது கிடைக்கவில்லை. அதைக் குமுதன் என்ற நாகலோக அரசன் அபகரித்திருக்கவேண்டும் என்று நிர்ணயித்துக் கருடாஸ்திரம் பிரயோகம் செய்யக் கையில் வில்லேந்தி அம்பைத் தொடுத்தான். உடனே குமுதன் ஓடிவந்து, "இந்த ஆபரணமானது நக்ஷத்திரம் வானத்திலிருந்து விழுவதுபோல் ஒளி வீசி விழுவதைக் கண்ட என் தங்கை குமுத்வதி அதை எடுத்தாள். அதை ஏற்றுக்கொண்டு அவளையும் இராணியாக ஏற்றுக்கொள்ளவேண்டும்" என்று அவனைப் பிரார்த்தித்தான். குசனும் மகிழ்ந்து அவளை மணஞ்செய்துகொண்டான்.

அவர்களுக்கு அதிதி என்ற மகன் பிறந்தான். சில காலமான பிறகு குசன இந்திரனுக்கு உதவியாகப் போர்புரிந்தபொழுது துர்ஜயன் என்ற அசுரனைக் கொன்று அதே யுத்தத்தில் தன் உயிரையும் இழந்தான். குமுத்வதியும் உடன்கட்டையேறிச் சுவர்க்கம் சென்றாள்.

## 8. அதிதி மகாராஜன் சரித்திரம்.

பிறகு அதிதிக்கு முடி சூட்டப்பட்டது. அப்பொழுது உலகமெல்லாம் களித்தது. அந்த மகுடாபிஷேக மகோத்சவத்தில் சிறையிலிருந்தவர்கள் யாவரையும் விடுவித்தார்கள். கூட்டிலுள்ள பட்சிகளையும் கூட விடுவித்தார்கள். அழகிய சிங்காதனத்தில் பட்டாடையும் ஆபரணங்களும் தரித்து அவன் வீற்றிருந்த

அழகை வர்ணிக்கவே முடியாது. பூவுலக முழுவதையும் ஒரு வெண்குடையின் கீழ் அவன் ஆண்டான். தான் நெறி தவறாமல் நடந்து பிறரையும் நெறி தவறாமல் அவன் நடத்தி வந்தான். ஆறில் ஒரு கடமைமட்டும் வாங்கிக் குடிகளைக் காத்துவந்தான். அவர்கள் சுதந்திரமுள்ளவர்களாகவும், நெறி தவறாதவர்களாகவும், தூய்மையுள்ளவர்களாகவும், சிறப்பும் சம்பத்தும் வாய்ந்தவர்களாகவும் இருந்து களித்தார்கள். இப்படி உலகத்துக்கெல்லாம் இன்பம் விளைவித்து வெகுகாலம் ஆண்டபின் மன்னவன் பரமபதமடைந்தான்.

## 9. பின்வந்த அரசர்களின் சரித்திரம்.

அதிதியின் மகனை நிஷதன் பிறகு சிங்காதனமேறிச் செங்கோல் செலுத்தலாயினன். அதற்குப் பிறகு நலன், புண்டரீகன், க்ஷேமதன்வா, தேவானீகன், அஹீனகு, பாரியாத்ரன், சிலன், உன்னபன், வஜ்ரணபன், சங்கணன், வ்யுஷிதாச்வன், விச்வஸஹன், ஹிரண்யநாபன், கௌஸல்யன், பிரஹ்மிஷ்டன், புத்திரன், புஷ்யன், சுதர்சனன் என்ற அரசர்கள் ஆண்டார்கள். பிறகு சுதர்சனன் மகன் அக்கினிவர்ணன் முடிசூட்டப்பெற்றான். அவன பெண்ணாசை பிடித்து நெறி தவறிக் காமத்திலாழ்ந்தான். பாட்டிலும் கூத்திலும் பொழுதைப் போக்கித் தன் கடமையையும் கடவுளையும் மறந்தான். பிறகு அவன் க்ஷயரோகத்தால் பீடிக்கப்பட்டிறந்தான். அவனுடைய இராணி கர்ப்பமாக இருந்ததால் அவள் பட்டமடைந்து குழந்தை பிறந்து பட்டத்துக்கு வரும் வரையில் அவளே ஆண்டுவந்தாள்.

## 10. முடிவுரை.

இப்படி இந்தியதேச அரசாட்சியின் வர்ணனை தபோவனத்திலும வைராக்பத்திலும் பிறந்து, போகத்திலும் காமத்திலும்முடிந்தது. நமது நாட்டின்சிறப்பை இழந்த நிலைமைக்காளிதாஸன் குறித்துக்காட்டியது கர்வத்தை அடக்கவோ, நல்வழியைக் காட்டவோ என்று ஊகிக்க வேண்டியதாக இருக்கிறது. இந்த அருமையான நூலை ஆழ்ந்து கவனித்தால் ராஜதர்மமும், மோக்ஷ தர்மமும் நன்கு விளங்குகின்றன என்ற விஷயம் புலப்படும். அழகும் தத்துவமும் வாய்ந்த இந்நூலை நம்முடைய நாட்டிலிருப்பவர்கள் நமது நாகரிகத்துக்கே ஒரு சிறப்பான அலங்காரமாகக் கருதிக் கொண்டாடிவந்திருக்கின்றார்கள்.

## அத்யாயம் 5.

## மாளவிகாக்கினிமித்ரம்.

### 1. மாளவிகா சித்திர தர்சனம்.

இந்த நாடகம் காளிதாஸன் முதலாவது எழுதிய நாடகம். இந்தவிஷயம் நாடக சம்பிரதாயத்தைபொட்டி இதில் எழுதியுள்ள பிரஸ்தாவனை என்ற முகவுரையிலேயே நன்றாக விளங்குகின்றது. நாடகம் இயற்றிய முறையிலும், வர்ணனைகளிலும், பாஷைச் சிறப்பிலும் இந்நாடகம் தேர்ச்சியடைந்தபிறகு எழுதப்பட்டதன்றென்று தெரிகின்றது. ஆனாலும் அதன் அமைப்பின் திறம் அழகாகவேதான் இருக்கின்றது என்ற விஷயம் ஸம்ஸ்கிருத நாடகங்கள் படித்துப் பழக்கமுள்ளவர்களுக்கு நன்றாகத் தெரிந்ததே.

காளிதாஸனுடைய மற்ற நாடகங்களிற்போல இதிலும் நாந்தி சுலோகம் பரமசிவனையே குறிக்கின்றது. "எவர் ஒப்புயர்வில்லாத ஐச்வரியத்தைப்பெற்று அன்பர்களுக்கு அளவில்லாத ஐச்வர்யங்களை அளித்துத் தான் தோலையே உடையாகக் கொண்டிருக்கிறாரோ, எவர் அர்த்தநாரீச்வர மூர்த்தமாகவிருந்தாலும் துறவிகளுக்கெல்லாம் உயர்ந்த துறவியாயும் யோகியாயும் தெய்வமாகவும் இருக்கிறாரோ, எவர் தன் அஷ்டமூர்த்திகளாலே உலகத்தைத் தாங்கிக் காத்துவந்தாலும் தானென்னும் அகம்பாவமேயில்லாமல் இருக்கின்றாரோ அந்தப் பரமேச்வரன் உங்கள் அஞ்ஞானத்தை விலக்கிச் சன்மார்க்கத்தைக் காட்டி ரக்ஷிக்கட்டும்."

பிறகு சூத்திரதாரர் காளிதாஸன் புதிதாக இயற்றிய நாடகத்தை நடிக்கவேண்டுமென்று சொல்ல நடன், "அது கூடாது. பாஸன் முதலான மகா கவிகளுடைய பண்டைய நாடகங்கள் இருக்க நவீன கவியின் புது நாடகத்தைப் பார்ப்பதில் சபையோருக்குப் பிரியம் இருப்பானேன்?" என்றான். அதற்குச் சூத்திரதாரன், "என்ன, மதியீனமாகச் சொல்லுகிறயே. பழைய நூல்கள் யாவும் உயர்ந்தனவா? புது நூல்கள் எல்லாந் தாழ்ந்தனவா? அறிஞர் இரண்டையும் சீர்தூக்கிப்பார்த்து எது உயர்ந்ததோ அதை ஏற்றுக்கொள்வார்கள். அறிவீனனே பிறர் எப்படிச் சொல்லுகிறார்களோ அப்படியே நடப்பான்" என்றான். இந்தப் பிரஸ்தாவனை என்ற முகவுரையிலிருந்து இது காளிதாஸன் புதிதாக முதலில் எழுதிய நாடகம் என்று விளங்குகின்றது.

ஒருநாள் அக்கினிமித்திரன் என்ற அரசன் சித்திர சாலையில் தாரிணீ என்ற பெயர்பூண்ட தன் இராணி இருப்பதை அறிந்து அங்கே சென்று சித்திரத்தில் எழுதப்பட்டிருந்த இராணியையும் அவளுடைய பணிப் பெண்களையும் பார்த்து "சித்திரம் மிகவும் அழகாக எழுதப்பட்டிருக்கின்றதே. இதில் எழுதப்பட்டிருக்கும் இந்தப் பெண் யார்?" என்று மிகவும் அழகுவாய்ந்து விளங்கிய ஒரு மங்கையைக் குறித்து வினவினான். அப்பொழுது அவன்பெண், 'இவள் மாளவிகை' என்று சொன்னாள். அரசன் பிரியத்துடன் அந்தச் சித்திரத்தை நோக்கியதைக்கண்ட தாரிணீதேவி அரசன் மாளவிகையைக் காணமலிருக்கும்படி ஏற்பாடு செய்தாள்.

அவளுடைய தம்பி வீரசேனன் என்பவன் மாளவிகை யைச் சித்திரம், சங்கீதம், நாட்டியம் இவைகளிற் சிற ந்த ஞானத்தை அடையும்படி தாரிணீ தேவி யிடத்து அவ்வித்தைகளைச் செவ்வையாகக் கற்றுக்கொள்ளவும், தாதியாக இருக்கவும் அனுப்பியிருந்தான். தாரிணீ தேவியும் அப்பெண்ணை நாட்டியாசாரியரான கணதாஸ ரிடம் நாட்டியவித்தை கற்றுக் கொள்ள ஒப்புவித்திருந் தாள்.

ஒருநாள் தாரிணீதேவி தன் தாதி வகுளாவலிகை யைக் கணதாசரிடம் அனுப்பி மாளவிகை நாட்டிய வித் தை நன்றாகக் கற்று வருகிறளா என்று அறிந்து வரு மாறு அனுப்பினுள். வகுளாவலிகை அதைக்கேட்கப் போகும்பொழுதே அவர் சங்கீதசாலையினின்றும் வெளி யில் வந்தார். வரும்பொழுது, "எல்லோருக்கும் அவரவ ர்கள் குலவித்தையில் பெருமை இருக்கும். ஆனாலும் நாட்டியத்தின் பெருமைதான் பெருமை. முனிவர் களும் கூட அதைத் தேவதைகளுக்குக் கண்ணுல் இன் புறும்படி ஏற்பட்ட அழகுவாய்ந்ததும் சுகரூபமாக உள் ளதுமான வேள்வி என்று சொல்லியிருக்கின்றர்கள். சங்க்ஷாத் பரமசிவனே தன்னிடத்திலிதை இரண்டு விதமாக ஏற்றுக்கொண்டு தான் லாஸ்யம் என்ற நாட் டியத்தையும், உமாதேவி தாண்டவம் என்ற நாட்டியத் தையும் நடித்துக்காட்டி உலகங்களுக்கு உபதேசித்து வருகிறர். நாட்டியத்தாலேயே எல்லா ரஸங்களுடனும் கூடிவிளங்கும் ராமர் முதலிய பெரியோர்களுடைய திவ்விய சரித்திரங்களும் மற்ற பன்முறையான உலக அனுபவங்களும் விளங்குகின்றன. பலவகைப்பட்டிருக்

கும் இன்பச்சுவைகளை வெவ்வேறு மாதிரியான ருசி யுடன் கூடின எல்லா ஜனங்களுக்கும் ஒரேகாலத்தில் ஊட்டிச்சுகத்தை யளிக்கும் இன்பசாதனமன்றோ இது," என்று நாட்டியத்தின் பெருமைகளை நினைத்துப் புகழ் ந்துகொண்டே வந்தார். அப்பொழுது அவரைப் பார்த் த்து வகுளாவலிகை, "மாளவிகை எப்படி நாட்டிய வித்தை கற்றுக்கொண்டிருக்கின்றாள்?" என்று வினவ அவர், "நாட்டியக்கருத்துக்களை நோக்கமறிந்து எப்படி நான் கற்பிக்கின்றேனே அதை நான் கற்பிப்பதைவிட மிகத்திறமாகவும், அழகாகவும் அவள் கற்றுக் காட்டுவ தால் அவளே எனக்குக் கற்றுக்கொடுப்பது போலிருக் கிறது. சிப்பியில் விழுந்த மழைத்துளி முத்தாவது போல் நல்ல மாணாக்கனுக்குக் கற்றுக்கொடுக்கப்பட்ட வித்தை மேன்மையை யடைகின்றது" என்றார்.

இது இப்படி இருக்க அரசன் தன்னிடம் தங்கை யைக் கல்யாணம் செய்துகொடுக்க வந்த மாதவசேனனை அவன் பெரிய தகப்பன் பிள்ளையான விதர்ப்ப தேச அரசன் யக்ஞசேனன் சிறையிலடைத்தான் என்று கேட்டுக் கோபித்து யக்ஞசேனனை அவர்களை விடுவிக் கும்படி எழுத அவன் அக்கினிமித்திரனுக்கு "மா தவசேனன் தங்கையைக் காணவில்லை. தேடிக்கொண் டிருக்கிறேன். நீங்கள் என் மைத்துனனைச் சிறையில் வைத்திருக்கிறீர்கள். அவனைச் சிறையில் இருந்து விடு வித்தால் நான் அவர்களைச் சிறையிலிருந்து மீட்டு உங் களிடம் அனுப்புகிறேன்" என்று எழுதினான். அரசன் மிகவும் சினந்து, "அவனை அரசிலிருந்துநீக்க நம்முடை ய தண்டுத் தலைவன் வீரசேனனுக்கு உத்தரவு செய்ய

வேண்டும் என்று நினைக்கிறேன். உன் எண்ணம் என்ன," என்று மந்திரியைக் கேட்க மந்திரியும் "அவன் இப்பொழுதுதான் அரச பதவியைப் பெற்றான். இன்னும் குடிகளுடைய பேரன்பை அடையவில்லை. புதிதாக முளைத்த செடியைப்போல் சுலபமாக வேருடன் பிடுங்கி எறிந்துவிடலாம்" என்றான். அரசன் அப்படியே செய்யக் கட்டளையிட்டான்.

அரசனுக்கு மாளவிகையை எப்படியாவது பார்க்க வேண்டுமென்றிருந்த ஆவலை அறிந்த விதூஷகன் அதற்காக ஒரு தந்திரம் செய்தான். கணதாஸருக்கும் வேறொரு நாட்டியாசாரியரான ஹரதத்தருக்கும் சண்டையை மூட்டிவிட்டான். இருவரும் சண்டையிட்டுக் கொண்டு அரசனிடம் வந்தார்கள். அவர்கள் அரசனிடம் வந்ததும் அரசனுடைய பெருமையையும் காம்பீர்யத்தையும் பார்த்துப் பயந்து வணக்கமாகவே வந்தார்கள். கணதாஸர், அரசனைப் பார்த்து "மகாராஜனே, இவர் நான் தன் கால் தூசிக்குக்கூடச் சரியானவனல்லனென்று பெரியோர்களெதிரில் என்னை அலட்சியமாகச் சொன்னார்" என்று முறையிட்டார். ஹரதத்தர், "இவர் அவருக்கும் எனக்கும் கடலுக்கும் மடுவுக்குமுள்ள வேற்றுமை உண்டு என்று நிந்தித்தார்" என்று முறையிட்டார். உடனே அரசன் தாரணீ தேவியையும் பண்டித கௌசிகையும் வரவழைத்து அவர்கள் முன்னிலையில் சண்டையைத் தீர்த்துவிடுவதற்கு ஆரம்பித்தான். தான் ஹரதத்தரை நியமித்திருந்தாலும் கணதாஸர் தேவி நியமித்த நாட்டியாசாரியராகவிருந்தாலும் பண்டித கௌசிகையும் கூட இருக்கவேண்

டுமென்பது அரசனுடைய எண்ணம். சன்யாசினியாக விருந்து தேவியுடன்கூட வந்த பண்டித கௌசிகையைப் பார்த்து அரசன் "நீங்கள்தான் இதைத் தீர்மானம் செய்யவேண்டும். ஹரதத்தர் என்னைச் சார்ந்தவர். கணதாஸர் தேவியைச் சார்ந்தவர். ஆகையால் நாங்கள் மத்யஸ்தராக இருக்க முடியாது" என்றான். அவள், "அப்படியானால் ஆகட்டும். நாட்ய சாஸ்திரத்திலோ வாதத்திற்கிடமில்லை. பிரயோகமே அதில் முக்கியம். நடித்தேபார்க்கவேண்டும்" என்றாள். மாளவிகையை அரசன் பார்ப்பதற்காக விதூஷகன் செய்த தந்திரம் இது வென்று தாரிணீ தேவியோ அறிந்துகொண்டாள். அவள் "நாட்யாசாரியர்கள்போரிடுவதே எனக்குஇஷ்டமில்லை" என்று சொல்லி அவர்களைத் தடுத்துப் பார்த்தாள். கௌசிகை, "சிலருக்கு வித்தை தமக்குமட்டும் நன்றாகத் தெரியும். சிலருக்கு வித்தையைப் பிறருக்கு அறிவிக்க நன்றாகத்தெரியும் எந்த ஆசிரியனுக்கு இவை இரண்டும் தெரியுமோ அவனே பெரியவன்" என்றாள். தேவி கணதாஸரைத் தன்னருகில் கூப்பிட்டு, "இப்பொழுது இது வேண்டாம்" என்றாள். அவர் "எவன் எதிரிக்குப் பயந்து அவனது நிந்தனையைப் பொறுத்துக்கொண்டு தன் வித்தையைப்பணம் சம்பாதிக்கும் தொழிலாகமட்டும் உபயோகிக்கிறானோ, அவன் வித்தையை விற்கும் வியாபாரியே" என்று வருத்தத்துடன் விடையளித்தார். தேவி, "இப்பொழுதுதானே உமது மாணவி உம்மிடம் வந்தாள். வித்தையைக் கற்றுக்கொள்ளப் பொழுது போதாதே" என்று சொல்லிப்பார்த்தாள். அதற்கு அவர், "அதனால்தான் அவள் திறமையைக்

காட்ட விரும்புகிறேன்" என்றார். அப்பொழுது அவள், "ஆனால் நீங்கள் இருவரும் கௌசிகையை அழைத்துச் சென்று உங்கள் மாணாக்கர்களின் திறமையைக் காட்டுங்கள்" என்று சொல்ல, அதற்குக் கௌசிகை, "எவ்வளவு சமர்த்தனாக விருந்தாலும் ஒருவனால் இது தீர்மானம் செய்ய முடியுமா? நீங்களும் இருக்கவேண்டும்" என்றாள். கணதாஸனும், "நீங்கள் உத்தரவு கொடுக்காவிட்டால் என்னைக் கைவிட்டதுபோலாகும்" என்று இராணியைப் பார்த்துச் சொன்னார். வேறு வழியொன்றும் இல்லாமையால் இராணியும் அதற்குச் சம்மதித்தாள். அவர்கள் போனபிறகு அவள் அரசனைப் பார்த்து, "இராஜரீக விஷயங்களில் தங்களுக்கு இவ்வளவு திறமும் கவனமும் இருந்தால் மிகவும் க்ஷேமமுண்டு" என்றாள். அரசன், "தேவி! தவறாக எண்ணவேண்டாம். படித்தவர்களுக்குள் போட்டி இயற்கையன்றோ?" என்று சொல்லிவிட்டான்.

## 2. மாளவிகா நாட்யம்.

உடனே சங்கீதசாலையில் இரண்டு ஆசாரியர்களும் தங்கள் மாணாக்கர்களைத் தயாராகக் கொண்டுவந்தார்கள். அரசனும், விதூஷகனும், தாரிணீதேவியும், கௌசிகையும் அங்கே சென்றார்கள். அப்பொழுது யாருடைய வித்தையை முதலில் பார்ப்பதென்று அரசன் கேட்கக் கௌசிகை, "கணதாஸர் வயதில் பெரியவராதலால் அவருடைய வித்தையையே முதலில் பார்ப்போம்" என்று சொன்னாள். அப்பொழுது மாளவிகை வரவே அரசன் அவளைப்பார்த்து, "அழகு வாய்ந்த ண்களும்,

மதிமுகமும், தேகலாவண்யமும், சிறந்த இடையும், அழகிய கால்களுமுடைய இவள் நாட்டிய வித்தையே மூர்த்தித்து வந்தவள்போலிருக்கிறாள்" என்றெண்ணினான். மாளவிகை, "என் நாயகனே அடைவதற்கு அரியவனாயிருக்கிறான். மனமே, ஆசையை விட்டுவிடு. ஆனால் ஏன் என் இடது கண் துடிக்கிறது? அவனை அடையமுடியுமா? பிரிய நாயகனே, என் உள்ளத்தை அறிந்துகொள்" என்ற பொருளடங்கிய பாட்டைக்குறிப்பாகப்பாடி அபிநயித்து நடித்தாள். நடனம் முடிந்தவுடன் அவள் போக ஆரம்பிக்க, விதூஷகன், "இரு. இந்த நடனத்தில் தவறிருக்கிறது" என்றான். ஆசாரியன் இருக்கச் சொல்லவே அவள் நின்றாள். அவள் வளைகளால் சோபிக்கும் தன் இடது கையை இடுப்பில் அழகாக வைத்து வலது கையை யழகாகத் தொங்கவிட்டு வெட்கத்தால் பூமியை நோக்கி நாணி நின்று கால் பெருவிரலால் ஒரு பூவைத் தள்ளிக்கொண்டிருந்தபொழுது அரசன் அவளது அழகைக் கண்டு, "இவள் ஆடியபொழுது இருந்த அழகு இப்பொழுது வேறு ஒருவிதமாக விளங்குகின்றது" என்று எண்ணிக் களித்தான். தாரிணீதேவி, "விதூஷகன் பேச்சைப்பொருட்படுத்தலாமா?" என்று கணதாஸரிடம் சொன்னாள். அதற்கு அவர், "தேவி! அரசனுடைய பழக்கத்தால் அவருக்கு நல்ல அறிவு வந்திருக்கும். அறிவீனன் கூட அறிஞன் பழக்கத்தால் அறிவாளனாகிறான். தேற்றாங்கொட்டை சம்பந்தத்தால் கலங்கிய நீர் தெளியவில்லையா?" என்று சொன்னார். அப்பொழுது கௌசிகை, "நடனம் பிழையின்றிச் சுத்தமாகவே இருந்தது. சொல் நயத்தாலும்

அபிநயத்தாலும் பாட்டின் தாத்பரியம் நன்றாக விளக்கிக் காட்டப்பட்டது. காலின் நர்த்தன முறையோ லயந் தவறவே யில்லை. அந்தந்த ரசங்களைக் குறிப்பிடும் பொழுது அவைகளில் மனம் ஈடுபட்டு ஆழ்ந்து அனுபவித்து நடித்துக் காட்டினாள். கைவிரல்களாலே காட்டும் அபிநயம் அழகாகவும், அடக்கமாகவும், அதிசாதுரியமாகவும் இருந்தது. அபிநயிக்கும் குறிப்புகள் ஒன்றை யொன்று பின் தொடர்ந்து வந்தன. மனதை இன்புறுமாறு செய்யும் திறமோ வெகு அழகு வாய்ந்திருந்தது" என்று புகழ்ந்து பேசினாள் அரசனும் தன் எண்ணமும் அப்படியேதான் என்றும், மாளவிகையின் நடனம், அபிநயம், சங்கீதம் இவைகளைப் பார்த்தபிறகு தன நாட்யாசாரியரின் பெருமையை உயர்த்திச் சொல்ல மனம் வரவில்லை என்றும் சொன்னான் கணதாஸர் களித்து, "இப்பொழுதுதான் நான் நாட்யாசாரியன். எப்படி நெருப்பில் தங்கம் விளங்கி ஒளிவீசுமோ, அப்படி உங்கள் முன்னிலையில் விளங்கின வித்தையே சுத்தமான வித்தை" என்று மொழிந்தார் பிறகு விதூஷகனை நோக்கி நடனத்தில் என்ன பிசகு என்றுகேட்க அவன் கௌசிகையைப் பார்த்து, " உனக்கு என்ன தெரியும்? பணியாரம் சுவைகூட அறியாதவள். தலையோ நிலாமாதிரி வெளுத்து இருக்கிறது. நடனம் செய்வதற்கு முன் பிராம்மண பூஜை செய்யவேண்டாமா? நான் இங்கே இல்லையா? ஆகையால்தான் அந்தத் தவறைக் குறித்துச் சொன்னேன்" என்றான். அப்பொழுது எல்லோரும் நகைத்தார்கள். மாளவிகையும் புன்முறுவல் செய்தாள். அரசன் அதைப் பார்த்து,

"இந்த அழகுவாய்ந்த மாளவிகை முறுவல் செய்தபொழுது உதடுகள் அழகாகவிரிந்து, பல்வரிசை சிறிது தெரிந்து, முகம்மலர்ந்து இருந்தது சிறிது மலர்ந்த தாமரையை ஒத்திருந்தது" என்று எண்ணிச் சந்தோஷித்தான். விதூஷகன், "ஆனல் பரிசு இவளுக்குக் கொடுக்கவேண்டும்," என்று சொல்லி அரசன் மோதிரத்தைக் கழற்றத் தேவி "பொறு, பொறு; ஹரதத்தன் வித்தையைப் பார்த்துப் பிறகல்லவா உயர்வு தாழ்வு நிச்சயிக்கவேண்டும்!" என்று தடுத்தாள். பிறகு மாளவிகை புறப்பட்டுப்போனாள். அரசன், "அவள் திரைக்குப் பின்புறம் சென்றது நோக்கின கண்களின் பாக்கியத்தின் அஸ்தமனமோ, மனதின் உத்ஸவத்தின் முடிவோ, தைரியத்தின் கதவை மூடுதலோ என்று நினைக்கின்றேன்" என்று விதூஷகனிடம் மறைவாகச் சொன்னான். மாளவிகையைப் பார்ப்பதற்காகவே நாட்யம் ஏற்பட்டபோதிலும் "ஹரதத்தர் வித்தையைப் பார்ப்போம்" என்று மரியாதைக்காக அரசன் சொல்ல, அப்பொழுது வைதாளிகன் (காலத்தைப் பாட்டால் குறிப்பிடும் வேலைக்காரன்) "நடுப்பகல் வேளை வந்துவிட்டது. அன்னப் பக்ஷிகள் தாமரை இலைகளின் நிழலில் உறங்குகின்றன. மேல் மாடியிலிருந்த புறாக்கள் வெப்பத்தால் அவ்விடம் விட்டு நீங்குகின்றன. ஜலயந்திரத்திலிருந்து நான்கு பக்கத்திலும் இறைக்கப்பட்ட நீர்த்துளிகளை வறட்சியால் மயில்கள் நாடுகின்றன. சூர்யன் லோகநாயகனாக அரசனைப்போல் ஒளிவீசிப் பிரகாசிக்கின்றான்" என்று வர்ணித்தான். உடனே விதூஷகன், "உண்ணும்வேளை தப்பிவிட்டதே. வைத்தியர்கள் போஜனவேளை தப்பி

னால் பிணிவரும் என்று சொல்லுகிறார்களே" என்று எழுந்தான். அரசன் ஹரதத்தரைப் பார்த்து, "நாளைய தினம் உங்கள் வித்தையைப் பார்ப்போம்" என்று சொன்னான். பிறகு மற்ற எல்லோரும் சென்றபிறகு விதூஷகன் அரசனைப் பார்த்து, "மாளவிகை அழகில் மட்டுமன்றி ஞானத்திலும் சிறந்தவள்" என்றான். அரசனும், "ஆம், ஆம்; இயற்கை அழகுள்ளவளுக்கு ஞானசௌந்தரியத்தையும் ஈசன் அளித்தமை மன்மத பாணத்தை விஷத்தில் தோய்த்து எய்தது போலன்றோ இருக்கின்றது! அவளே எனக்குத் தகுந்த நாயகி. எப்படியாவது நீ அவளை நான் அடையும்படி செய்யவேண்டும்," என்று வேண்டினான்.

## 3. மாளவிகா தர்சனம்.

ஆனால் தாரிணிதேவி அரசன் மாளவிகையை மறுபடியும் பார்க்காதபடி அவளைக் காவலில் வைத்தாள். அரசன் மாளவிகையைப் பார்க்க முயன்றும் முடியவில்லை. இப்படியிருக்க ஒருநாள் இராணி இராவதியின் விருப்பத்தின்படியே அரசன் நந்தவனத்திற்குச் சென்றான். அப்பொழுது வசந்த காலம். "குயில்கள் இனிய குரலால் கூவுவது மனம் வருந்தாமலிருக்கவேண்டுமென்று என்னைக் கேட்டுக்கொள்வது போலிருக்கிறது. மணம் வீசும் தென்றல் என் மேலே படுவது வசந்தன் அன்புடன் மிருதுவாகத்தொட்டுத் தடவிக்கொடுப்பது போலிருக்கிறது. அசோகத்தின் பூவால் பெண்களின் உதடு பழிக்கப்படுகின்றது. வண்டுகள் திலகங்களைவிட அழகாற் சிறந்திருக்கின்றன. வசந்தலக்ஷ்மி பெண்

களின் அழகைப் பழித்த பெருஞ் சிறப்புடன் விளங்கு கிறாள்'' என்று வர்ணித்துக் களித்தான்.

அச்சமயத்தில் மாளவிகை தேவியால் தன் காலில் வலியாக இருப்பதால் ''நீ போய் பூக்காமலிருக்கும் அசோக மரத்திற்குத் தோகதம் செய்து வா. ஐந்து நாளில் புஷ்பித்தால் உன் இஷ்டத்தை நிறைவேற்றுகி றேன்'' என்று சொல்லி அனுப்பப்பட்டாள். தோகதம் என்றால் பூ அரும்புவிடாத மரங்களுக்குச் செய்யப் படும் காரியம். அசோகமரம் அரும்பு விடாவிட்டால் அழகிய மங்கையின் காலால் உதைப்பது அதற்குத் தோகதம். அப்படி யங்கே வந்தவள் அரசனை நினைத்து வருந்தி, ''அதிக ஆசைப்பட்டால் நாம் விரும்புவது கிடைக்குமா?'' என்றுரைத்தாள். அரசனும் விதூஷ கனும் ஒளிந்து அவள் கூறியதைக் கேட்டுக்கொண்டிருந் தார்கள். அப்பொழுது தாதியான வகுளாவலிகை அங்கே தோகத சாமான்களை எடுத்துவந்தாள். அவள் மாளவிகையின் கால்களில் நலங்கிட்டு நகைகள்போட்டு தோகத சிங்காரம் செய்தாள். அந்த சமயத்தில் இராவதி அதே தோட்டத்தில் வேறு ஒருபக்கமாக வந்துகொண் டிருந்தாள்

அப்பொழுது மாளவிகை அசோக தோகதம் செய் தாள். அந்தச் சமயம் பார்த்து அரசனும் விதூஷகனும் அங்கே வந்தார்கள். உடனே மாளவிகை நாணி நிற்க அரசன் அவளைப் பார்த்து, ''அசோகமரத்தில் உனக் கிருக்கும் தயை என்னிடம் இல்லையோ? எனக்கும் சந் தோஷமென்ற புஷ்பம் இல்லையோ?'' என்று பிரிய மாகப் பேசினான். உடனே இராவதியும் அங்கே

வந்து "அப்படியே செய்வதுதான் தகுதி" என்று சினந்து மொழிந்தாள். மாளவிகை பயந்து விரைவாகப் போய் மறைந்தாள். இராவதியும் வெகு கோபமாகத் தன் அரண்மனையை யடைந்தாள்.

## 4. மாளவிகாப் பிராப்தி.

இராவதியின் மூலமாய்த் தாரிணீதேவி நடந்த விருத்தாந்தங்களை யறிந்து மாளவிகையையும், வகுளாவலிகையையும் யாவரும் காணாதபடி சிறைச்சாலையில் காவல் வைத்துத் தன் மோதிரத்தைக் காண்பித்தாலல்லது அவர்களை வெளியில் விடக்கூடாது என்று கட்டளையிட்டாள். இது இப்படி யிருக்க அவள் கால் வலி எப்படி இருக்கின்றது என்றறிய அரசன் அந்தப்புரம் சென்றான். அரசனிடம விதூஷகன் மாளவிகையைப் பார்க்கும்படி தான் செய்யக் கருதியிருந்த தந்திரத்தைச் சொல்லியிருந்தான். அரசன் தேவியிடம் பேசிக்கொண்டிருந்தபொழுது விதூஷகன் ஓடி வந்து, "தேவியைப் பார்க்க வருவதற்குக் காணிக்கையாக அசோக மொட்டுகளை எடுக்கப்போனபொழுது பாம்பு தீண்டிவிட்டதே!" என்று அலறினான். உடனே கௌசிகை, "விஷம் தீண்டினால் தீண்டின விடத்தை உடனே நறுக்கி எறியவேண்டும், அல்லது சுடவேண்டும்" என்றாள். உடனே அரசன் துருவஸித்தி என்ற வைத்தியனிடம் விதூஷகனைக் கொண்டு போகும்படி கட்டளையிட்டான். விதூஷகன் வெளியில் கொண்டு போகப்பட்டவுடனே விஷ வைத்தியன், "சர்ப்பமுத்திரையுடன்கூடிய ஏதாவது கொண்டுவா" என்று ஆளையனுப்ப இராணி தன் மோதிரத்தில் சர்ப்ப முத்திரை

இருந்ததால் அதை அனுப்பினாள். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் விதூஷகனுக்கு விஷம் தெளிந்ததாகச் செய்தியும் வந்தது.

அரசன் புறப்பட்டு நந்தவனம் போகவே அங்கே விதூஷகன் வந்து சேர்ந்தான். "நான் இராணி மோதிரத்தைக் காட்டினபொழுது காவல்காரியாக இருந்த மாதவிகை 'எதற்காக இப்பொழுது விடுதலையடைந்தாள்?' என்று கேட்டாள். அரசனுடைய ஜன்ம நக்ஷத்திரத்தில் பீடை இருப்பதால் ஜோதிடர்கள் சிறைச்சாலையிலுள்ளவர்கள் யாவரையும் விடும்படி உத்தரவிடப்பட்டிருக்கிறதெனச் சொல்லி ஏமாற்றி மாளவிகையையழைத்துவந்துவிட்டேன்" என்று தெரிவித்தான். அப்பொழுது அவர்களிருவரும் மாளவிகை இருக்குமிடத்தினருகில் மறைவாகவிருக்க மாளவிகை சித்திரத்திலெழுதிய அரசனைப் பார்த்து வகுளாவலிகையை நோக்கி "அரசன யாரையோ பிரியமாகப் பார்த்துக்கொண்டிருக்கிறாரே" என்றாள். வகுளாவலிகை, "அவள் இராவதி" என்று சொல்ல மாளவிகை அசூயைகொண்டாள். உடனே அரசன் நேரில் வந்து பேசி அவளை முகமலர்ச்சியுடனிருக்கச் செய்தான். விதூஷகனும் வெளியில் படுத்து உறங்கவே அப்பொழுது இராவதியும் அவள் தாதி நிபுணிகையும் அங்கே வர நிபுணிகை ஒரு சிறு கொம்பை அவன் மேல் விளையாட்டாக எறிந்தாள். உடனே, அவன் "பாம்பு! பாம்பு!" என்று அலறி எழவே, அரசனும் மாளவிகையும் வேகமாக வெளியில் வந்தார்கள். அப்பொழுது இராவதியும் அங்கே வந்து அரசனைப் பார்த்து, "உங்கள் யுக்தி மிகவும் திறமாக இருக்கிறதே!"

என்று கோபமாக மொழிந்தாள். நல்ல வேளை யாக அந்தச் சமயத்தில் ஒரு தாதி ஓடி வந்து "மகாராஜனே, குழந்தை வசுலக்ஷ்மி பந்து விளையாடும் பொழுது குரங்கால் பயமுறுத்தப்பட்டு மூர்ச்சையாயினாள்" என்று சொல்லவே இராவதி அரசனை உடனே அங்கே போகும்படி வேண்டினாள். அவர்கள் எல்லோரும் அங்கே செல்லவே மாளவிகை வகுளாவலிகையைப் பார்த்து, "அம்மா, தேவியை நினைக்கும் பொழுது பயமாக இருக்கிறதே!" என்றாள். அப்பொழுது நந்தவனத்தைக் காக்கும் பெண், "ஆச்சர்யம்! ஆச்சர்யம்! ஐந்துநாட்களுக்குள்ளாகவே அசோகம் பூத்துவிட்டதே!" என்று சொல்லிக்கொண்டே தேவியிடம் போனாள். மாளவிகையும் வகுளாவலிகையும் அவளைப் பின் தொடர்ந்து சென்றார்கள்.

## 5. மாளவிகா விவாகம்.

அச்சமயத்தில் சேனாபதியான வீரசேனன் விதர்ப்பராஜனை ஜயித்து மாதவசேனனைச் சிறைச்சாலையிலிருந்து விடுவித்துத் தூதர்களை அக்கினிமித்திர மகாராஜனிடம் அனுப்பினான். தாரிணீதேவி பூத்த அசோக மரத்தைப் பார்க்கும்படி அரசனை யனுப்ப அரசன் அங்கே சென்றான். அங்கு மாளவிகை சர்வாபரண பூஷிதையாக மணப்பெண்போல விளங்குவதற்குக் காரணம் ஒருவருக்கும் விளங்கவில்லை. தேவியோ அன்றைய தினம் வீரசேனனிடம் வந்த கடிதத்தைப் பார்த்துவிட்டு மாளவிகையைச் சிங்காரமாக அலங்கரித்துத் தன்னுடன் அழைத்து நந்தவனத்துக்குப் போயிருந்தாள். அந்தச் சமயத்தில விதர்ப்பதேசத்திலிருந்துவந்த

இரண்டு பெண்கள் அவ்விடம் வந்தார்கள். அவர்கள் மாளவிகையைப் பார்த்தவுடனே "இவள் நம்முடைய ராஜகுமாரி அல்லவா?" என்று கண்ணீர் சொரிந்தார்கள். அரசன் அவர்களைநோக்கி, "என்ன விருத்தாந்தம்?" என்று கேட்க அவர்கள், "இவள் மாதவசேனன் தங்கை. விதர்ப்ப ராஜா அவனைச் சிறைச்சாலையில் விட்டபொழுது மந்திரியாகிய சுமதி இவளை அவ்விடம் விட்டு அழைத்துக்கொண்டு போய்விட்டான். அதற்குப் பிறகு என்ன நடந்ததென்று நாங்கள் அறியோம்" என்றார்கள். அப்பொழுது கௌசிகை, "அதற்குப் பிறகு நடந்ததை நான் சொல்லுகிறேன். நான் சுமதியின் தங்கை. அவன் என்னையும் மாளவிகையையும் அழைத்து வரும்பொழுது திருடர்களால் எதிர்க்கப் பட்டுக் கொல்லப்பட்டான். மாளவிகை வீரசேனனால் அனுப்பப்பட்டாளென்பதை நான் இங்கே வந்த பிறகுதான் அறிந்தேன். நான் முதலில் புருஷனையிழந்து பிறகு தமயனையும் இழந்ததால் பரதேசியாக ஆகிவிட்டேன்" என்றாள். அரசன் அவளைத் தேற்றி தேவியாக இருக்கவேண்டிய இந்த மாளவிகை வேலைக்காரியாக இருக்க நேர்ந்ததா? வெண்பட்டையா கால் துடைக்க வைத்துக்கொள்வது?" என்றான். தாரிணீ தேவியும் கௌசிகையைப் பார்த்து, "நீங்கள் என்னிடம் மாளவிகை யாரென்று சொல்லி யிருக்கவேண்டாமா?" என்றாள். அதற்குக் கௌசிகை "இவள் ஒரு வருஷம் வேலைக்காரியாக இருக்கக் கிரகரீதி இருக்கிறதென்று சோதிடரால் சொல்லப்பட்டது. அதனால்தான் அவள் உன்னருகிலேயே இருப்பது மேன்மை என்று நினைத்து

நான் வருங்காலத்தை எதிர்பார்த்திருந்தேன்" என்று மறுமொழி கூறினாள். அரசன், விதர்ப்ப தேசத்தை யக்ஞசேன மன்னனுக்கும் அவன் தம்பி மாதவ சேனனுக்கும் பிரித்துக் கொடுக்கத் தன் மந்திரிக்குக் கட்டளை யிட்டனுப்பினான். அந்தச் சமயத்தில் அக்கினி மித்திரன் தந்தையான புஷ்பமித்திரன் அச்வமேதயாக மொன்றையேற்பாடு செய்து அக்கினிமித்திரன் மகனை வசுமித்திரனால் யாவரையும் வென்றதால், வேள்வியை நடத்தி வைக்கும்படி அக்கினிமித்திர மகாராஜனுக்குச் சொல்லி யனுப்பினான். உடனே அரசன் சந்தோஷித்து யக்ஞசேனன் மைத்துனனையும் சிறைச்சாலையிலிருந்து விடுவித்தான். இந்த வைபவங்களை யெல்லாங் கண்டு களித்த தாரிணீ தேவி மாளவிகையை யழைத்து அரச னிடம் ஒப்புவித்துத் தானே அவர்களுக்கு மணஞ் செய் வித்து மகிழ்ந்தாள்.

## 6. நாடகத்தின் அழகு.

இந்த நாடகத்தில் சாகுந்தலத்திற் போல நாடக பாத்திரங்களின் பெருமையும், சந்தர்ப்பங்களின் அழ கும், மனத்தின் சூக்ஷ்மமான எண்ணங்களை அறிந்து வெளியிடும் திறமும், விக்கிரமோர்வசீயத்திற்போல சங்கீத சாகித்திய விமர்சையும் தோன்றாவிடினும் இது கதையின் அமைப்பும் சௌந்தரியமும் நிரம்பியுள் ளது. புராணக் கதைகளை எடுத்துக்கொண்டு அவை களை நாடகமாக அமைத்து அழகு படுத்துதல் ஒரு விதமான சோபை. புதுக் கதைகளை உண்டுபண்ணி மனோகரமாக அவைகளை அமைத்தல் மற்றொருவித

மான சோலை. இந்த நாடகம் காளிதாஸனுடைய முதல் நாடகமானபடியால் அதில் அவ்வளவு தேர்ந்த திறங் காணப்படவில்லை. ஆனாலும் இதில் காளிதாஸனுடைய செய்யுளழகும் நாகரிகமான நடையும் நிரம்பியிருப்பதால் இது மிகவும் கொண்டாடக்கூடிய அரிய நாடகமென்றே மதிக்கக்கூடியது.

## அத்யாயம் 6.

## விக்கிரமோர்வசீயம்.

### 1. ஊர்வசி தர்சனம்.

இந்த அழகிய நாடகத்தில் சாகுந்தலத்திலுள்ள மேன்மை இல்லாவிட்டாலும் இது கற்பனா சக்தியும் செய்யுள்களின் அழகும் மிகவும் வாய்ந்தது. நாடகத் துவக்கத்திலுள்ள நாந்தீசுலோகத்தில் மாளவிகாக்னி மித்திரத்திலும் சாகுந்தலத்திலுமுள்ள நாந்தீ சுலோகங்களில் போல சிவபெருமான் பெருமையே ஸ்தோத்தரிக்கப் படுகின்றது. "எந்த பரமசிவன் வேதாந்தங்களில் பூமியையும் சுவர்க்கத்தையும் வியாபித்தவராக வர்ணிக்கப்படுகிறாரோ, எவர் விஷயத்தில் ஈச்வரன் என்ற சொல் மிகவும் பொருந்துகின்றதோ, எவர் வாயுவை யடக்கி யோகம் செய்து முக்தியைப் பிரார்த்திக்கின்றவர்களால் தேடப்படுகிறாரோ, எவர் உறுதியான பக்திக்கு மிகவும் சுபட்டவரோ அவர் உங்களுக்கு மோக்ஷத்தை அளிக்கட்டும்."

ஒருசமயத்தில் புரூரவ சக்கரவர்த்தி சூர்யனை வணங்கி வரும்பொழுது சில அப்சரப்பெண்கள் அழுது கூக் குரலிட்டார்கள். அப்சரப்பெண்களுக்குள் ஊர்வசியும், மேனகையும், ரம்பையும் முக்கியமானவர்கள். அவர்கள் எல்லோரும் கைலாசத்திற் சிவபெருமானைச் சேவித் துத் திரும்பிவரும் வழியில் ஊர்வசியும், அவள்தோழி சித்திரலேகையும் அசுரர்களாற் சிறைப்படுத்தப் பட்

டார்கள். ரம்பை முதலானவர்கள் நடுநடுங்கிக் கூக்குர
லிடவே அரசன் ரம்பையைப்பார்த்து பயப்படாமலிரு
க்கச்சொல்லி ஊர்வசியைச் சிறை மீட்க வெகு வேக
மாகத் தேரை ஆகாயமார்க்கமாகச் செலுத்தப் பாகனுக்
குக் கட்டளையிட்டான். அப்படி வேகமாகச் சென்று
அவன் அசுரர்களை வென்று ஊர்வசியையும் சித்திர
லேகையையும் சிறை மீட்டினான்.

அப்படி அவன் திரும்பி வருகையில் ஊர்வசி பயத்
தால் மூர்ச்சித்திருந்தாள். கொஞ்சங்கொஞ்சமாக மூர்ச்
சை தெளிவதைப்பார்த்த அரசன், "சந்திரன் உதயமான
பிறகு இருட்டால் விடுபட்ட இராத்திரிபோலவும், புகை
யால் விடுபட்ட தீச்சுடர்போலவும், மலைவீழ்ச்சியால்
கலங்கிய கங்காஜலம் தெளிவை அடைவதைப் போல
வும் இவள் மூர்ச்சையிலிருந்து விடுபட்டுத் தெளிந்து
விளங்கிப் பிரகாசிக்கிறாள்" என்று களித்தான்.
"இவளைப் படைத்தவர் நாராயணரிஷி. தன்னை மயக்க
வந்த அப்சரப் பெண்களுக்குத் தன் சக்தியைக் காட்ட
அவர் அவளை உண்டாக்கினார் என்று சொல்லுகிறார்
கள். ஒளிவீசும் சந்திரனோ, சிங்காரமன்மதனோ, வசந்த
னோ இவளை நிர்மாணம் பண்ணும் திறம் வாய்ந்தவர்
களே தவிர மறைகளை ஓதிச் சுகங்களை மறந்திருக்கும்
ரிஷிக்கு இவ்வளவு சிங்காரமான உருவத்தைப் படை
க்கமுடியுமா?" என்று எண்ணினான். அரசன் இப்படி
அவளிடத்தில் ஆசைகொள்ள அவளும் அவன்மீது
காதல்கொண்டாள்.

ஊர்வசி தன் சகிகள் எங்கே என்று வினவ, "அதோ
ஹேமகூட மலையில் கிரகணத்தால் விடுபட்ட சந்திரனைப்

பார்ப்பதுபோல உன்னையே எதிர் பார்த்துக் கொண்டிருக்கின்றார்கள். உன்னை ஒருதரம் கண்டவர்களும் உன்னைப் பார்த்துக்கொண்டே யிருக்க விரும்புவார்களே! அப்படி யிருக்க உன்னுடன் பழகின தோழிகள் எவ்வளவு ஆவலுடன் இருக்கமாட்டார்கள்?" என்று அரசன் சொன்னான். ரம்பை முதலான அப்சரப்பெண்களும் வந்து அரசனை வாழ்த்தித் தோழியைக்கண்டு களித்தார்கள்.

அந்தச் சமயத்தில் சித்திரரதன் என்ற கந்தர்வ ராஜன் தன் தேரில் வெகுவேகமாக வந்து அரசனைப் பார்த்து, "இந்திரன் கந்தர்வ சேனையை ஊர்வசியைச் சிறை மீட்க அனுப்பினான். நாங்கள் வருவதற்கு முன்னாகவே அவள் உன்னாலேயே விடுவிக்கப்பட்டாள்" என்று கொண்டாடினான். பிறகு அவனும் அப்சரப் பெண்களும் சுவர்க்கத்தை நோக்கி ஆகாய மார்க்கமாகச் சென்றார்கள்.

## 2. ஊர்வசி வருதல்.

பிறகு அரசன் தன் ஊருக்கு வந்தது முதல் ஊர்வசியையே நினைத்து வருந்தினான். "அவளைப் பார்த்தது முதல் அந்த சுரலோக சுந்தரி மன்மத பாணத்தால் பிளந்து உண்டாக்கப்பட்ட வழியால் என் மனத்தில் வந்து அங்கேயே விளங்குகிறாள்" என்று நினைத்துநினைத்து நெஞ்சுருகித் துயரத்தில் ஆழ்ந்திருந்தான். ஒருநாள் விதூஷகனும் அவனும் லதாமண்டபத்திற்குச் சென்று மனத்திற்குஆறுதல் உண்டாக்க முயன்றும் அரசனுக்கு மேன்மேலும் வியாகுலமே அதிகரித்தது. அந்தச் சம

யத்தில் ஊர்வசியும் சித்திரலேகையும் ஆகாயமார்க்க மாக வந்து திரஸ்கரணீ வித்தையால்த் தங்களைப் பிறர் பார்க்கமுடியாமல் பண்ணிக்கொண்டார்கள். அவர்கள் அரசனைப் பார்த்து ஊர்வசியினிடத்தில் அவன் கொண்ட காதலைக் கண்டு அவர்கள் களித்துத் தங்களைத் தெரியப்படுத்திக்கொள்ளவே அரசனும் ஊர்வசியும் ஒருவரையொருவர் கண்டு சந்தோஷமடைந்தார்கள். அச் சமயத்தில் தேவதூதன் ஊர்வசியை நடனத்திற்கு அழைத்து வர இந்திரன் கட்டளையிட்டான என்று தெரிவிக்க ஊர்வசி அரசனிடம் பிறகு வருவதாக வாக் களித்துச் சுவர்க்கத்திற்குச் சென்றாள்.

## 3. ஊர்வசியை அடைதல்.

இந்திர சபையில் சரஸ்வதீ தேவியால் இயற்றப்பட்ட இலக்ஷ்மீ சுயம்வரம் என்ற நாடகத்தை நடித்தபோது இலக்ஷ்மி வேஷம் தரித்த ஊர்வசியை, "உனக்கு யாரிடத்திற் காதல்?" என்று கேட்டபோது "புருஷோத்தமனிடத்தில்" என்று சொல்வதற்குப் பதிலாக "புரூரவனிடததில்" என்று அவள் சொன்னாள். சபையோர்கள் எல்லாரும் நகைத்தார்கள். இந்திரன் அவள் மன நிலையை அறிந்து தன் தோழனும் அரசர் திலகனுமிருந்த புரூரவனை என்றும் விக்கிரமன் என்றும் புகழ்பெற்ற பெயரைத் தாங்கின கோமானிடம் சென்று வாழ்ந்து அவனுக்கு மகன் பிறந்தவுடன் திரும்பி தேவ சபைக்கு வரும்படி அவளுக்குக் கட்டளையிட்டான்.

இது தேவ ரகசியம். ஒரு நாள் மாலைக்காலத்தில் அரசனுடைய கஞ்சுகி (வேலைக்காரன்) அரசன் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். காசி ராஜன் பெண்ணான பட்டமகிஷி ஔசீநரீதேவி அரசனுக்கு ஊர்வசியிடத்தில் உண்டான காதலை அறிந்து வருந்தியபோதிலும் அரசன மனத்தைச் சந்தோஷப்படுத்த வெண்ணி விரதம் பூண்டு விரதம் முடியும்வேளையில் அரசனை வரும்படி கஞ்சுகி மூலமாகச் சொல்லியனுப்பினாள். மாலைப்பொழுது மிகவும் அமைதியும் அழகும் நிரம்பி இருந்தது. மயில்கள் பகலெல்லாந் தம் தோகையை விரித்தாடிக் களைத்துத் தமக்காகக் கட்டிவைக்கப்பட்டுள்ள கொம்புகளில் வந்தமர்ந்தன. மாடப்புறக்கள் தங்கும் சாளரங்கள்வழியாக நறுமணம் வீசும் தூபப் புகை வெளியில் வரவே அவை இங்கு மங்கும் பறந்துகொண்டிருந்தன. ஆசாரத்திலும், தெய்வ வணக்கத்திலுஞ் சிறந்த அந்தப்புரப் பெண்கள் மங்களகரமாகத் தங்கத் தீபங்களை எடுத்துச்சென்று பூக்களால் பூசிக்கப்பட்ட விக்கிரக மாடங்களில் அவற்றை வைத்துத் தெய்வங்களை வணங்கினார்கள். அச்சமயத்தில் அரசனும் தர்ம சபையிலிருந்து புறப்பட்டுத் தீபங்களைத் தாங்கிவரும் பணிவிடைப் பெண்கள் தன்னைச் சூழ்ந்துவர விதூஷகனுடன் அந்தப்புரத்தை நோக்கிவந்தான். கஞ்சுகி அரசனிடத்தில் தேவியின் கோரிக்கையைத் தெரிவிக்க அரசனும் அதற்கு இணங்கித் தேவியிருக்கும் மேன் மாடத்திற்குச் சென்றான்.

அரசனும் விதூஷகனும் பளிங்குக் கற்களால் அமைந்த படிக்கட்டின்வழியாக நவரத்தினங்கள் இழைக்கப்

பெற்றுள்ள தங்க மேடைக்குச் சென்று பூர்ணசந்தி ரன் ஒளிவீசும் இன்ப மயமான வேளையில் அங்கே அமர்ந்தார்கள். அப்பொழுது ஆகாயமார்க்கமாக ஊர்வசியும் சித்திரலேகையும் வந்துகொண்டிருந்தார் கள். ஊர்வசி கறுத்த ஆடையைத்தரித்து முத்துக் களாலும், நவரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்டு ஒப்புயர்வில்லாத அழகு வாய்ந்தவளாக வந்தாள். "அரசனுடைய மாளிகை எங்கே?" யென்று அவள் வினவச் சித்திரலேகை, "இதோ பார். இராத்திரி என்ற யமுனாநதியில் பிரதிபிம்பித்திருக்கும் கைலாசம் போல விளங்கும் அரசனதுமாளிகை ஒளிவீசுகின்றது" என்று காட்டி அழைத்து வந்தாள். அந்தச் சமயத்தில் உலகமெல்லாம் இன்புற்று அமைதியாகவும் ஆனந்த மாகவும் இருக்க அரசன் ஊர்வசியை நினைத்து வருந்தி, "பூம்படுக்கையும்,திங்களின் ஒளியும் சந்தனக்குழம்பும் எனக்குச் சுகத்தைக் கொடுப்பனவல்ல. அவள் எண் ணமே என் உள்ளத்தில் எப்போதும் மேலிட்டு நிற் கின்றது" என்றான். ஊர்வசியும் சித்திரலேகையும் திரஸ்காணீ வித்தையால் மறைந்திருந்தபடியால் ஒரு வர் கண்ணுக்கும் புலப்படவில்லை. அந்தவேளையில் பட்டமகிஷி வெண்பட்டாடை யுடுத்து மங்கள சூத் திரத்தைமட்டுந் தரித்தவளாகச் சந்திரனுக்குப் பிரிய மானதும், பரிசுத்தத்தோடு கூடியதுமான இளம்புல்லை மட்டுஞ் சிறுகொத்தாகக் கூந்தலில் தரித்து விரதம் பூண்டபின் கோபம் நீங்கி அமைதி யடைந்தவளாய் அரசனிடம்வந்தாள். அந்த மேடையில் ரோகிணியுடன் கூடின சந்திரனைப்பின் பூசித்து அவள் அரசனைப் பார் த்து, "நான் உங்கள் மனங்கோணாமல் எப்போதும்

நடந்துகொள்ளவும், உங்கள் அன்பு யாரிடம்சென்ற போதிலும் என்னிடமும நீங்கள் தயையுடனிருக்கவும் அருள் புரியும்படி சந்திரபகவானை வேண்டுகிறேன்'' என்றாள். அரசன் அவளைத் தேற்றிச் சந்தோஷப்படுத் திய பிறகு அவள் அவ்விடம் விட்டுத் தன் பரிவாரங் களுடன் நீங்கினாள்.

அரசன் அந்தமேடையிலேயே இருந்துகொண்டிருக் கும்போது, "ஊர்வசியின் கால் நூபுர சப்தமாவது என் காதில் விழாதா? நான் அறியாமல் பின்பக்கம் அவள் வந்து விளையாட்டாக என் கண்களைத் தன் கைகளால் மூடி என்னைக் களிப்பிக்கமாட்டாளா? நாணத்தால் தயங்கும் ஊர்வசியைத் தோழி சித்திரலேகை கட் டாயமாக வற்புறுத்தி அடிமேலடிவைத்துத் தன்னைப் பின் தொடர அழைத்து வரமாட்டாளா?'' என்று எண்ணமிட்டான். அச்சமயத்தில் ஊர்வசி பின் புற மாக வந்து அவன் கண்களைத் தன் கைகளால் மூடவே அரசன் களித்து அவள் கைகளே அவ்வளவு இன்பத் தைக் கொடுக்குமென்று அறிந்து அவற்றைக் கெட்டி யாகப் பிடித்துக்கொண்டான். பிறகு அரசன் அவ ளைப் பார்த்து, "உலகத்தை ஒருகுடையின்கீழ் ஆண்டு பலவரசர்கள் வணங்க அவரது முடிகளால் சிறந்து விளங்கிச் சிங்காசனத்தில் நான் அமர்ந்திருத்தலினும் உன் அன்பை உயர்வாகக் கருதுகின்றேன். நீ என்ன ருகே இல்லாதபோது எனக்குத் துன்பத்தையே கொடு த்துவந்த சந்திரகிரணம் முதலிய இன்பப் பொருள்கள் யாவும் நீ என்னை யடைந்தபின் எனக்குப் பரமசுக த்தை யளிக்கின்றன. காணுமற் கண்ட இன்பம்

அதிக சுகத்திற்குக் காரணமன்றோ? வெய்யிலில் வருந்தினவனுக்கன்றோ நிழலின் அருமை தெரியும்?" என்று சந்தோஷமாக மொழிந்தான். பிறகு அவர்கள் வெகுகாலம் தம்பதிகளாக வாழ்ந்திருந்தார்கள்.

## 4. ஊர்வசியைப் பிரிதல்.

இப்படி யவர்கள் அன்னியோன்னியராக விருந்த போது ஒருநாள் ஊர்வசி பெண்கள் போகத் தகாத குமாரவனமென்ற கானகத்தில் சென்றாள். உடனே அவள் ஒரு கொடியாக மாறிவிட்டாள். அவள் பிரிவாற்றாமையால் புரூரவன் காடெல்லாம் அவளைத் தேடி ஓய்ந்து வருந்திப் பித்துப் பிடித்தவன்போலப் புலம்பலாயினான். இது நான்காவது அங்கத்திற் காளிதாஸனால் வெகு அழகாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. இதிலுள்ள செய்யுட்களும், பாட்டுக்களும் மிகவும் இன்பம் பயப்பனவாம்

அரசன் ஊர்வசியின் பிரிவால் வெறிபிடித்துப் பலவிதமாகக் கதறிக்கொண்டே காட்டி லலைந்தான். ஒரு சமயம் அவன் மழை முகிலைப்பார்த்து, "அடே பாவி! அரக்கா! நில், நில். என் காதலியை எங்கே தூக்கிக் கொண்டு போகிறாய்? இவன் ஆகாயத்திற் கிளம்பி என் பேரில் அம்புகளை எய்கிறான்" என்று கதறுவான், உடனே மனந்தெளிந்து, 'என் மதிமயங்கிப் போயிற்று. இது மேகமல்லவா, அரக்கனல்ல. இது வானவில்லு, வில்லல்ல. இது மழை, அம்புகள் அல்ல. இது மின்னல், ஊர்வசியல்ல" என்று தேறுவான். "ஒரு வேளை

அவன் கோபித்துக்கொண்டாலும் அக்கோபம் நீண்ட காலம் நிலைக்காதே. ஒரு வேளை அவள் சுவர்க்கம் போனளென்றாலும் அவளுடைய அன்பு அவள் அப்படிச் செய்ய இடங்கொடுத்திராதே. அசுரர்கள் அபகரித்தார்கள் என்று சொல்லவும் இடம் இல்லையே; ஏனென்றால், என்னெதிரில் அவர்கள் அப்படிச் செய்ய முடியாது. அவள் காணமல் போனது என்ன விதிப்பயனே அறியேனே!" என்று வருந்தினன்.

அவன் பின்னும் வருந்தி வெறிகொண்டு பசும்'புல் வளர்ந்த ஓரிடத்தை ஊர்வசியின் ரவிக்கையோவென்று சந்தேகித்து அதனை நெருங்கினன். அங்கேயிருந்த மயிலைப் பார்த்து, "ஊர்வசியைக் கண்டாயோ?" வென்று கேட்டான். அப்படியே குயில்களையும், அன்னப் பக்ஷிகளையும், சக்ரவாகப் பக்ஷிகளையும், வண்டுகளையும் பின்தொடர்ந்து சென்று "நீ கண்டாயோ? நீ கண்டாயோ?" வென்று கேட்டுக்கொண்டே போனன். பிறகு மலைகளையும் ஆறுகளையும் கேட்கத் தொடங்கினன். இப்படி அவன் வருந்தும்போது ஆகாயவாணி, "உன் காலடியிலிருக்கும் மணி கௌரீ தேவியின் காலிலிருந்து உண்டானது. அதற்குச் சங்கமனீய மணியென்றுபெயர். பிரிந்தவர்களைச் சேர்த்து வைக்கும்" என்று சொல்லிற்று. அதைச் சந்தோஷமாக எடுத்துக்கொண்டு தன் மனத்துக்குக் களிப்பை யுண்டாக்கின ஒரு கொடியை அந்த மணியால் தொடவே அது ஊர்வசியாக மாறி நின்றது. அரசன் துயரம் நீங்கி மிகவும் ஆனந்தமடைந்து அவளுடன் தன் நகரத்திற்குத் திரும்பி வந்தான்.

## 4. ஊர்வசியின் சாம்ராஜ்யம்.

சிலகாலம் ஊர்வசியுடன் கூடிஅரசன் சுகமாக விருந்து அரசாட்சி செய்துவருகையில் ஒருநாள் ஒரு கழுகு அந்தச் சங்கமனீய மணியைத் தூக்கிக்கொண்டு போய் விட்டது. அரசனுடைய அம்புக்கெட்டாத தூரத்திற் பறந்துபோன அக்கழுகு ஓரதிசயமான அம்பால் அடிபட்டுக்கிழே விழ அதை அரசனிடம் ஒப்புவித்தார்கள். அந்த அம்பில், "புரூரவனுக்கும் ஊர்வசிக்கும் பிறந்த ஆயுவுடைய அம்பு" என்று வெட்டப்பட்டிருந்தது. அச்சமயத்தில் ஒரு தவப் பெண் ஓரழகிய குமாரனை அழைத்து வந்து, "இவன் உன் செல்வக் குமாரன்" என்று அரசனிடம் ஒப்புவித்தாள். அரசன் அவனைக் கண்டு, "என் கண்களில் ஆனந்த பாஷ்பம் நிறைகின்றது. மனம் தெளிந்து இன்பமடைகின்றது. இவனை மார்புறத்தழுவ அவாக் கொள்ளுகின்றேன்" என்று மகிழ்ந்துரைத்தான். அப்பொழுது அந்தத் தவப்பெண், "ஊர்வசி இவனை என்னிடம் சிறு குழந்தையாக விருக்கையில் விட்டுச்சென்றாள். இவனுக்கு நாமகரணமிட்டுக் கல்வியும் வில்வித்தையுங் கற்பித்தவர் ச்யவன ரிஷியாவர். இவன் இப்பொழுது கழுகின்மேலம்பு எய்தமையே இவனுக்குத் தக்கவயது வந்துவிட்டதைக் காட்டுகின்றது. இவன் ரிஷியின் ஆசிரமத்தில் இனி இருத்தல் சரியன்று என்று ஊர்வசியிடத்தில் கொண்டு விட ச்யவனர் உத்தரவிட்டிருக்கிறார்" என்றாள். அப்பொழுது ஊர்வசி அங்கே வர அந்தப் பாலன் அவளை வணங்கினான். ஊர்வசி இந்திரன் கட்டளையை நினைத்து மனங் கலங்கி அழுதாள். அரசன்,

'என்ன காரணம்'? என்று வினவ "எப்பொழுது உன் மகனை அரசன் காண்கின்றனரோ அப்பொழுது நீ புறப் பட்டு இங்கே வருவாயாக என்று இந்திரன் கட்டளை யிட்டிருக்கிறன். எப்படி நான் உம்மைப் பிரிந்து போவேன்?" என்று வருந்தினாள். உடனே அர சன் குமாரனுக்குப் பட்டம் கட்டித் தான் வனவாசம் போவதாகத் தீர்மானித்து ஊர்வசியைத் தேவலோகஞ் சென்று தன் வரவை எதிர் பார்த்திருக் கச் சொன்னான். அப்பொழுது நாரதர் அங்கே வந்து, "தேவாசுர யுத்தம் சிறிதுகாலத்தில் ஆரம்பிக்கும். அப் போது இந்திரன் உன் உதவியை யவசியம் நாடுவான், ஆகையால் நீ தவஞ்செய்யச் செல்லலாகாது. ஊர்வசி உன்னுடனேயே நித்திய தர்ம பத்தினியாக விருக்க இந் திரன் கட்டளையிட்டிருக்கிறன்" என்றார். அரசனும் ஊர்வசியும் அளவில்லாத ஆனந்தமடைந்து ஆயுவுக்கு இளவரசுப்பட்டங் கட்டி வெகுகாலம் சந்தோஷமாக வாழ்ந்தார்கள். நாடக சம்பிரதாயமாகச்சொல்லப்பட்ட முடிவுரையான பரதவாக்கியம் பின்வருமாறு நாட கத்தில முடிவு பெருகிறது.

"ஒருவருக்கொருவர் சேர்ந்து ஒரே இடத்தில் இல் லாத பூமகளும் நாமகளும் சேர்ந்திருந்து நல்லவர்க ளுக்குச் சுகத்தைக் கொடுக்கட்டும். எல்லோரும் தீங்குகளிலிருந்து நீங்கி இஷ்டங்களை யடைந்து ஆனந்தமடையட்டும்."

## 6. விக்கிரமோர்வசீயத்தின் அழகு.

இந்த அழகிய நாடகத்திற்கு ஸம்ஸ்கிருத அலங்கார சாஸ்திரத்தின்படி த்ரோடகம் என்று பெயர். த்ரோட

கம் என்பது ஐந்து, ஏழு, எட்டு அல்லது ஒன்பது அங்கங்களடங்கித் தேவதைகள், மனிதர்கள் விஷயமான கதையைக் கொண்டதாய் அனேகமாக ஒவ்வோரங்கத்திலும் விதூஷக சம்பந்தத்தோடு அமைந்துள்ள நாடகமாகும். இந்த நாடகத்தில் சாகுந்தலத்திற் போல லோகானுபவமும், மனத்தின் எண்ணங்களை ஆழ்ந்தறிந்து அழகாகச் சொல்லுந் திறமும் இல்லாவிட்டாலும் செய்யுட்களின் அழகும், சங்கீத சௌந்தரியமும் நிறைந்திருக்கின்றன. இந்திய நாடகங்களில் இந்தப்போற் சிங்கார ரஸத்தைத் தெய்வமனித சம்பந்தமாகவும், செய்யுள் சங்கீதம் பரிமளிக்கவும் வர்ணிக்கப்பட்ட நாடகம் வேறில்லை. இம்மாதிரியான நாடகங்கள் இங்கிலீஷில் ஆபரா (Opera) என்றுசொல்லப்படும். அவைகள் அனேகமாகத் தற்காலத்தில் நடிக்கப்படும் நாடகங்கள்போலக் கேவலம் பாட்டுக்கொத்தாகவே மட்டுமிருக்கும். எண்ணங்களின் அழகும், செய்யுட்களின் சௌந்தரியமும், நாடக பாத்திரர்களின் பெருமையும், சம்பாஷணைகளின் காம்பீர்யமும் சங்கீதத்துடன் பொருந்தி இருப்பது மிகவும் அருமை. அத்தகைய பொருத்தம் விளங்குவதுதான் விக்கிரமோர்வசீயம் என்ற நாடகத்தின் விசேஷ குணம். ஊர்வசி அப்சரப்பெண்ணானபடியால் மனிதப்பெண்ணிடத்தில் வர்ணிக்கக்கூடிய அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு முதலிய குணங்களும், வருங்கால நிகழ்ச்சிகளை அறியக்கூடாததால்உண்டாகும் பரிதாபங்களும் வர்ணிக்க இடமில்லை. தெய்வப்பெண்களின் மனத்தை வர்ணிக்க முயன்றால் இத்தகைய சோபைகளுக்கு இடமில்லாவிட்டாலும் ஒளி வீசும் அழகும், அமானுஷமான

இன்பநுகர்ச்சிகள், திரஸ்கரணீ வித்தையின் பிரயோகம், ஆகாயகமனம் முதலிய அம்சங்கள் வர்ணிக்க இடமுண்டு. தலைவனும் தலைவியும் கூடும்போது உண்டாகும் உள்ளன்பின் இன்பத்தையும் பிரியும்போது உண்டாகும் அன்பின் துனபத்தையும் வர்ணிப்பதில் இவ்விரண்டு நாடகங்கட்குள் சூக்ஷ்மமான வேற்றுமை யொன்றுண்டு. கூடும்வேளையில் நாயகியின் சௌந்தரியமும் யௌவனமும் வெகு விரைவாகக் குறையுமே என்ற பயமில்லை. பிரியும் வேளையில் மனிதர்களிடத்தில் தோன்றுவதுபோல என்ன பாபத்தால் நேர்ந்ததோ வென்ற அச்சத்துடன் கூடிய பச்சாத்தாபம் இராது. ஆகையால் தெய்வப்பெண்ணின் சிங்காரத்தைக் கூடும்பொழுதும் பிரிந்தபொழுதும் வர்ணிக்கும் நடை வேறுமாதிரியாகவே இருக்கவேண்டும். ஆகையால் சகுந்தலையின் வர்ணனையைப்போல் ஊர்வசியின் வர்ணனை இல்லையே என்று எண்ணக்கூடாது. காளிதாஸன் மகிமை நாடக பாத்திரர்களுக்கும், கதையின் முக்கிய நோக்கத்திற்கும் பொருத்தமாக எழுதும் திறமையே. இந்த நாடகத்தை அடிக்கடி படிக்கப்படிக்கத்தான் அதனுடைய பொருத்தமும், தாத்பரியமும், சௌந்தரியமும் நன்கு விளங்கும்.

## அத்யாயம் 7.

## சாகுந்தலம்.

### 1. சகுந்தலா தர்சனம்.

இந்த நாடகம் காளிதாஸன் இயற்றிய நூல்களில் மிகவும் சிறந்தது. அதில் வர்ணனைகளின் அழகும், நாடக பாத்திரர்களின் மேன்மைகளை அவர்கள் பேச்சாலும் செய்கையாலுங் காட்டுந் திறமையும், கற்பனையின் சிறப்பும், பாஷையின் எழிலும் எல்லோருடைய மனத்தையும்கவர்ந்துகொள்ளுந்தன்மை யுள்ளவையாக இருக்கின்றன. அதன் கதையின் சாரத்தைத் தெரிவித்துப் பிறகு கதையின் பெருமையை யுணர்த்துகிறேன்.

ஒவ்வொரு நாடகத்திலும் கதையை நாடகரூபமாகத் தெரிவிப்பதற்கு முன் நாந்திசுலோகமென்று வழங்கும் தெய்வவணக்கமடங்கிய செய்யுளையும், நூலாசிரியர் பெருமையை யுணர்த்தும் வசனத்தையும், செய்யுளையும் எழுதுவது நாடகசம்பிரதாயம். அதற்குப் பிரஸ்தாவனை என்று பெயர். அப்பிரஸ்தாவனை சாகுந்தலத்தில் மிகவும் அழகாகவும் கம்பீரமாகவும் இருக்கின்றது. நாந்திசுலோகத்தில் அஷ்டமூர்த்தியான பரமேச்வரனைக் கவி வணங்கித் துதிக்கிறார்.

"படைக்கப்பட்ட பொருள்களுள் முதலாகத் தோன்றின பரம்பொருளும், வேள்விகளில் ஓமஞ் செய்யப்பட்ட ஆகுதியை அந்தந்த் தெய்வங்களுக்குச் சேர்ப்பிக்கும் அக்கினியும், யாகஞ் செய்யும்

யஜமானனும், காலத்தை வரையறுக்கும் சூரிய சந்திரர்களும், உலகமெங்கும் வியாபித்திருக்கும் ஆகாயமும், எல்லோருக்கும் இருப்பிடமுங் காரண முமாக விருக்கும் பூமியும், எல்லோருக்கு முயி ராக விருக்கும் வாயுவும் ஆகிய இவ்வெட்டு உரு வங்களாலும் விளங்கும் பரமேச்வரன் உங்களைக் காப் பாற்றட்டும்" இந்தச் செய்யுளில் ஈசனைத் துதிப்பது தவிர நாடகத்தையும் சகுந்தலை, துஷ்யந்தன் இவர் களுடைய பெருமையையுங் குறிப்பாக வுணர்த்தியிருப் பதாக அறிஞர்கள் சொல்லுகிறார்கள்.

சாகுந்தலம் காளிதாஸன் கவிச்சக்கரவர்த்தி யென்று பெருமைவாய்ந்தபிறகு அவரால் எழுதப்பட்ட நூல் என்பது பிரஸ்தாவனையிலிருந்தே விளங்கும் மாள விகாக்னிமித்ரமென்ற நாடகத்திற் பிரஸ்தாவனையிற் காளிதாஸன் தான் யாரென்றும் தன் நாடகம் புதிதாக இருப்பினும் ஏன் அதைச் சபையோர்கள் செவிகொடு த்துக் கேட்கவேண்டுமென்றும் விவரமாகவும் விநயமா கவும் மொழிந்திருக்கிறார். அத்தகைய நயமொழியொன் றும் சாகுந்தலப் பிரஸ்தாவனையில் இல்லை. ஆனாலுங் காளிதாஸனுக்கு இயற்கையிலேயே ஏற்பட்டிருக்கும் அமைதியும் வணக்கமும் அவருடைய பூர்ண சக்தி பரி மளித்தபிறகு இயற்றின சாகுந்தலத்தின் பிரஸ்தாவனை யிலுந் தெரிகின்றன. சூத்திரதாரன் சொல்லும் முகாந் தரமாக, "விஷயங்களை எடுத்துணர்த்தும் அறிவு சிறந் ததாக விருந்தாலும் எல்லா வித்துவான்களும் புகழ்ந் தாலல்லது என் திறமையை நான் சிறந்ததாக ஒப்புக் கொள்ளமாட்டேன். நூல் பயிற்சி மிகுதியுமிருந்தா

லும் தானாகவே இயற்றும் நூலில் மாசற்ற அழகு இருக்கிறதா இல்லையா என்ற விஷயத்தில் ஒவ்வொரு வருக்கும் துணிவான நம்பிக்கை இல்லாமல் ஐயமாகவே இருக்கும்" என்று காளிதாஸனே சொல்லியிருக்கிறார்.

ஒரு நாள் சந்திர வம்ச திலகனான துஷ்யந்த மகா ராஜன் வேட்டையாடிக்கொண்டு கானகத்திற் புகுந்து துஷ்ட மிருகங்களைக் கொன்று வேகமாகத் தன்னு டைய ரதத்தைச் செலுத்திக்கொண்டு சென்றபொழுது அவன் முன் ஒரு மான் குட்டி எதிர்ப்பட்டது. அது மிகவும் பயந்து வெகு வேகமாக வெருண்டு பாய்ந்து ஓடியும் அரசனுடைய ரதத்தில் அதிவிரைவான குதி ரைகள் பூட்டப்பட்டிருந்ததால் அந்த ரதம் அதிவேக மாக அந்த மானைப் பின்பற்றியது. அப்பொழுது தேர்ப்பாகன் அரசனைப் பார்த்து, "மானையும் நோக்கி நாண் பூட்டி வில்லைக் கையிலேந்திய உங்களையும் நோக் கும்பொழுது பினாகியான ஈசனையே பார்ப்பதுபோ லிருக்கிறது" என்றான். அரசன் அந்த மான் துள்ளி யோடுவதைப் பார்த்து "அதோ பார்! தன் கழுத்தை யழகாக வளைத்துப் பின்னால் ஓடிவருந் தேரை நோக்கிய வண்ணம் அம்மான் விரைந்து செல்லும்போது அம்பா னது தன் மேற்பாயுமென்னும் பயத்தால் தன் உடலின் முற்புறத்தில் பிற்பகுதி மறைந்துவிட்டதோ வென்னும் படி தன் உடலை ஒடுக்கிக்கொண்டு களைப்பால் திறந் துள்ள தன் வாயிலிருந்து புல்லைக் கீழே சிதறிக்கொண் டும் பாய்வதைப்பார். அவ்வேகத்தில் அது பெரும் பாலும் அந்தரத்திலும் சிறிதே தரையிலுமாகக் குதித் துச் செல்கின்றது" என்றுரைத்தான். உடனே தேர்ப்

பாகன் தேரை வேகமாய்ச் செலுத்த, அரசன் தேர்ப் புரவிகளின் வேகத்தை மெச்சி, "கடிவாளங்களைத் தளர்த்தியவுடனே இப்புரவிகள் முன்னே செல்லும் மானின் வேகத்தைக் கண்டு பொறாமல் தம்முடல்களை நீட்டிக்கொண்டு செவி முனைகள் அசைவற்று நிமிரக் குளம்பின் அதிர்ச்சியாலெழும் தூசியும் தம்மை யணுகாமல் பின்னிடும்படி வெகு துரிதமாய்த் தாவி போடுகின்றன" என்றான் பின்னும் "தேர் ஓடும் வேகத்தால் தூரத்தில் மிகச் சிறியனவாகத் தோன்றின பொருள்கள் விரைவில் பெரிதாகச் சமீபத்திலேயே புலப்படுகின்றன. நடுவில் முறிந்த பொருள் ஒட்டி நிமிர்த்தினதுபோல் தோன்றுகின்றது. வளைந்தது நேராவதுபோல் தோன்றுகின்றது. தூரத்திலிருப்பது ஒரு நொடியில் நெருங்குகிறது. அருகில் இருப்பது ஒரு நொடியில் வெகு தூரம் விலகிப் போகிறது" என்று அரசன் வர்ணித்தான். இப்படித் தேர் அந்த மானை நெருங்கியவுடன் அம்பை எய்து அதைக் கொல்ல அரசன் பாணத்தைத் தொடுத்தபொழுது, பக்கத்தில் "அரசனே! இது ஆசிரம மிருகம். இதைக் கொல்லக்கூடாது" என்ற சத்தம் கேட்டது. உடனே அரசன் அம்பை எய்யாமல் நிறுத்தித் தேரையும் நிறுத்தச் சொன்னான். உடனே ஒரு தபசி எதிற்பட்டு, "பஞ்சுப் பொதியில் நெருப்பைப் போடுவதுபோல் இந்த மிருதுவான மிருக சரீரத்தில் அம்பை எய்யவேண்டாம். அதிநுட்பமான மானுடைய உயிர் எங்கே, வஜ்ராயுதம்போன்ற கூர்மையான அம்பு எங்கே? உங்களுடைய அம்பை அம்புறாத் தூணியில் வைக்கவேண்டும். உங்களுடைய ஆயுதம்

மெலிந்து வருந்தினவர்களைப் பாதுகாக்கவே தவிரக் குற்றமற்றவர்களை அடிப்பதற்கல்லவே" என்று கம்பீரமாக மொழிந்தார். அரசன் அப்படியே அம்பை அம்புறாத்தூணியில் வைக்கவே, அந்தத் தபசி, "புரு வம்சத்தில் பிறந்த உனக்கு இது மிகவும் தகுதியே. இத்தகைய குணமுள்ள நீ இந்தப் புண்ணிய தேசத்தினது சக்கரவர்த்தியாக விளங்கும் மகா புருஷனைப் பிள்ளையாக அடைவாயாக" என்று ஆசீர்வதித்தார். பிறகு அவர் அந்த ஆசிரமத்தில் வந்து அதிதி பூஜையை யேற்றுக்கொள்ள வேண்டுமென்று அரசனை வேண்ட அவனும் ஒப்புக்கொண்டான். அரசன், "இது யாருடைய பர்ணசாலை?" யென்று வினவ அவர் "இது கண்வர் ஆசிரமம். அவர் தன் குழந்தை சகுந்தலாவுக்குத் தீங்குகள் வாராமலிருக்கச் சோமதீர்த்தத்திற்கு யாத்திரையாகப் போயிருக்கிறார். வரும்வரையில் அவளை அதிதி பூஜை செய்ய நியமித்திருக்கிறார்" என்றார்.

பிறகு அரசன் தேருடன் ஆசிரமத்தை நெருங்கிப் பாகனைப்பார்த்து, "ஆசிரமத்திற்சென்று புண்ணிய ஸ்தலங்களைப் பார்த்து என்னைப் பரிசுத்தம் பண்ணிக் கொள்ளுகிறேன். ஆசிரமம் இருக்கும் தன்மையை நோக்கினாயா? வனநெல் இறைந்து கிடக்கின்றது. கற்களில் இங்குதிப் பழங்கள் பிளக்கப்பட்டிருக்கின்றன. மிருகங்கள் மனிதர்களிடத்தில் பயமில்லாமல் பிரியமாகவும் நம்பிக்கையுடனுமிருந்து மனிதன் பேச்சைக்கேட்டு நடுங்கும் காட்டு மிருகங்களைப்போல் அச்சப்படாமலிருக்கின்றன. நீராடியபின் குளப்படிகளில் உலர்த்தப்பட்ட மரவுரிகளிலிருந்து சொட்டும்

நீர்த்துளிகளின் அடையாளங்கள் காணப்படுகின்றன. மிருதுவான காற்றினால் அசையும் அருவியின் வெள்ளத்தால் மரங்களின் வேர்கள் நனைக்கப்பட்டிருக்கின்றன. இளந் தளிர்களின் சிவப்பு நிறத்தில் ஓமப்புகையால் உண்டான நிறம் இடையிடையே கறுப்பு கலந்திருக்கிறது. சிறு மான்குட்டிகள் பசும் புல்லைத் தின்றுக் அச்சமின்றி மெல்ல மெல்ல நடந்து முனிவர்கள் தர்ப்பைப்புல்லை அறுத்தபிறகு பசுமையாக விளங்கும் தரையில் விளையாடிக் கொண்டிருக்கின்றன. தேரை இங்கேயே நிறுத்திவிடு. இனிச் சத்தத்துடன் ஆடம்பரமாகத் தேரில் சென்றால் முனிவர்களின் தவத்திற்கு இடையூறு உண்டாகும்" என்றுரைத்தான். உடனே பாகன் தேரை நிறுத்த, அரசன் தேரிலிருந்து இறங்கி அந்த அழகிய ஆசிரமத்திற்குள் சென்றான்.

துஷ்யந்தன் இப்படி ஆசிரமத்திற்குள் நுழைந்த பொழுது அவனது வலதுதோள் துடித்தது. அவன், "இச்சகுனத்தின் பொருள் இன்னதென்று தெரியவில்லை. எனினும், பின்னால் நடைபெறும் சம்பவங்களைச் சில குறிகள் முன்னால் உணர்த்துவது இயல்பே." என்று நினைத்து மனத்தைச் சமாதானஞ் செய்துகொண்டான். அவ்விடத்திலே மூன்று ஆசிரமப் பெண்கள் செடிகளுக்குத் தண்ணீர் விட வருவதைக் கண்டு அவர்களுடைய அழகைக் கண்டு வியந்தான். "அந்தப்புரத்திற் காண்பதற்கு அரிதான இவ்வளவு அழகு ஆசிரமப் பெண்களுக்கு இருக்குமானால் சிங்காரவனக்கொடிகள் காட்டுக் கொடிகளாலே தோல்வியடைந்தன வென்றே சொல்லவேண்டும்" என்று

நினைத்தான். அவர்களுக்குள் அதிக ஒளியுடன் தெய்வப் பெண்ணைப்போல விளங்கின சகுந்தலையின் அழகைக் கண்டு அரசன் ஆச்சரியப்பட்டு, "இந்த இயற்கை அழகுடன் விளங்கும் யௌவன மங்கையை ஆசிரமத்திலேயே இருந்து தவஞ் செய்யும்படி நியமித்த கண்வர் செய்த காரியம் கருநெய்தற் பூவினைக் கருவியாகக் கொண்டு சமித்தை வெட்டுவதை யொக்கும். இவள் அழகிய ஆடை யாபரணங்களைத் தரிக்காவிட்டாலும், பாசியாற் சூழப்பட்ட தாமரை எப்படிக் குன்றாத அழகுடன் விளங்குமோ, சந்திரபிம்பத்திலிருக்கும் களங்கம் எப்படிச் சந்திரனினழகைக் கெடுக்காமல் புதிய சோபையை அதற்குத் தருமோ, அப்படி இவளுடைய இயற்கை அழகு மரவுரியால் குன்றாமல் அதிகமாகவே சோபிக்கின்றது. அழகும் லாவண்யமும் பொருந்திய தேகமுள்ளவர்களுக்கு எதுதான் அணியாக உதவாது?" என்று தனக்குள்ளாகவே நினைத்தான். ஆனால் அவள் அந்தணப் பெண்ணாயிருந்ததால் தான் அவளை மணஞ் செய்துகொள்ள முடியாதே யென்றும் மணஞ்செய்து கொள்ளக்கூடாத மங்கையை மனத்தால் நினைப்பதுந் தவறாகுமே என்றும் நினைத்தான். ஆனால் மறுபடியும் ஆலோசனை செய்து, "இவள் க்ஷத்திரியர் மணஞ் செய்துகொள்ளக்கூடியவளாகவேதான் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் தூய்மை பொருந்திய என் மனம் இவளை நாடுமா? தூய்மை வாய்ந்தவர்களுக்கு ஐயமேற்பட்டால் அவர்களுடைய மனத்தின் தீர்மானமே பிரமாணமன்றோ?" என்று தன் மனத்தைத் தேற்றிக்கொண்டான்.

அவ்வேளையில் ஒரு வண்டு சகுந்தலையையே பின் தொடர்ந்து பறந்து வந்தது. அவள் தன் தோழிகளான அனசூயையையும் ப்ரியம்வதையையும் நோக்கி, "என்னைப் பாதுகாக்கவேண்டும்" என்று முறையிடவே, அவர்கள் விளையாட்டாக, "எங்களால் உன்னை எப்படி யாதரிக்கமுடியும்? துஷ்யந்தன் இந்நாட்டுக்கரசனாக விருப்பதால் அவனைக் கூப்பிடு" என்று சொல்லிப் பரிகசித்தார்கள். அவள் ஆரவாரித்துக் கூவியதைக் கேட்ட அரசன் தான் அவர்களுடன் நெருங்கிப் பேச இடம் கிடைத்ததென்று மதித்து மகிழ்ந்து, "துஷ்யந்தன் உலகை ஆண்டு கெட்டவர்களைக் கண்டித்துத் தண்டித்துவரும்பொழுது எவன் அச்சமின்றி ஒன்றுமறியாத தூய்மை பொருந்திய தவப்பெண்களிடத்தில் அக்கிரமமாக நடக்கிறவன்?" என்று சத்தம் போட்டுக்கொண்டு அப்பெண்களிருக்கு மிடத்தில் வந்து சேர்ந்தான். பிறகு அனசூயை தாம் கூறியது வண்டைக்குறித்துச்சொன்ன வார்த்தையென்று வினயமாகச் சொல்ல, அரசன் சகுந்தலையை நோக்கி, "தவம் ஓங்கிவளர்ந்து வருகிறதா?" என்று வினவினான். சகுந்தலை அரசனை நோக்கி நாணித்தலையைக் குனிந்து நிற்க, அனசூயை சகுந்தலையை நோக்கி அரசனுக்குக்கனிவர்க்கங்களைக் கொண்டுவந்து கொடுத்து உபசாரம் பண்ணச் சொன்னாள். அதற்கு அரசன், "உங்கள் இனியசொல்லாலேயே நீங்கள் என்னை உபசரித்தாய்விட்டது" என்று சொல்லப் பிறகு எல்லோரும் குளிர்ந்து நிழல் நிறைந்த வேதிகையில் அமர்ந்தார்கள். சகுந்தலை அரசனைக்கண்டதுமுதல் அவனிடத்தில் மனமிணங்கி, தூய்மை வாய்

ந்து காம மென்பதேயில்லாத தபோவனத்தில் தனக்கு விருப்பம் வந்ததைக்கண்டு வருந்தி வந்தவர் யார் என்றுவினவும்படியாக அனுசூயையைத் தூண்டினாள். அனசூயை அரசனை நோக்கி, "உங்களுடைய இனிமை யும் பிரியமும் வாய்ந்த பேச்சினால் உங்களிடத்தில் எங்களுக்கு உண்டாகிய நம்பிக்கையே உங்களை வினவும்படி எங்களைத் தூண்டுகின்றது. எந்த ராஜரிஷி வம்சம் உங்களால் விளங்குகின்றது? எந்த நாடு உங்கள் பிரிவாற்றாமையால் வருந்துகின்றது? எதற்காக இந்த இளம்பிராயத்தில்தபசுசெய்யும்எண்ணம்உதித்ததோ?" என்று கேட்டாள். அரசன் எப்படி உள்ளதை மறைக்காமலும் வெளியிடாமலுமிருத்தல் இயலுமென்றெண்ணி, "நான் ஆசிரமத்திலுள்ளவர்களின் க்ஷேமங்களையறிய அரசனால் அனுப்பப்பட்ட தர்மாதிகாரி" என்று மொழிந்தான். பிறகு அவன் அவர்களை நோக்கி, "கண்வர் நித்தியப் பிரம்மசாரியென்று யாவரும் அறிந்த விஷயம். இந்தக் கன்னிகாரத்தினம்அவர் பெண்ணாவது எப்படி?" என்று வினவ அனசூயை, "இவள் மேனகையென்ற அப்சரப் பெண்ணினிடத்தில் விசுவாமித்திரருக்குப்பிறந்த பெண். கண்வரால் வளர்க்கப்பட்டவள்" என்றாள். அதைக்கேட்டு அரசன் வியந்து, "நீங்கள் சொல்வது உசிதமாகவே இருக்கின்றது. சாமானிய மனிதர்களுக்கு இவ்வளவு ஒளியும் அழகும் இருத்தல் அருமையே. பளபளவென்று கண்ணைப் பறிக்கும் பிரகாசம் விண்ணுலகின் சம்பந்தத்தாலன்றி மண்ணுலகில் உண்டாகாது" என்றான். சகுந்தலை வெட்கித் தலை குனிந்தாள். அரசன் பிரியம்வதையை நோக்கி, "கிருகஸ்த

தர்மத்திற்காக மணஞ் செய்து கொடுக்கும் வரையில் இப்படி வானப் பிரஸ்தாசிரமத்தில் இவளிருப்பாளா, அன்றி அழகு வாய்ந்த கண்களையுடைய இவள் இந்தப் பெண் மான்களுடனேயே எப்பொழுதும் இருப்பாளா ?" என்று கேட்டான். அதற்குப் ப்ரியம்வதை, "அவளைத் தகுந்த நாயகனுக்கு மணஞ் செய்துவைக்க வேண்டு மென்றே கண்வருடைய எண்ணம்" என்று சொல்ல, அரசன், "மனமே! ஆசையைக் கடைப்பிடி. இப்பொழுது ஐயம் நீங்கிவிட்டது. நெருப்புத் துண்டமென்று நீ நினைத்த பொருளே தொடக்கூடிய மாணிக்கமாக விருக்கிறது" என்று தனக்குள் சொல்லித் தெளிந்தான்.

சகுந்தலை வெட்கத்தால் பர்ண சாலைக்குப் போவதாகச் செல்லிப் புறப்படவே, ப்ரியம்வதை அவளை நோக்கி, " நீ கவனிக்கவேண்டிய இரண்டு செடிகளுக்கு நான் ஜலம் வார்த்திருக்கிறேன். ஆகையால் நீ இரண்டு செடிகளுக்கு ஜலம் விட்டு உன் கடனைத் தீர்த்துக் கொண்ட பின்புதான் போகலாம்" என்றாள். அரசன் ப்ரியம்வதையைப் பார்த்து "அம்மா! உங்கள் தோழி செடிகளுக்கு நீர் தூக்கிக் கொட்டி மிகவும் களைப்படைந்திருக்கிறாள். தோள்கள் மெலிந்து வாடக் கைகள் சிவக்கப் பெருமூச்சு விட்டு வியர்த்துக் கூந்தல் அவிழ அவள் வருந்துகிறாளே. அவளுக்குப் பதிலாக நான் நீரையெடுத்துப் பாத்தியில்வார்த்து அவளுடைய கடனினின்றும் மீட்கிறேன். நீ இந்த மோதிரத்தைக் கையில்

வைத்துக்கொள் " என்றான். அம்மோதிரத்தில் துஷ் யந்தன் என்ற பெயர் வரைந்திருத்தலைக்கண்டு பின், அனசூயையும், ப்ரியம்வதையும் ஒருவரை யொருவர் பார்த்தார்கள். உடனே அரசன் "நான் அரசனின் மனி தனென்று முன்பே சொன்னேனே" என்றான். ப்ரியம் வதை, " அப்படியானால் மோதிரம் கையை விட்டு நீங்க லாகாது. உங்கள் வார்த்தையைக் கொண்டே நான் அவளைக் கடனிலிருந்து விடுவித்து விட்டேன். அம்மா சகுந்தலா ! நீ இந்த மகாபுருஷன் உதவியால் கடனி னின்றும் விடுபட்டாய்; நீ போகலாம்" என்றாள். அப் பொழுது சகுந்தலை " போகவாவது இருக்கவாவது என்னை ஏவ நீ யாவள் ?" என்று மறுமொழி சொன்னாள். அரசன் அவளிருக்கும் நிலையைப்பார்த்து, "நான் பேசும்பொழுது இவள் என்னோடு கலந்து பேசுவதேயில்லை; ஆயினும், நான் பேசும்பொழுதெல் லாம் அவள் என் பேச்சைச் செவி கொடுத்துக் கவ னிக்கிறாள். அவள் என் முகத்திற்கு நேராக நோக்கு வதே யில்லை; எனினும் அவள் கண்கள் வேறெதை யும் நாடவில்லை" என்று தன்னுள்ளாகவே நினைத்தான்.

இச்சமயத்தில் "தபசிகளே ! ஆசிரமத்தைக் கவனி யுங்கள். துஷ்யந்தன் வேட்டையாடிக்கொண்டு வருகி றான். அவன் தேர்க்குதிரைகளின் குளம்புகளால் எழுப்பப்பட்ட தூகள் மாலைச் சூர்யனைப்போல சிவப் பாக விளங்குவதை நோக்கின் அவை மரக்கொம்பு களில் உலர்த்தப்பட்ட மரவுரிகளில் மின் மினிப் பூச்சிகள் மரங்களில் விழுவதுபோல் விழுகின்றன.

தேர்களைக் கண்டு வெருண்டு ஒரு யானை வேகமாக ஓடி வருகின்றது. ஒரு கொம்பால் குத்தி முறிக்கப்பட்ட மரக்கிளை அதன் கொம்பிலேயே மாட்டிக்கொண்டிருக்கிறது. கால்களிலெல்லாம் கொடிகள் சுற்றிக்கொண்டிருக்கின்றன. அதைக் கண்டு பயந்து மான் கூட்டங்கள் ஓடுகின்றன. தவத்தைக் கெடுக்க வந்த இடையூறே ஓர் உருவம் எடுத்ததுபோல் அது விரைவாக வருகின்றது!'' என்ற ஒரு சத்தம் கேட்டது. அதைக் கேட்ட அனசூயை அரசனை நோக்கி, "காட்டு யானைவருவதைக்கேட்டு நாங்கள் பயப்படுகிறோம். நாங்கள் பர்ணசாலைக்குப் போக விடையளிக்கவேண்டும்'' என்று கேட்டாள். அரசன், "நீங்கள் செல்லுங்கள். நான் சென்று தபோவனத்திற்குஒரு கெடுதியும்வாராமல் காப்பாற்றுகிறேன்'' என்றான். சகுந்தலை சகிகளுடன் புறப்பட்டாலும் அரசனிருக்குமிடத்தைவிட்டு நீங்க மனமில்லாமல் மெல்ல மெல்லச் சென்று, அவள், "அனசூயை! இந்தப் புல் என் காலைக் குத்திவிட்டது என் மரவுரி மரத்தில் மாட்டிக்கொண்டது. கொஞ்சம் பொறு, நானும் வருகின்றேன்'' என்று சொல்லிக்கொண்டே திரும்பித் திரும்பி யரசனைத் தன் கடைக்கண்ணாற் பார்த்துப் பார்த்துத் தயங்கித் தயங்கிச் சென்றாள். அரசனும், "இப்பொழுது எனக்கு ஊர் போக மனம் வரவேயில்லை. என் உடல் முன் சென்றாலும், காற்றுக்கு எதிராகக் கொண்டு போகப்பட்ட பட்டுக் கொடியைப்போல் என்மனம் புறமே போகின்றது'' என்று சொல்லிச் சகுந்தலையை நினைத்துக்கொண்டே அவ்விடம் விட்டு நீங்கினான்.

## 2. சகுந்தலையின் விரகம்.

அரசன் போகும் வழியில் அவன் தோழனை விதூஷகன் எதிர்ப்பட்டான். விதூஷகன் வேட்டையில் பிரியமேயில்லாமல் அரசனின் தாக்ஷிண்யத்திற்காக வந்தவன். அவன், "ஐயோ! இந்த வேட்டையில் பித்துப் பிடித்த அரசனுக்குத் தோழனாக இருப்பதாலன்றோ நமக்கு இந்தச் சனியன் பிடித்தது? நடுவெயில்வேளையில் 'இதோ மான், இதோ பன்றி, இதோ புலி' என்று அலையும்படியாயிற்று. இலை விழுந்து அழுகிக் கிடக்கும் மலை நீரை அருந்தவும் நேர்ந்தது. வேளையில் உணவு உண்டா! எனக்கோ குதிரை ஏறத் தெரியாது. குதிரைகளைப் பின்பற்றி ஓடாவிட்டாலோ காட்டில் ஒண்டியாக விருக்க நேர்ந்து புலிவாயில் விழவேண்டும். ஓடி யோடிக் களைத்து இரவில் தூக்கங் கூடப் பிடிப்பதில்லை. சிறிது உறங்கினாலும் வேட்டை நாய்களுடன் வந்து வேட்டையாடும் ஆட்கள் விடியற்காலத்தே தப்பு, தாரைகளை யூதி என்னை யெழுப்பி விடுகிறார்கள். ஊர் போய்ச் சேரலாமென்றாலோ அரசனுக்குச் சகுந்தலை எதிர்ப்பட்டுவிட்டாள். ஊருக்குப் போகும் பேச்சே காணவில்லை. இரவில மனக்கவலையால் தூக்கமேயில்லை. இதோ காட்டுப் பூமாலை புனைந்து வரும் வேடுவப் பெண்களால் சூழப்பட்டு அரசனும் வில்லைத் தாங்கி வருகிறான். நான கை கால் முறிந்தவன்போலவிருக்கிறேன். அப்பொழுதாவது ஓய்வு ஏற்படுமோ பார்ப்போம்" என்று தனக்குள்ளாகவே சொல்லிக் கொண்டு கை கால் ஒடிந்தவன்போல் அரசன் முன் எதிர்ப்பட்டான்.

அரசன் சகுந்தலையைப் பற்றியே எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். "அவளோ நமக்குக் கிடைக்கக் கூடியவள் அல்லள். மனமோ அவளையே நாடு கின்றது. எண்ணம் நிறைவேறாவிட்டாலும் ஒருவருக் கொருவர் இருக்கும் அன்பே ஆனந்தத்தைக் கொடுக் கின்றது. அன்புள்ளவர்களுக்கு யாவும் அவ்வன்பையே வளர்க்கின்றது" என்று நினைத்துக்கொண்டே வந்தான். அப்பொழுது விதூஷகன் அரசனைப் பார்த்து, "ஜய முண்டாகுக! வாயால்மட்டும் சொல்லுகிறேன்; கை கால் எனக்குச் சுவாதீனமில்லை" என்றான். அர சன் "உனக்கு உடம்பு என்ன?" என்றான். விதூஷகன் "கண்ணைக் குத்திவிட்டுக் கண்ணீர் வடிகின்றதே என்று கேட்கலாமா? நீதான் ராஜ காரியங்களை யெல் லாம் விட்டு வேட்டையில் இறங்கிவிட்டாய். எனக்கு உடல் ஒடுங்கிப் போய்விட்டது. எனக்கு விடை யளிக்க வேண்டும்" என்று சொன்னான். அரசனும், "எனக்கு வேட்டையில் மனம் இப்பொழுது செல்லவில்லை. சூத ற்ற அன்பு நிறைந்த பார்வையை சகுந்தலையினிடம் கற்றுக் கொண்டதுபோல் பார்க்கும் பெரிய கருவிழி களுடன் கூடியமான்களின மேல் அம்புகளை எய்ய என் மனம் இடங்கொடுக்கவில்லை" என்று எண்ணிச் சேனாதி பதியை வரவழைத்தான். சேனாதிபதி அரசனைப் பார் த்து, "வேட்டைக்கு எல்லாம் தயாராக இருக்கிறது. வேட்டையால் உடலானது வீண்சதையை யிழந்து வலிமைமிக்கு சக்தியை யடைகின்றது. கொடியமிருகங் கள் சினத்தாலும் பயத்தாலும் மனத்தில் கலக்கமுறு வதைக்காணலாம். குறி தவறாமல் அம்பெய்வதாகிற

பெருமையை உணரலாம். இவ்வளவு வேடிக்கையோடு கூடிய வேட்டையை இகழலாமா?" என்றான். அரசன் வேட்டையை நிறுத்தச் சொல்லி உத்தரவு செய்து வேட்டைக்கு வந்த கூட்டங்களை யழைத்துச் செல்லும்படி கட்டளையிட்டான். "இது தபோவனம்; இங்கே வேட்டையாடுவது தவறு. பிறர்களை எரித்துவிடும் வல்லமை அமைதியுள்ள தபசிகளிடத்தில் உண்டு. சூரிய காந்தக் கல் குளிர்ந்திருக்கும். கதிரவனின் ஒளி தாக்கினாலோ உடனே அது சூட்டைக் கக்குமன்றோ" என்றான். அரசனின் ஆணைப்படியே சேனாதிபதி பரிவாரங்களுடன் அவ்விடத்தை விட்டு நீங்கினான்.

பிறகு அரசன விதூஷகனை நோக்கி, "மாடவ்ய, நீ கண் படைத்தும் அது உனக்குப் பயன்படவில்லை. ஏனென்றால் நீ சகுந்தலையைப் பார்க்கவில்லையல்லவா?" எனறுரைத்தான். விதூஷகன், "ஆனால் நீ இப்பொழுது தபசிப்பெண்ணை விரும்புகிறாயா?" என்று பதில் சொன்னான். அதைக் கேட்ட துஷயந்தன், "புதிதாக உதித்த பிறையை இமை கொட்டாமல் எப்படி ஜனங்கள் நோக்குகின்றார்களோ அப்படித் தூய்மையான எண்ணத்துடன்தான் நான் அவளை நினைக்கின்றேன். விசுவாமித்திரருக்கும் மேனகைக்கும் பெண்ணாகப் பிறந்து கண்வரால் வளர்க்கப்பட்டவளே தவிர அவள் அவர் பெண்ணல்லள். நவமாலிகையின் நறுமலரானது எருக்கமரத்தில் வீழ்ந்து தங்குவதுபோல் அவள் தான் பிறந்த இடம் விட்டு கழுவி இவ்விடத்திற்தங்கிவளர்ந்துவருகிறாள்" என்றான். விதூஷகன் "ஐயோ! பேரீச்சம்பழந் தின்று திகட்டின

வனுக்குப் புளியம் பழத்தில் விருப்பம் வந்ததுபோ லிருக்கின்றதே!" என்றான். அரசன், "அப்படியன்று; நன்றாக வெழுதப்பெற்ற சித்திரம் உயிரையும் பெற்றா லொத்த அற்புத அழகு வாய்ந்தவளாயிற்றே அவள், இல்லாவிட்டால் பிரமன் மனத்தின் கல்பனா சக்தியா லேயே அவளைச் சிருஷ்டித்தானோவென்று தோன்றுகின் றது. கடவுளுடைய வல்லமையையும் அவளுடைய அழகையும் கவனித்தால் அவளுடைய சிருஷ்டி உலக நிர்மாணம் போலில்லாமல் புதிதாகவே தோன்றுகின் றது. அவள் மோந்து பார்க்கப்படாத மணம் வீசும் மலரோ, நகத்தால் கிள்ளப்படாத தளி ரோ, துளைக்கப்படாத மாணிக்கமோ, சுவைக்கப்படாத செந்தேனோ, புண்ணியங்களின் பரிசுத்தமான பயனோ என்றே சொல்லலாம். அவளுக்கு நாயகனாக எவனைக் கடவுள் படைத்திருக்கிறாரோ தெரியவில்லை" என்று சொன்னான். விதூஷகன், "அவளுக்கு உன்னிடத்தில் பிரியம் இருக்கிறதா?" என்று வினவ, அரசன், "நான் நேராக அவளை நோக்கும்பொழுது அவள் பார்வையா னது கீழே சென்றது. ஏதோ எண்ணத்தை மனத்தில் கொண்டு முக நகையுடன் அவள் முறுவல் செய்தாள். வெட்கத்தால் தடுக்கப்பட்ட அவளுடைய அன்பு வெளிப்படுத்தபடவுமில்லை, மறைக்கப் படவுமில்லை. போகும்பொழுது புல்லால் தன்கால் குத்தப்பட்டதாகப் பாவனைசெய்து அவள் நின்று என்னைப் பார்த்தாள். மரவுரி மரத்தில் சிக்கிக்கொள்ளாவிட்டாலும் சிக்கிக் கொண்டதுபோலவும், அதை விடுவிப்பதுபோலவும் தயங்கித் தயங்கித்தன் முகத்தைத் திருப்பி அவள் என்

ளைத் தன் கடைக்கண்ணுற் பார்த்தாள். மறுபடியும் ஆசிரமத்திற்குச் செல்ல உனக்கு யுக்தி தோன்றினுல் சொல்" என்று கேட்டான். விதூஷகன், "அரசனுக்கு வனநெல்லில் ஆறில் ஒரு கடமை வரியாக முனிவர்கள் கொடுக்க வேண்டுமல்லவா? அதைப் போய் கேட்போமே" என்றான். அதற்கு அரசன், "முனிவர்களைக் காப்பாற்றுவதால் வரும் பாக்கியத்திற்கு வரி எம்மாத்திரம்? ரத்தினங்களைக் காட்டிலும் உயர்ந்த நன்மை அதனுல் கிடைக்கிறது. வரியால் வரும் வரும்படி அழியும். முனிவர்கள் தபசில் அரசனுக்கு வரும் ஆறில் ஒரு பங்கு அழியாத நிதியன்றோ" என்றான்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருக்கும்பொழுது இரண்டு ரிஷி குமாரர்கள் வந்தார்கள். அவர்களில் ஒருவர் மற்றவரை நோக்கி, "இந்த அரசன் முனிவனைப்போலவே இருக்கிறான். முனிவன் எப்படி எல்லோருக்கும் பொதுவான ஆசிரமத்தில் இருப்பானே அப்படி இவன் எல்லோருக்கும் பொதுவாகவும் உபகாரமாகவுமிருக்கும் கிருகஸ்தாச்ரமத்திலிருக்கிறான். முனிவன் எப்படி யோகத்தால் தவத்தைச்சேகரிப்பானே அப்படி இவன் உலகத்தைக் காப்பதால் தவத்தைச் சேர்க்கிறான். முனிவனுடையகீர்த்தியைத்தேவர்கள் எப்படிப் புகழ்வார்களோ அப்படியே அடக்கமுள்ள இந்த அரசனையும் அவர்கள் புகழ்கிறார்கள். அந்த புண்ணிய சப்தம் தேவலோகத்தில் ஒலிக்கின்றது. இவனை ராஜரிஷி என்றே சொல்லவேண்டும்" என்றார். அதற்கு மற்றொருவர், "இவன் இந்திரன் தோழனையிற்றே. கோட்டைக் கதவின் தாழ்ப்பாளைப்போல் நீண்டு வல்லமை வாய்ந்த

கைகளையுடைய இவன் கடலை ஆடையாக உடுத்த உலகம் முழுவதையும் தன் குடையின் ஆட்சிக்குட் படுத்திச் செங்கோல் செலுத்தி வருவதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? அசுரர்களிடத்தில் பகைகொண்ட தெய்வப் பெண்கள் இவனுடைய வில்லையும், இந்திரன் வஜ்ராயுதத்தையும் மட்டுமே வெற்றிக் கருவிகளாகக் கருதுகின்றார்கள்" என்றார்.

இப்படி அவர்கள் பேசிக்கொண்டே வந்து அரசனை வாழ்த்தி, "அரக்கர்கள் கண்வர் இல்லை யென்றறிந்து வேள்விகளைக் கெடுக்கிறார்கள். நீங்கள் சில நாட்கள் இங்குத்தங்கி அவர்களைத் தடுத்து எங்களைக் காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டினார்கள். அரசனும் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டான். அவர்கள், "உன் முன்னோர்கள் போன புண்ணிய வழியிலேயே செல்லும் உனக்கு இதே தகுதி, இதே அழகு. பௌரவ அரசர்கள் இடுக்கண்ணில் இடர்ப்பட்டவர்களைக் காப்பாற்றுவதையே தம் கடமையாகக் கைப்பற்றினவர்களல்லவா?" என்று சொல்லி அரசனை வாழ்த்திச் சென்றார்கள்.

அச்சமயத்தில் ராஜதானியிலிருந்து அரசனுடைய தாயார் சதுர்த்திவிரதம் முடிந்து தாரணை பண்ணுவதால் அரசன் அவசியம் உடனே வரவேண்டுமென்று சொல்லி ஓலை அனுப்பினாள். அரசன், "இங்கே தபசிகளின காரியமிருக்கிறது. அங்கே தாயின் உத்தரவு. மலையால் தடைப்பட்ட ஆற்றை போல முன்னும் பின்னும் மனஞ்செல்லுகின்றது. விதூஷகா, நீயும் என் தாயால் என்னைப் போல் குழந்தையாகக் கருதப்பட்ட

தால் எனக்குப் பதிலாக நீயே அங்கே போ" என்றான். அதற்கு விதூஷகன், "நான் அரக்கர்களின் பயத்தால் போகவில்லை" என்றான். அரசன், "அது எல்லாருக்குந் தெரிந்தது தானே" என்று சொன்னான். விதூஷகன் "அப்படியானால் அரசன் போனால் எவ்வளவு ஆடம்பரமாகச் செல்லுவானோ அப்படியே என்னையும் அனுப்ப வேண்டும்" என்று கேட்டான். அரசன், "அப்படியே ஆகட்டும். நீ வந்த பரிஜனங்களையெல்லாம் அழைத்துச் செல். சகுந்தலையைப் பற்றிக் கூறிய விஷயம் முழுவதையும் தீர்மானமாக நினைத்துச் சொல்லிவிடாதே. அவள் இன்பமே அறியாத தூய்மை வாய்ந்த தபசிப் பெண்ணல்லவா?" என்று சொல்லி விதூஷகனை எல்லாப் பரிஜனங்களோடும் ராஜதானிக்கு அனுப்பினான்.

## 3. சகுந்தலையின் விவாகம்.

பிறகு அரசன் சகுந்தலையை நினைத்துக்கொண்டே ஆசிரமத்தை நோக்கிச்சென்றான். "தவத்தின் வல்லமையை அறிவேன். சகுந்தலைக்கும் சுயேச்சை யில்லையென்றுமறிவேன். ஆனாலும் அவளை மறக்கவோ முடியவில்லை. மனம் அவளிடமே செல்லுகின்றது, அதைத் திருப்பவேமுடியவில்லை. காமன் பூக்களை அம்பாகக் கொண்டவனென்றும், சந்திரன் தண்மை பொருந்திய ஒளி யுள்ளவனென்றும் பகல்வது எம்போன்றவர்கள் விஷயத்தில் பொய்யே. சந்திரன் குளிர்ச்சி யுள்ளடங்கிய வெப்பத்தையே வீசுகிறான். காமனுடைய பூவம்புகளும் வஜ்ராயுதம்போலக் கூராகவே இருக்கின்றன. மன்மதா! பரமசிவன் நெற்றிக் கண் திறந்து உன்னை

எரித்தபொழுது உன்னிடம் சேர்ந்த அந்த நெருப்புச் சுடர் இன்னும் ஜ்வலித்துக்கொண்டே இருக்கவேண்டும். இல்லாவிட்டால் உன்னால் இவ்வளவு கொதிப்பு உண்டாகுமா” என்று துஷ்யந்தன் நினைத்து வருந்தினான். “தாமரைப் பூக்களின் மணத்தால் மணக்கும் நீர்த்துளிகளின் சேர்க்கையால் குளிர்ந்தும், இன்பத்தைக் கொடுக்கக் கூடியதுமான தென்றலை வெப்பத்தால் வருந்தும் அங்கங்களால் அனுபவிக்க விரும்புகிறேன். காலடிச்சுவடுகள் இவ்வழியில் இருப்பதால் சகுந்தலை இப்படித்தான் போயிருக்கவேண்டும்” என்று எண்ணி அவன் அவளைத் தேடிச்சென்றான். அங்கே ஒரு மலைக்கல்லில் பூங்கொத்துக்கள் நிறைந்த விடத்தில் சகுந்தலை படுத்துக்கொண்டு அவள் தோழிகளால் தாமரையிலைகளால் விசிறப்பட்டதைக் கண்டான். அவர்கள் சகுந்தலையை நோக்கி, “வனத்தில் வசிப்பவர்களுக்குக் காமத்தின் வழிகளே தெரியாது. புராணங்களைக் கேட்டதில் அவைகளில் காமத்தின் அடையாளங்கள் எப்படிச் சொல்லப்பட்டிருக்கின்றனவோ அப்படியே அவைகள் உன்னிடத்தில் காணப்படுகின்றன. உன் உடம்பு மெலிந்து தளர்ந்துவருகின்றது. பெருமூச்சு வருகின்றது. ஆனால் உன் மேனியின் காந்தி மட்டும் குன்றவேயில்லை. தோழிகளிடத்தில் வருத்தத்தைத் தெரிவித்தால் அதுவே ஆறுதலைகொடுக்கும்” என்றார்கள். இதை யொளிந்து கேட்டுக்கொண்டிருந்த அரசனும், “கன்னம் ஒட்டி, மார்பு கட்டுவிட்டு, இடை நொடிந்து, தோள்கள் துவண்டு இவள் வருந்துகிறாள். தன் எண்ணத்தையும் வெளிப்படையாகச் சொல்லவும்

காணுகிறாள்" என்று நினைத்தான். அப்பொழுது சகுந்தலை "எப்பொழுது அந்த ராஜரிஷி ஆசிரமத்திற்கு வந்தாரோ அது முதல் என் மனம் அவரையே நாடி வருந்துகின்றது" என்றாள். அரசன் "எந்தக் காமன் வெப்பத்தை உண்டாக்கினனோ அவனே வெப்பத்தைத் தணிக்கின்றான். வெய்யிலுடன் கூடிய பகலே மாலையில் முகிலால் வெப்பத்தைத் தணிப்பதுபோலிருக்கின்றது" என்று நினைத்து மகிழ்ந்தான். அப்பொழுது சகுந்தலை தன் தோழிகளை நோக்கி, "அவர் மனம் என்னிடம் இரங்கும்படி செய்யுங்கள். இல்லாவிட்டால் எனக்கு விரைவில் நீர் இறைத்து விடலாம்" என்றாள். அவர்கள் வருந்தி, "அவரிடத்தில் உன் மனம் சென்றது மிகவும் கொண்டாடத்தக்கது. ஒரு மகா நதி கடலை யல்லாமல் வேறு எங்கேயாவது செல்லுமா? அழகிய அதிமுக்தக்கொடி மாமரமல்லாது வேறு மரத்தைச் சுற்றிக்கொள்ளுமா? நீ அவருக்கு ஒரு கடிதம் எழுதிக்கொடு. அதை நாங்கள் அவரிடத்தில் சேர்ப்பிக்கின்றோம்" என்றார்கள். அதற்குச் சகுந்தலை "அவர் அதை ஏற்றுக் கொள்வாரோ அல்லது தள்ளிவிடுவாரோ என்று அஞ்சுகிறேன்" என்று மொழிந்தாள். அதற்கு அரசன் "உன்னையே நான் விரும்பும் பொழுது நான் உன் கடிதத்தை ஏற்றுக் கொள்ளமாட்டேனென்று அஞ்சுவானேன். லக்ஷ்மியை விரும்புகிறவர்கள் அவளை அடைந்தாலும் அடையலாம், இல்லாவிட்டாலும் இல்லை. லக்ஷ்மியே ஒருவனை விரும்பினல், அவளுக்கு அவன் கிடைப்பதற்கு அரிதா?" என்று நினைத்தான். ப்ரியம்வதை சகுந்

தலையை நோக்கி, "அதென்ன இப்படி அஞ்சுகிறாய்? யாராவது சந்திர கிரணம் மேலே படவேண்டாமென்று துணியால் மறைத்துக் கொள்ளுவார்களா? இந்தத் தாமரை யிலையில் உன் நகத்தினாலெழுது" என்றாள். சகுந்தலை அப்படியே எழுதத் துவக்கினாள். அவள் அப்பொழுதிருந்த நிலையைப் பார்த்து அரசன் புருவங்களை உயர்த்தி நெறித்து ஆலோசித்து 'இவள் எழுதும் பொழுது இவளுடைய கன்னம் மகிழ்ச்சியால்புளகித்தலானது இவளுக்கு என்மீதுள்ள மெய்யன்பை விளக்குகின்றது' என்று அறிந்து கொண்டான். அவள் அத் தாமரையிலையில் "உன் மனத்தை நான் அறியாவிட்டாலும் உன்னிடம் அன்புள்ள என் உடலைக் காமன் வருத்துகின்றான்" என்று எழுதினாள். உடனே அரசன் தாமதியாமல் முன் வந்தபொழுது தோழிகளிருவரும் அவனுக்கு உபசாரம் சொல்லிப் பிறகு எல்லோரும் அமர்ந்தார்கள். அரசன் அவர்களிடமிருந்து சகுந்தலையின் நிலையை யறிந்து தனக்கும் அவளிடத்தில் இருக்கும் அன்பை உணர்த்தினான். அப்பொழுது சகுந்தலை ப்ரியம்வதையைப் பார்த்து, "அந்தப்புரத்தை விட்டு வந்திருக்கும் அரசனை ஏன் தடை செய்யவேண்டும்?" என்றாள். அதற்கு அனசூயை அரசனை நோக்கி, "அன்பரே, அரசர்களுக்கு மனைவியர் பலர் இருக்கக்கூடும். இவள் நிலையைக்குறித்து இவள் உறவினர்கள் வருந்தாதபடி பாதுகாக்கவேண்டும்" என்று வேண்டினாள். அரசன், "கடலை யாடையாக உடுத்த பூமியும், உங்கள் தோழி இருவரும் மட்டுமே என் வம்சத்தை நிலை நிறுத்துவார்கள்" என்றுவாக்களித்தான். உடனே ஈசன் சாக்ஷி

யாக அரசன் அவளைக் காந்தர்வ மணஞ்செய்து கொண்டான்.

## 4. சகுந்தலையின் கமனம்.

இப்படி அவர்கள் சிலகாலம் தம்பதிகளாகவிருந்த பிறகு அரசன் தன்னுடைய நகரத்திற்குச் சென்றான். ஒரு நாள் சகுந்தலை தன கணவனை நினைந்து எண்ணமிட்டுக் கொண்டிருக்கும்பொழுது துர்வாச ரிஷி ஆசிரமத்திற்கு வந்தார். அப்பொழுது அனசூயையும் ப்ரியம்வதையும் பூக் கொய்து வர வெளியே போயிருந்தார்கள். சகுந்தலை மட்டும் பர்ணசாலையில் இருந்தாள். அவள் துர்வாச ரிஷிக்கு உபசாரம் செய்யாததால் அவர் சினந்து சகுந்தலையை நோக்கி, "யாரை நினைத்து உலகத்தை மறந்து எண்ணமிட்டுக்கொண்டு வந்த முனிவரை அவமதித்து இருக்கிறாயோ அவன் உன்னைப்பற்றி நினைப்பு மூட்டப்பட்டாலும் மறந்தே இருக்கட்டும்" என்று சாபமிட்டுவிட்டுத் திரும்பி விட்டார். உடனே ப்ரியம்வதை அவர் ஆரவாரத்தைக்கேட்டுப் பயந்து ஓடிவந்து அவர் காலில் விழுந்து வணங்கி மன்னிக்கும்படி வேண்ட, அவர், "சாபத்தை முழுவதும் மாற்றமுடியாது. ஏதாவது ஆபரணத்தை அடையாளமாகக் காட்டினால் அவனுக்கு நினைவு வரும்" என்று சொல்லிச் சென்றார். அந்த விருத்தாந்தத்தை அவள் அனசூயையிடத்தில் சொல்ல, அனசூயை, "பிழைத்தோம். அரசன் பெயருடன் கூடிய மோதிரம் சகுந்தலையிடத்தில் இருக்கிறதன்றோ? என்றாள். தன் கணவனது பிரிவிற்கு

ஆற்றாது முன்னமே வருந்திக்கொண்டிருந்த தோழி சாபத்தைப்பற்றிக் கேள்வியுற்றால் மனமொடிந்து துயருறுவாளென்று நினைத்து அவ்விருவரும் அச்சாபத்தைப்பற்றிச் சகுந்தலையினிடம் தெரிவிக்கவேண்டாமென்று தீர்மானித்தனர்.

சிலகாலமானபிறகு கண்வரிஷி திரும்பிவந்தார். அவர் வேள்வி நடத்துமிடத்திற்குப் போனபொழுது ஆகாயவாணி சகுந்தலையின் காந்தர்வ விவாகத்தைப் பற்றியும் அவள் கருத்தரித்திருப்பதைப்பற்றியும் அவருக்கு அறிவித்தது. அவர் மனமகிழ்ந்து அவளைக் கணவன் வீட்டிற்கு அனுப்ப எண்ணங் கொண்டார். ஆசிரமத்திலிருந்த ஸ்திரீகள் சகுந்தலையைச் சிங்காரித்துக் கணவனிடத்தில் அனுப்ப ஏற்பாடு செய்யும்பொழுது இரண்டு மாணவர்கள் அதிக அழகு வாய்ந்த ஆடையாபரணங்களைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். அவை ஏது என்று கேட்டபொழுது, "கண்வரிஷியின் மகிமையால் வனதேவதைகள் இந்த வெண்பட்டையும் ஆபரணங்களையும் கொடுத்தார்கள்" என்று சொன்னார்கள். தோழிகள் அவைகளால் சகுந்தலையை மகாலக்ஷ்மியைப்போல் அலங்கரித்தார்கள்.

பிறகு கண்வரிஷி சகுந்தலையைக் கணவனிடம் அனுப்ப நிச்சயித்தாலுந் தான் அருமையாக எடுத்து வளர்த்த குழந்தையைத் தன பக்கத்திலிருந்து அனுப்ப அவருக்கு மனம் வரவில்லை. "இன்றைய தினம் சகுந்தலை புறப்பட்டுக் கணவன் வீட்டுக்குப்போகிறாளென்பதால் என் மனம் வருந்துகின்றது. மங்கள காலத்

தில் கண்ணீர் விடக்கூடாதென்று அடக்கிக்கொண்டதால் நெஞ்சை இறுகப்பிடித்தது போலிருக்கின்றது. கண் பூத்துப் போயிருக்கிறது. கானகத்திலுள்ளவர்களுக்கே இப்படியிருந்தால் பெண்ணை முதன் முதல் புருஷன் வீட்டுக்கு அனுப்பும்பொழுது ஏற்படும் பிரிவை எப்படிக் கிருகஸ்தர்கள் பொறுப்பார்கள்?" என்று நினைத்தார். சகுந்தலை சர்வாபரண பூஷிதையாக வந்து வணங்கவே அவர் கண்டு களித்து, அவளை ஆசீர்வதித்து, அக்கினியை வலம் வரச்செய்து, வனதேவதைகளைப் பார்த்து, "மரங்களுக்கு நீர் பாய்ச்சு முன் ஜலபானம் பண்ணுதவளும், தன்னை யலங்கரித்துக் கொள்வதில் விருப்பம் மிகுந்தவளாயினும் உங்களிடம் அவளுக்குள்ள அன்பின் மிகுதியால் தளிரையும்பறிக்க மனமில்லாதவளும், மலர்களும் கனிகளும் நிறைந்து நீங்கள் சோபிக்கும்போது உங்களுடைய அழகைக் கண்டு மகிழ்பவளுமான சகுந்தலை இன்றைய தினம் தன் கணவன் வீடு செல்கின்றாள். அவளுக்கு நீங்கள் எல்லோரும் விடை யளிக்கவேண்டும்" என்றார். அச்சமயம் வனதேவதைகள் குயிலின் இனிய குரலால் விடை அளித்தனர். ஆகாயவாணியும், "இவள் போகும் வழி தாமரைத்தளங்கள் நிறைந்து நிழலாகவும், குளிர்மையாகவும் மிருதுவாகவும் தென்றல் காற்று வீசுவதால் இன்பமாகவும் மிகவும் மங்களகரமாகவும் இருக்கும்" என்று சொல்லிற்று. சகுந்தலைக்கோ போகக் காலெழும்பவே யில்லை. அவளுடைய தோழிகள் அவளைப் பார்த்து, "அம்மா! நீ போவதைப் பார்த்து மான்களும் புல்லைக் கவ்வவில்லை ; மயில்கள் ஆடாமல் வாடி

நிற்கின்றன. கொடிகளிலிருந்து தழைகள் விழுவது கண்ணீர் விடுவது போலிருக்கிறது" என்று மொழிந்தார்கள். சகுந்தலை அவர்களைப் பார்த்து, "சகிகளே! எனக்குப் பிரியமான இந்த வனஜ்யோத்ஸ்னீ என்ற கொடியை நான் கட்டி முத்தமிடுகிறேன். இதை நீங்கள் அன்புடன் காப்பாற்றவேண்டும்" என்று பிரார்த்தித்தாள். பிறகு அவள், " இப்பெண்மான் குட்டிபோட்டவுடன் எனக்கு அறிவிக்கவேண்டும்" என்று வேண்டினாள். அவர்களும் 'அப்படியே செய்கிறோம்' என்று வாக்களிக்க, அவள் புறப்பட்டாள். அப்பொழுது ஒரு சிறு மான்குட்டி அவளைப் பின்தொடர்ந்தது. அது தர்ப்பையால் காயப்பட்டபொழுது அவள் அப்புண்ணை ஆற்றி அதை அருமையாக வளர்த்ததால் அது அவளை விட்டு ஒரு க்ஷணங்கூடப் பிரியாமலிருப்பது வழக்கம். கண்வரிஷியினிடத்தில் அவள் அதை ஒப்புவித்தாள். அவர் சாரங்கரவரைக் கூப்பிட்டு "நீ இவளுடன் சென்று அரசனிடத்தில் நீ சொல்லவேண்டிய விஷயத்தை அறிந்துகொள். 'தவத்தைத் தனமாகவுடைய எங்களையும் நினைத்து உன்னுடைய உயர்ந்த குலத்தையும் நினைத்து உனக்கு இவளிடத்தில் யத்னமில்லாமல் இயற்கையாகவே ஏற்பட்ட ஆழ்ந்த உள்ளன்பையும் நினைத்து இவளை உன் மனைவியாக ஏற்றுக்கொள். பெண்ணைச் சேர்ந்தவர்கள் அதற்கு மேல் சொல்வது முறையன்று. யாவும் விதிப்படி நடக்கும்' என்று நீ சொல்ல வேண்டும்" என்றார். சகுந்தலையைப் பார்த்து, "அம்மா! வீட்டிலுள்ள பெரியோர்க்கு வணங்கித்தொண்டு செய்யவேண்டும். சக்களத்திகளிடத்தில்

தோழிபோலவே இருக்கவேண்டும். கணவன் கோபித்தாலும் அவன் வார்த்தைக்கும் எண்ணத்திற்கும் மாறாக நடக்கக்கூடாது. வேலைக்காரர்களிடத்தில் அன்போடும் பெருமையோடும் நடந்துகொள்ளவேண்டும். செல்வம் வந்தபொழுது செருக்கடையாமலிருக்கவேண்டும். இக்குணங்கள் வாய்ந்த பெண்மணியையே தலைவி என்று சொல்வார்கள். அப்படி யில்லாதவர்கள் தலைவலியே" என்று புத்திமதிகளை உபதேசித்தார். பிறகு சகுந்தலை, "தோழிகள் என்னுடன் வரலாகாதா?" என்றாள். அதற்குக் கண்வர் "அம்மா! இவர்கள் கன்னிகைகள்; மணஞ் செய்விக்கப்பட்டு அயலகம் போகவேண்டியவர்கள். ஆகையின் அவர்கள் உன்னுடன் வசித்தல் தகுதியன்று" என்றார். அவள் தந்தையை வணங்கி யெழுந்து அவரை யன்போடு தழுவி அவரிடம் விடை பெற்றுக்கொண்டாள். அப்பொழுது அவர், "உயர்ந்த குலத்தில் பிறந்த அரசனுக்கு மனைவியாகி மேன்மையான நிலையிலிருப்பதால் உலகத்திற்கு நன்மையைப் பயக்கும் அனேக கடமைகளை நிறைவேற்றிக் கதிரவனைப்போல் விளங்கும் குழந்தையைப் பெற்றுச் சுகமாக வாழ்வாயாக. என்னை விட்டுப் பிரிவதற்காக வருந்தவேண்டாம்" என்று சொன்னார் அவள் தன் இருதோழிகளையும் இறுகத் தழுவி விடைபெற்றுப் புறப்படும்பொழுது அவர்கள் அவளைப் பார்த்து, "அரசன் கொடுத்த இம்மோதிரத்தைப் பத்திரமாக வைத்துக்கொள். அவன் உன்னை மறந்திருந்தாலும் நீ இதை அவனுக்குக் காட்டலாம்" என்றார்கள். அவள் "என்ன! நீங்கள் கூறுவது எனக்கு

அதிக அச்சத்தையும் வியப்பையும் உண்டாக்குகிறதே! என்றாள். அவர்கள், "பயப்படாதே. எங்களுக்கு உன்னிடமுள்ள அன்பு எங்களுக்கு உன்னைப்பற்றிக் கவலையைக் கொடுக்கின்றது. நீ சந்தோஷமாகச் செல்" என்றார்கள். "நான் மறுபடியும் எப்பொழுது இத் தபோவனத்திற்கு வருவேன்?" என்று கண்வரைக் கேட்டாள். அவர், "வெகுகாலம் உலகத்தை யாண்டு புதல்வனுக்குப் பட்டம் சூட்டி நீயும் உன் கணவனும் இங்கே தவத்துக்கு வருவீர்களாக" என்று ஆசீர்வதித்தார். இப்படி விடை பெற்றுச் சகுந்தலை சார்ங்கரவரோடும் சாரத்வரோடும் கௌதமி யென்னுந் தவத்திற் சிறந்த வயதுசென்ற மாதரசியோடும் அரசனிருப்பிடத்திற்குச் சென்றாள். அவர்களை வழியனுப்பிவிட்டுக் கண்வரும், "பெண்ணைப் பெற்றாலே அவள் பிறருடைய சொத்தல்லவா. பிறந்தவுடன பெண்ணைப் பிறர்க்கே உரிமையாக்க வேண்டியிருக்கிறது. காப்பிற்காக ஒப்படைக்கப் பட்டபொருளைச் சொந்தக்காரனிடத்தில் பத்திரமாய்த் திருப்பிக் கொடுக்கும்போது ஒருவனுக்கு அமைதி உண்டாவதுபோல் இப்போது இவளைக் கணவனது கிரகத்திற்கு அனுப்பியதால் என் மனம் கவலையற்று இருக்கின்றது" என்று எண்ணினார்.

## 5. சகுந்தலையின் சாப துக்கம்.

இது இப்படி யிருக்க, அரசன் அரண்மனையிலுங் கொலுவிலுந் தர்ம சபையிலு மரசியலிலும் வைபவங்களிலும் ஆழ்ந்து துர்வாச ரிஷி சாப பலத்தால் சகுந்தலையை மறந்துவிட்டான். ஒருநாள் அரசனும் விதூஷகனும் நந்தவனத்தில் இருக்கும்பொழுது ஹம்ஸபதிகை

என்ற இராணி பாடிக்கொண்டிருந்தாள். அந்தப் பாட்டில் "தேனைத்தேடும் வண்டே! மாமரப் பூக்கொத்தை முத்தமிட்டுப் பிறகு அதை விட்டுவிட்டு தாமரையைத்தேடி அடைந்தாயே?" என்ற பொருள்கள் அடங்கியிருந்தது. ராகமும், லயமும், ஸ்வரமும் இன்பமயமாகவும் உருக்கமாகவும் இருந்தன. அரசன் விதூஷகனைப் பார்த்து, "மாடவ்ய, ஹம்ஸபதிகா இராணி நான் தன்னிடத்தில் முன் அன்போடிருந்து இப்பொழுது வஸுமதி இராணியினிடத்தில் அன்பு பூண்டிருப்பதாகக் குறிப்பாகப் பாடுகிறாள். சாதுரியமாக அவள் குறிப்பிட்ட விஷயத்தை நான் அறிந்து கொண்டேன் என்று அவளுக்குத் தெரிவித்துவா" என்று சொல்லி அனுப்பினான். அந்தப் பாட்டை கேட்டது முதல் அரசனது மனம் கலக்கமடைந்திருந்தது. தன் காதலியான சகுந்தலையைப் பிரிந்த நினைவே அவனுக்கில்லாவிட்டாலும் காதலியைப் பிரிந்த காதலனுக்குள்ள வியாகுலம் அவனையுமறியாமல் அவனுக்கு ஏற்பட்டது. "அழகிய பொருள்களைப் பார்த்தாலும், இனிய குரலுடன் பாடப்பட்ட கீதங்களைக் கேட்டாலும் சுகத்திலேயே மூழ்கியிருக்கும் மனிதர்களுக்கும் மனக்கலக்கமுண்டாவதற்குக் காரணம் அவர்களால் முன்பிறப்புக்களில் அனுபவிக்கப்பட்டும் அச்சமயத்தில் மறதியால் மனத்துக்கு நன்றாய் விளக்கமாகாமலிருக்கும் பண்டைய நட்பின் இன்பவாசனையேயாம்.

இப்படி அரசன் தன்னையுமறியாதபடி மனக்கலக்கத்தோடு அரசியலைச் செவ்வையாக நடத்திக்கொண்டு

வரும் வேளையில் கண்வர் ஆசிரமத்திலிருந்து புறப்பட்டவர்கள் அவ்வாண்மனைக்கு வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது காவற்காரன், 'இப்பொழுதுதானே அரசன் நியாயசபையிலிருந்து எழுந்து போனார். எப்படி அவரை மறுபடியும் வருத்துவது? கதிரவன் ஓய்வென்பதே யில்லாமல் தன் தேரில் பூட்டிய புரவிகளை யவிழ்ப்பதுமின்றி சதா ஆகாயத்திற் சஞ்சரித்து எல்லா வுலகங்களுக்கும் ஒளியை யுண்டாக்கிக்கொண்டே யிருப்பது போலவும், வாயுபகவான் இராவென்றும் பகலென்றும் பாராமல் சதா சலித்துக்கொண்டிருப்பதுபோலவும், ஆதிசேஷன் பூபாரத்தை எப்போதுந் தாங்கித் தரித்தல் போலவும் அரசர்களும் சதா சர்வகாலமும் தம் குடிகளின் சுகதுக்கங்களைக் கவனிக்கவேண்டியவர்களாகிறார்கள்" என்றெண்ணிக் கண்வாசிரமத்திலிருந்து வந்தவர்களைப்பற்றி அரசனிடம் தெரிவித்தான். அரசன் தன உபாத்தியாயர் சோமராதரை அழைத்துச் சென்று அவர்களை எதிர்கொண்டு வேள்விச்சாலைக்கு அழைத்து வரும்படி அவருக்குக் கட்டளையிட்டான். அரசன், "அரசியலின் பலன் பணி செய்வதே. குடிகள் தாம் கோரியதை யடைந்து களிப்படைகிறார்கள். அரசனுக்குள்ள கடமைகளுக்கோ முடிவென்பதேயில்லாமல் புதுக்கடமைகள் தோன்றிக் கொண்டேவருகின்றன. எடுத்த காரியம் கைகூடுவதால் அம்முயற்சி முடிவடைகிறதே யொழிய பாதுகாக்கும் கவலை ஒழிவதேயில்லை. தான் தூக்குங் குடையெயிலைத் தடுத்தாலுங் கைக்குக் களைப்பைக் கொடுப்பது போலவே அரசியலானது களிப்

புடன் களைப்பையும் கொடுக்கின்றது" என்று எண்ணமிட்டுக் கொண்டே வேள்விச்சாலைக்குச் சென்றான்.

அரசன் அங்கே வந்து சேர்ந்தபொழுது இரண்டு வைதாளிகர்கள் அவனைப் புகழ்ந்து பாடினார்கள். "நீ உன் சுகத்தை மறந்து உலகத்திற்காகவே பாடுபடுகிறாய். மரம் வெயிலைத் தன் தலையால் தாங்கித் தன்னை அடுத்தவர்களுக்குத் தண்ணிழலைத் தருகின்றதன்றோ. நீ நெறி தவறினவர்களைத் தண்டித்து நன்னெறியில் திருப்புகிறாய். வீண் சண்டைகளை யொழித்து நியாயமாகத் தீர்ப்புச் செய்து சாந்தியை விளைவிக்கிறாய். உலகத்தை ரக்ஷிக்கிறாய். இவை யாவும் உற்றார் செய்ய வேண்டிய கடமை. எல்லாக் குடிகளுக்கும் நீ இதைச் செம்மையாகச் செய்வதால் நீயே தேசபந்து. மற்ற பந்துக்கள் சம்பத்துக்களை அனுபவிக்க வருகிறவர்களே. உற்றார் கடமைகளெல்லாம் உன் பொறுப்பிலேயே வீழ்கின்றன." அதைக் கேட்டு அரசனும் களைப்பு நீங்கி வேள்விச்சாலையில் வீற்றிருக்கும் பொழுது, "ஆசிரமத்தில் இடையூறுகளால் முனிவர்களின் தவத்துக்குக் கெடுதி உண்டாயிற்றா? தபோவனத்திலிருக்கும் மிருகங்களுக்கு எவராலாவது தீங்கு ஏற்பட்டதா? நான் நியாயந் தவறியதால் பஞ்சம் உண்டாயிற்றா? எதற்காக ஆசிரம வாசிகள் இங்கேவருகிறார்கள்?" என்று சஞ்சலப்பட்டான்.

சாரங்கரவர், சாரத்வதர், கௌதமி, சகுந்தலை இவர்கள் வேள்விச்சாலைக்கு வந்துகொண்டிருக்கும் பொழுதே சாரங்கரவர் சாரத்வதரைப் பார்த்து, "நண்

பனே! அரசன் தர்ம மூர்த்தியாக விருக்கிறான். குடிக ளில் தாழ்ந்தவனும் நெறி தவறுவதில்லை. ஆனாலும், தனித்த விடங்களிலேயே யிருந்து களிக்கும் நமக்குக் கூட்டம் நிறைந்த நகரம் காட்டுத்தீ சூழ்ந்த காட் டைப்போலவே தோன்றுகின்றது" என்றார். சாரத்வத ரும் "எனக்கும் அப்படியே யிருக்கின்றது. தூய்மை யான நீரில் மூழ்கியவனுக்கு எண்ணெயும், சுத்தமுள்ள வனுக்கு அசுத்தமும், விழித்தவனுக்குத் தூக்கமும் சுதந்தரமுள்ளவனுக்கு அடிமையும் தோன்றுவது போலவே உலக வின்பங்களில் மூழ்கியிருக்கும் இந்நக ரத்தாரும் எனக்குத் தோன்றுகிறார்கள்" என்றார். இப் படி இவர்கள் பேசிக்கொண்டே வரும்பொழுது சகுந் தலை தன் வலது கண் துடிப்பதை நோக்கி மிகவும் வருந் தினாள். கௌதமி, "அம்மா! உனக்கு மங்களமுண்டா கட்டும். உன் கணவனுடைய குலதேவதைகள் உன் னைப்பாதுகாக்கட்டும்" என்று தேற்றி அழைத்து வந் தாள்.

அவர்கள் வேள்விச்சாலைக்கு வந்தவுடன் அரசன் எழுந்து உபசரிக்க முற்பட்டதை உபாத்தியாயரான சோமராதர் அவர்களிடம் அறிவித்தார். சாரங்கரவர் அதைப்பார்த்து, "அரசனுடைய வணக்கம் ஆச்சரியத் தைத் தரவில்லை. மரங்கள் கனிகளால் நிரம்பி வணங்கு கின்றன. நீர் நிறைந்த முகில்கள் நம்மிடம் அணுகி யே இருக்கின்றன. செல்வம் வளர்ந்து ஓங்க வோங்க நல்லவர்கள் செருக்கில்லாமல் வணக்கமாகவே யிருப்

பார்கள். இப்படி யிருப்பதுதான் இயற்கை" என்றார். அரசன் சகுந்தலையைப் பார்த்து, "இவள் யாரோ தெரியவில்லை. முகமூடியால் போர்த்து மூடிக்கொண்டிருப்பதால் இவள் அழகு மிகவும் விளங்கவுமில்லை; விளங்காமலுமில்லை. தபசிகளின் நடுவில் இவள் உலர்ந்த சிறகுகளின் நடுவில் செந்தளிர்போலத் தோன்றுகிறாள். பிறன் மனைவியைப் பார்ப்பதும் வர்ணிப்பதுந் தவறு" என்று ஐயமடைந்தான். பிறகு முனிவர்களைப் பார்த்து, "தவம் இடையூறின்றி நடந்து வருகின்றதா?" என்று வினவினான். அவர்கள், "உன் ஆட்சியின் கீழ் அதற்கு என்ன குறைவு ஏற்படும்? கதிரவன் ஒளிவீசும் பொழுது இருள் இருக்குமா?" என்று மறு மொழி சொல்லி, "கண்வரிஷி பின்வருமாறு சொல்லச் சொன்னார்: 'நீ காந்தர்வ விவாகமாக என் பெண்ணை மணஞ் செய்துகொண்டது எனக்குச் சம்மதம். நீ பூஜிக்கக்கூடியவர்களுக்குட் சிறந்தவன். சகுந்தலையோ பூஜையேயுருவெடுத்துவந்தவள். ஆகையால் இத்தகைய தலைவனையும் தலைவியையும் சேர்த்து வைத்த பிரமன் பொருத்தமில்லாத மணங்களை ஏற்படுத்துகிறானென்னும் பழியிலிருந்து விடுபட்டு விட்டார். கருத்தரித்திருக்கும் இந்தப் புனிதவதியை ஏற்றுக்கொண்டு மகிழ்வாயாக" என்றுரைத்தார். அரசன், "என்ன சொன்னீர்?" என்று வியப்பை யடைந்து வினவினான். அப்பொழுது சாரங்கரவர், "கற்புடையவளும் பிறந்தகத்திலேயே இருந்தால் அவளை எல்லோரும் இகழ்ந்து கூறுவார்கள். நாயகன் வெறுத்தாலும் பெண்கள் அவனுடன்தான் இருக்கவேண்டும்" என்றார். அரசன்,

"நான் இவளை மணஞ் செய்துகொண்டேனா?" என்றான். சார்ங்கரவர், "காரியம் முடிந்துவிட்டதே யென்ற உபேக்ஷையாலும், உன் அதர்ம புத்தியாலும், நாங்கள் ஆசிரமவாசிகளென்று அலக்ஷ்யத்தாலும் நீ இப்படி நடந்துகொள்ளுகிறாயா? செல்வச் செருக்குள்ளவர்களுக்கு இது இயற்கைதானே" என்று சினந்து மொழிந்தார். கௌதமி சகுந்தலையின் முகமூடியைத் திறந்து அவளைப் பார்த்தால் அரசனுக்கு நினைவு வருமென்று எண்ணி அவன் அவளைப் பார்க்கும்படி செய்தாள். அரசன், "இவளை நான் மணந்ததாகவே நினைப்பு இல்லையே. அவள் சௌந்தர்யத்தைக் கண்டு நான் மிகவும் வியப்படைகிறேன். பனியால் நனைந்த குந்த புஷ்பத்தை விடியற்காலத்தில் கண்ட வண்டு தேனுக் காசைப்பட்டு அதை விடவும் மனமில்லாமல் குளிருக்குப் பயந்து அதை நெருங்கவும் மனமில்லாமல் இருப்பது போலன்றோ என் நிலை இருக்கிறது" என்று சஞ்சலப்பட்டான். அச்சபையிலிருந்தவர்கள் தெய்வப் பெண்போலிருந்த சகுந்தலையை நோக்கி "இந்த அழகிய சீமாட்டியை யார் ஏற்றுக்கொள்ளாமலிருப்பார்கள்? இதென்ன ஆச்சரிய" மென்று வியந்தார்கள். அரசன், "எனக்கு இவளை மணஞ் செய்துகொண்டதாக ஞாபகமே இல்லையே. மணஞ் செய்யப்பட்டுக் கருத்தரித்த இவளை நான் எப்படி ஏற்றுக்கொள்வது?" என்று வருந்தினான். சகுந்தலை மிகவும் துக்கித்து, "கல்யாணத்திலேயே ஐயமா? என்னுடைய மேன்மையான ஆசை பாழாய்விட்டதே" என்று வருந்தினாள். சாரங்கரவர் அரசனைப் பார்த்து, "நீ யாவரும் அறியாமல்

மறைவாக மணஞ்செய்துகொண்டதை மன்னித்து உனக்கு இந்தப் பெண்மணியை மனைவியாக அனுப்பிய முனிவரை அவமதிக்கவேண்டியது சரியே. திருடனுக்கே சொத்தைத் தானங் கொடுப்பவராகவன்றோ அவர் ஆகிவிட்டார்?" என்று கடுகடுத்துக் கோபமாக உரைத்தார். சாரத்வதர் சாரங்கரவரைப் பார்த்து, "அண்ணா! கோபம் வேண்டாம். நாம் எது சொல்வது தகுதியோ அதைச் சொல்லியாய்விட்டது. அம்மா, சகுந்தலா, அரசனுக்கு நம்பிக்கைவரும்படி நீ கூறவேண்டியதைச் சொல்" என்றார். சகுந்தலை அரசனைப பார்த்து, 'ஆரியபுத்ர' வென்று நாயகனைக் கூப்பிடும் வழக்கம்போலக் கூப்பிட எழுந்த நாவைத் தடுத்து, "பௌரவ, கபடமற்ற என் மனத்தை வஞ்சித்து இப்பொழுது இப்படிச் சொல்வது நியாயமன்று" என்றாள். அரசன் காதைப் பொத்திக்கொண்டு, "வெள்ளம் எப்படித் தெளிந்த நீரைக் கலக்கிக் கரையிலுள்ள மரங்களை வீழ்த்துமோ அப்படி நீ என் நிர்மலமான கீர்த்தியை மாசுறும்படி செய்து என்னையும் பாவியாகச் செய்யலாமா?" என்று சொன்னான். சகுந்தலை, "அப்படி உமக்கு நான் பிறன் மனைவியென்ற ஐயமிருந்தால் இதோ இந்த அடையாளத்தைப் பார்த்து உன் ஐயத்தைத் தீர்த்துக்கொள்ளலாம்" என்று சொல்லி மோதிரத்தைத்தேட அதைக் காணாமல் திடுக்கிட்டாள். "ஐயோ! மோதிரம் எங்கு போயிற்றோ?" வென்று அவள் வருந்த, அரசன் "பெண்கள் மாயா நீலிகள்" என்றான். கௌதமி, "அம்மா! சசி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யும்பொழுது மோதிரம்

அங்கே விழுந்திருக்கலாம்" என்றாள். சகுந்தலை, அரசனைப் பார்த்து "வேறு அடையாளம் சொல்லுகிறேன். ஒரு நாள் ஒரு மான்குட்டி நீங்கள் நீர் கொடுத்து அருந்தாமல் நான் கொடுத்து அது அருந்தியதைப் பார்த்து இனம் இனத்தோடு சேருமன்றோ? இருவர்களும் வனவாசிகளல்லவா? வென்று நீங்கள் சொல்லவில்லையோ?" என்றாள். அரசன் "அப்படியா! இப்படியன்றோ பெண்கள் மாயத்தால் காமிகளை மயக்குகின்றார்கள்" என்றான். கௌதமி அவனைப் பார்த்து, "ஐயா! அப்படிச் சொல்லலாமா? தபோவனத்திற் பிறந்து வளர்ந்த இவளுக்குப் பொய்யே தெரியாது" என்றாள். அரசன், "பெண் பறவைகளுக்கும் இயற்கையான சாமர்த்தியம் இருக்கின்றதே. பெண் குயில் தன் குஞ்சை மற்றப் பறவைகள் வளர்க்கும்படி வஞ்சிக்கிறதன்றோ?" என்றான. சகுந்தலை சினங்கொண்டு, "எல்லோரையும் உம்மைப்போலவே எண்ணுகிறீரா? எவர்கள்தான் உம்மைப்போல் தர்மாத்மாவைப்போல வேஷம் பூண்டு புல்லால் மூடப்பட்ட கிணற்றை ஒத்திருப்பார்கள்?" என்று வெறுத்தாள். அரசன், "இவள் கோபமாகப் பேசுவது உண்மையாகவே தோன்றுகிறது. என்னைப் பார்த்து இவள் கண் சிவந்து கலங்கிப் புருவம் நெரித்துப் பார்ப்பது மன்மதனே வில்லை வளைத்தால் போலிருக்கின்றது" என்று எண்ணினான். சாரங்கரவர் 'பெரியோர்களின் அனுமதியில்லாமல் ஏற்படும் பிரியம் இப்படியேதான் பிறகு சுடும். ஆகையால் தீர விசாரித்துத் தான் பிரியத்தை ஒருவரிடத்தில் வைக்கவேண்டும். நன்றாய்

ஆராய்ந்து அறியாத விடத்தில் வைத்த அன்பு துன்பமாகவும் பகையாகவும் முடிகின்றது" என்று தூக்கித்தார். பிறகு அரசனைப் பார்த்து, "பிறந்தது முதல் பொய்யென்பது இன்னதென்றே தெரியாதவர்களின் வார்த்தை பொய்யாகவே யிருக்கட்டும். பிறரை மோசம் பண்ணுவதையே பிறந்தது முதல் கற்றுவரும் மனிதர்கள் பேச்சே மெய்யாக இருக்கட்டும். இவள் உன் மனைவியானதால் நீ ஏற்றுக்கொண்டாலுஞ் சரி, தள்ளி விட்டாலுஞ் சரி. மனைவியிடத்திற் கணவனுக்கு சர்வாதிகாரம் உண்டு. கௌதமி, வா, நாம் போவோம்" என்று புறப்பட்டார். சகுந்தலை அழுது கொண்டு, "நீங்களுமா என்னைக் கைவிடுகிறீர்கள்?" என்று சொல்ல, கௌதமி சார்ங்கரவரைப் பார்த்து, "குழந்தை அழும் பொழுது செல்லலாமா? கணவன் தள்ளும்பொழுது குழந்தை என்ன செய்வாள்?" என்றாள். சார்ங்கரவர் வெகுண்டு "சகுந்தலே! உன்னை உன் கணவன் தள்ளிவிட்டால் குலதர்மத்தை யிழந்த உன்னை உன் தந்தை ஏற்றுக் கொள்ளலாமா? நீ உன் கணவன் வீட்டிலேயே பணிவிடை செய்து கொண்டுதானிருக்கவேண்டும்" என்று கட்டளை யிட்டார். அரசன், "சந்திரன் ஆம்பல் பூவையே மலரும்படி செய்கிறான். கதிரவன் தாமரையையே மலரும்படி செய்கிறான். நெறி தவறாதவர்கள் பிறன் மனைவியை ஏற்றுக்கொள்வார்களா?" என்று சொல்லி "இவளை மணந்து ஏற்றுக் கொள்ளாவிட்டால் மனைவியைத் தள்ளின பாபமும், கலியாணஞ் செய்யாமல் ஏற்றுக்கொண்டாலோ பிறன் மனைவியை ஏற்றுக்கொண்ட

பாபமும், என்னைச்சேரும் என்ன செய்வது." என்று வருந்தினன். சோமராதர் அவனைப் பார்த்து, "குழந்தை பிறக்குமளவும் இவள் என் வீட்டிலேயே இருக்கட்டும். உனக்குப் பிறக்கும் குழந்தை சக்ரவர்த்தியாக விருப்பான் என்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். அந்த அடையாளங்கள் இவளிடம் பிறக்கும் குழந்தையிடமிருந்தால் இவளை ஏற்றுக்கொள். இல்லாவிட்டால் இவள் தந்தையின் ஆசிரமம் இருக்கவே யிருக்கிறது" என்றார். அரசன் அப்படிச் செய்ய அவருக்கு அனுமதி கொடுக்கவே, சகுந்தலை அழுது கொண்டு, "பூதேவி, எனக்கு நீ இடம் கொடுத்து உன்னிடம் அழைத்துச் செல்ல மாட்டாயா" என்று கதறிக் கொண்டு அவருடன் சென்றாள். சிறிது நேரத்திற் கெல்லாம் புரோகிதர் திரும்பி வந்து "ஆச்சரியம், ஆச்சரியம்! கண்வ சிஷ்யர்கள் போன பிறகு சகுந்தலை தன் துர்ப்பாக்கியத்தைக் குறித்து அழுது அடித்துக் கொண்டு செல்ல ஜ்யோதிர்மயமான ஒளி வீசும் பெண்ணுருவம் கொண்ட ஒரு தேவதையால் அவள் அன்புடன் தூக்கிக்கொண்டு போகப்பட்டாள்" என்று அரசனிடம் சொன்னார். அரசனும் மனங்கலங்கி என்ன செய்வது என்று அறியாமல் அரண்மனைக்குச் சென்றான்.

## 6. துஷ்யந்தன் விரகம்.

இப்படிச் சில காலமான பிறகு சசி தீர்த்தத்திலிருந்து ஒரு செம்படவன் கையில் ஒரு மீன் அகப்பட்டது. அதை யறுத்தபொழுது அதன் வயிற்றில்

ஒரு மோதிரம் கிடைத்தது. அதை அவன் எடுத்துவரும் பொழுது இரண்டு காவலாளிகள் அவனைப் பிடித்து, "உனக்கு அரசன் மோதிரம் எப்படிக் கிடைத்த தடா? உனக்கு அரசன் அதைப் பரிசாக அளித்தாரா?" என்று ஏசித் திட்டி வருத்தவே அவன், "என்னை விட்டு விடுங்கள்" என்று கதறினான். "நீ யார்?" என்று கேட்க "நான் செம்படவன்" என்றான். "அது நல்ல தூய்மையான தொழில்தான்" என்று அவர்கள் கேலிபண்ண, அவன் "பிறப்பிலேற்பட்ட தொழிலில் தோஷமுண்டா? அந்தணர்கள் யாகம் செய்யவில்லையா?" என்றான். பிறகு அவன் "நான் பிடித்த மீன் வயிற்றில் இது கிடைத்தது. இது உண்மை. நான் நிஜத்தைச் சொல்லிவிட்டேன். நீங்கள் என்னைக் கொன்றாலும் சரி, விட்டாலும் சரி," என்றான். உடனே காவலர்களின் உத்தியோகஸ்தன் அரசனிடம் அந்த மோதிரத்தைக் காட்டப்போவதாகச் சொல்லித் தான் திரும்பி வரும் வரையில் செம்படவனைப் பின் கட்டாகக் கட்டி வைக்கும்படி உத்தரவு செய்து அரசனிடம் சென்றான். காவலாளி செம்படவனைப் பார்த்து, "உனக்கு இன்றைய தினம் பூவால் அலங்காரம் பண்ணிப் பிணமாலையைப் போட்டு உன்னைக் கழுவேற்ற என் கைகள் ஆசைப்படுகின்றன கழுகுக்குப் பலிதான் நீ" என்று விரட்டினான்.

அரசனிடத்தில் மோதிரம் சேர்ந்தவுடனே அவன் மறதிமாறி நினைவு உதித்ததால் அவன் அதிகத் துயரத்தில் ஆழ்ந்தான். "உத்தமியான சகுந்தலையிடத்தில் அளவற்ற காதல் கொண்டதை மறந்தேனே! இதென்ன மதி இழுத்தலா, பைத்தியமா, கர்மபலமா,

தெய்வச் செயலா? கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்ததுபோல் என்னை நாடித் தேடி வந்த புண்ணிய வதியைப் புறக்கணித்துப் பாவத்தைச் சேர்த்து இன்பத்தை இழந்தேனே!" என்று துடிதுடித்தான், மனங்கலங்கினான், கண்ணீர் சொரிந்தான். ஆனாலும் அரசன் வெளிப்படையாக எல்லோர் முன்னிலையிலும் வருந்துவது தகுதியன்றாதலால் துயரத்தைத் தடுத்து அடக்கி மோதிரத்தை யெடுத்துக்கொண்டுவந்த செம்படவனுக்கு ஏராளமான பரிசு கொடுக்கும்படி கட்டளையிட்டான். காவலாளிகளின் உத்தியோகஸ்தன் விரைவாகச் சென்று செம்படவனைக் கட்டுக்களினின்றும் விடுவித்து அவனுக்குப பரிசைக் கொடுத்தான். காவலாளிகள் ஆச்சரியப்பட்டுக் காரணம் வினவ அவன் "அரசன் மோதிரத்தைக் கண்டது முதல் காணமற்போன குழந்தையைக் கண்டவன்போல் அதைப் பரபரப்புடன் பார்த்து யாரையோ நினைத்து வருந்திச் செம்படவனுக்குப் பரிசு கொடுக்கும்படிக் கட்டளையிட்டான்' என்றான். செம்படவன் களித்து அவர்களுக்குப் பரிசில் ஒரு பங்கு தருவதாகச் சொல்லி அவர்களைக் களிப்பித்தான். அவர்கள் அனைவரும் கட்கடைக்குச் சென்று மதுபானம் பண்ணி நட்பை உறுதிப்படுத்துவதற்குப் பேரொலி செய்துகொண்டு ஆரவாரித்துச் சென்றார்கள்.

இது இப்படி யிருக்க ஒரு நாள் சகுந்தலையின் தாயான மேனகையின் தோழி சானுமதி சுவர்க்கத்திலிருந்து பூமிக்கு வந்து திரஸ்காணீ வித்தையால் தன் உருவத்தைப் பிறர் காணதபடி மறைத்துக்கொண்டு

அரசன் இருக்குந் தன்மையை அறிய அரண்மனைக்கு வந்தாள். அப்பொழுது பரப்ருதிகை, மதுகரிகை என்ற இருபெண்கள் நந்தவனத்தில் வசந்த சமயமான தாற் காமதேவனைப் பூசிக்க மாந்தளிர் கொய்துகொண் டிருந்தார்கள். அப்பொழுது சேவகன் ஒருவன் ஓடி வந்து அவர்களைத் தடுத்தான். 'ஏன் தடுக்கிறாய்?' என்று கேட்க, அவன் "உங்களுக்கு அரண்மனைச் செய்தி எட்டவில்லையா?" என்றான். அவர்கள் தாங்கள் அங் கே இல்லாததால் தங்கள் காதுக்கு அது எட்டவில்லை என்றார்கள். அவன், "தான் சகுந்தலையை ஏற்றுக் கொள்ளாததுமுதல் அரசன் கவலையாகவே இருந்து மோதிரத்தைப்பார்த்தவுடன் அவருக்குப்பழையநினைவு வர அதுமுதல் துயரத்தில் ஆழ்ந்திருக்கிறார். அழகிய பொருட்களையோ இனிய சப்தங்களையோ அவர் பார்ப் பதுமில்லை கேட்பதுமில்லை. கொலுவுக்கும் ஒவ்வொரு நாளும் வருவதில்லை. அவர் உறக்கமற்றுப் பெருமூச்சு விட்டு இரவெல்லாம விழித்து வருந்துகிறார். அரண்மனை யிலுள்ளவர்களிடத்தில் இயற்கையான பெருந்தன்மை யால் எப்பொழுதாவது மொழிந்தாலும் அவர் பெயர் தவறிச் சகுந்தலை யெனறழைத்து வெட்கி வருந்து கிறார். தாம் இன்பமற்றிருப்பதால வசந்த காலத்திற் காமதேவ னுத்சவம் வேண்டாமென்று அவர் நிறுத்தி விட்டார். வசந்த காலமே அவருடன் கூட வருந்துவது போல பூக்கள் செம்மையாக பலரவில்லை. இளவேனிற் காலத்தின் இயற்கை அழகே எங்கோ போய் மறைந்து விட்டது. குயிலின் குரலும் இனிப் பற்றிருக்கின்றது. மதனனும் அம்புறாத்தூணியி

ளுள்ள பூவம்பைப் பாதி இழுத்து மறுபடியும் அதை அதிலேயே வைத்துவிட்டதுபோலத் தோன்று கிறது" என்றான். அச்சமயத்தில் அரசனும் விதூஷக னும் அங்கே வரவே அவர்கள் அங்கிருந்து விரைவாக அப்பாற் சென்றார்கள்.

அரசன் இருக்கும் பரிதாப நிலையைக் கண்ட சானு மதி, "அரசனால் அவமானிக்கப்பட்ட சகுந்தலை அவ னிடமே அன்புடன் இருப்பது தகுதிதான் என்று இப்பொழுதுதான் எனக்குத் தெரிகிறது" என்று நினைத்தாள். அரசன் விதூஷகனைப் பார்த்து "சகுந் தலை வந்தபொழுது அவளை முற்றிலும் மறந்திருந்த என் மனம் அவள் இல்லாதபொழுது அவளைப்பற்றி நினை த்து என்ன பயனை அடையப்போகிறது?" என்று சொ ல்லித் தூக்கித்தான். பிறகு அவன் அவளுடைய உருவத்தைச் சித்திரத்தில் எழுதித் துயரத் தை ஆற்றிக்கொள்ள முயன்று சித்திரப் பலகை கொண்டு வரச்சொன்னான். விதூஷகனைப் பார்த்து, "அப்பா, நீயாவது நான் அவளை மறந்திருக் கும் வேளையில் எனக்கு ஞாபகப்படுத்தக் கூடாதா"? என் றான். விதூஷகனும், "ஐயோ! நான் புறப்பட்டு வரும் பொழுது சகுந்தலையைப்பற்றிச் சொன்னது பரி காச வார்த்தை யென்று நீயே சொன்னதால் அவள் வார்த்தையில் எனக்கு நம்பிக்கையுண்டாகவில்லை. கனி மண் மூளையோடுகூடிய என்னால் உனக்கு இத்துயரம் வந்தது. விதியை வெல்ல முடியுமா?" என்று அரசனி டத்திலுள்ள மெய்யன்பால் வருந்தினான். அரசன், "ஐயோ! சாரங்கரவர் தன்னுடன் வரக்கூடாது என்று

தடுத்து நானும் ஏற்றுக்கொள்ளமாட்டேனென்று மறுத்த வேளையில் சகுந்தலை நிராசையாகவும், அச்சத்துடனும், துயரத்துடனும், வெறுப்புடனும் கலங்கிக் கண்ணீர் சொரிந்து என்னைப் பார்த்த பார்வை நாராசம்போல் என் மனதைத் துளைக்கின்றதே" என்று சொல்லி மீளாத் துயரமடைந்தான். விதூஷகன் அரசனைத் தேற்றி "வருந்தவேண்டாம். மேனகாதேவி சகுந்தலை வருந்துவதைச் சகிப்பாளா. மறுபடியும் உன்னை அடையும்படி செய்வாள்" என்று சொன்னான். அரசன் "எனக்கு என்ன கனவா, மாயமா, புண்ணியத்தின் அழிவா? சகுந்தலையின் வரவு ஏது? ஆசையான அருவி அளவில்லாத ஆழமுள்ள பள்ளத்தில் விழுவதுபோல் வீணாகப் பிரவகித்துக்கொண்டிருப்பதால் பயனென்ன?" என்று துயரம் மேலிட்டுச் சொன்னான். விதூஷகன் அவனைப் பார்த்து, "மோதிரம் அகப்பட்டதே சுபசூசனமன்றோ. அது வந்தது போல் அவளும் வருவாள்" என்றான். அரசன், "என்னைப்போல அதுவும் துர்பாக்கியம் நிறைந்தது. அவள் கையைத் தொட்டும் அவள் விரலிலிருக்கும் புண்ணியத்தை அது பெறவில்லை" என்றான். விதூஷகன் அவனைப் பார்த்து "இந்த மோதிரம் அவளிடத்தில் எப்படிச் சேர்ந்தது?" என்று வினவினான். அரசன், "நான் அவளைக் காந்தர்வ மணம் புரிந்து நீங்கி வரும்பொழுது இன்னும் எவ்வளவு காலத்துக்குள் வரவழைப்பீர்கள், என்று என்னை கேட்டாள். அதற்கு நான் இம்மோதிரத்தை அவள் விரலில் போட்டு இதில் இருக்கும் பெயரில் எத்தனை

எழுத்துக்கள் இருக்கின்றனவோ அத்தனை நாட்க ளுக்குள் சிறப்போடு அவளை வரவழைப்பதாகச் சொன்னேன். ஆனால் நான் மதி இழந்ததால் எனக்கு இந்தப் பாபமும் துன்பமும் நேர்ந்தன. இந்த மோதி ரம் அவள் அழகிய கையை விட்டு நீரில் விழுவானேன்? ஆனால் மதியுள்ள எனக்கே மதிமோசம் வந்தால் அசே தனமான மோதிரத்தின்மேல் என்ன குற்றம்" என்று வருந்தினன். அப்பொழுது கொண்டுவரப்பட்ட சித்தி ரப்பலகையில் அரசன் எழுதின சகுந்தலையின் வடி வம் அவள் தோழிகளின் நடுவில் திருத்தமாகவும் அதிமனோகரமாகவும் உயிருடன் இருப்பதுபோலவும் சானுமதியும் வியக்கும்படி வரையப்பட்டிருந்தது. அரசன், "நேரில் வந்த மகாலக்ஷ்மி போன்ற சகுந் தலையைத் தள்ளிவிட்டு ஆற்றைக் கடந்து கானலைத் தேடும் நீர்வேட்கையுடையவனைப்போல் இந்தச் சித் திரத்தில் ஈடுபட்டிருக்கிறேன்" என்றான. இன்னும் என்ன எழுதப் பாக்கி யிருக்கிறதென்று விதூஷகன் கேட்க "மாலினீ என்ற ஆறும், இமயமலைச் சாரலி லுள்ள அழகிய இடங்களும், மரங்களில் உலர்த்திய மரவுரிகளும் மான்களும் வரையப் பெறல்வேண்டும்" என்று அரசன் மறுமொழி சொன்னான். இப்படிப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது மந்திரி, "ஒரு பெரிய வியாபாரி பிரயாணம் செய்த கப்பல் மூழ்க அவன் இறந் தான். அவனுக்குக் குழந்தைகள் இல்லை. அவனுடைய ஏராளமான சொத்து அரசனையே சேரவேண்டும்" என்று எழுதப்பட்டிருந்த அறிக்கையை அனுப்பி னான். அரசன் அதைப்பற்றி விசாரித்து இறந்த வணி

கன் மனைவி கர்ப்பமாக இருப்பதாக அறிந்து அவன் சொத்தை அவளுக்குப் பிறக்கும் குழந்தைக்குப் பாது காத்துக்கொடுக்கும்படி கட்டளையிட்டான். சகுந்தலையைப் பிரிந்து வருத்தமுற்றது முதல் அரசன் மனம் எல்லோரிடத்திலும் அனுதாபம் நிறைந்து அவன் மகா தயாமூர்த்தியாக இருந்தான் முரசறைவித்து, "என் குடிகளில் எவர் எவர்கள் உற்றாரை இழந்து வருந்துகிறார்களோ அவரவர்களுக்கு நானே தர்மவழியாக பந்துவாக இருந்து அவர்களுடைய கவலையை நீக்குகின்றேன்" என்று எல்லோருக்கும் தெரிவித்தான்.

இவையெல்லாங் கண்ட சானுமதி களித்துச் சகுந்தலையினிடத்தில் துஷ்யந்தன் பிரேமையைத் தெரிவிக்க ஆகாயமார்க்கமாகச் சுவர்க்கத்திற்குச் சென்றாள். அப்பொழுது தேவேந்திரனால் அசுரர்களை வெல்லுவதற்கு உதவியாகத் துஷ்யந்த மகாராஜனை அழைத்து வரும்படி இந்திரன் சாரதி மாதலி அனுப்பப்பட்டான். மாதலி அரசன் துயரத்தில் ஆழ்ந்து பௌருஷமற்றிருப்பதைப் பார்த்து அவனுக்குப் பராக்கிரமம் பிரகாசிப்பிக்கவும் ரோஷம் உண்டாக்கவும் எண்ணி விதூஷகனைப் பிடித்து அரண்மனை உச்சிக்குத் தூக்கிக்கொண்டு போனான். விதூஷகன் பயந்து கதற, அரசன் சினந்து தன் வில்லைக் கொண்டுவர உத்தரவு செய்தான் மாதலி விதூஷகனைப் பார்த்து, "இப்பொழுதே புலி பசுவைக் கொல்வதுபோல உன்னைக் கொன்று உன் கழுத்து இரத்தத்தைக் குடிப்பேன், பயந்து அடைக்கலம் புகுந்தவர்களைக் காப்பதாகக் கையில் வில் ஏந்தின துஷ்யந்தன் முடியுமானால் உன்னைக் காக்கட்டும்" என்றான்.

உடனே அவனைக்கொல்ல அம்பைத் தொடுத்த அரசனைப் பார்த்து மாதலி, "நிறுத்து, உன் அம்புக்கு இரையாகவேண்டிய அரக்கர்கள் இருக்கிறார்கள். அன்பர்களிடத்தில் அன்பைக் காட்டாமல் அம்பையா காட்டுகிறது?" என்றான். அரசன், "மாதலியா? நல்வரவா?" என்று கேட்டான். மாதலி "தேவேந்திரன் உன் உதவியை எதிர்பார்க்கிறான். காலநேமி என்ற அசுரன் வம்சத்திலுதித்த அரக்கர்களுடன் போர்புரிந்து வெற்றி பெறுவதற்கு உன்னால் தான் முடியுமென்றறிந்து உன்னை யழைத்து வர என்னை யனுப்பியிருக்கிறான்," என்றுரைத்தான். அரசன் "எனக்கு இந்தப் பதவியைக் கொடுத்ததற்கு நான் மகிழ்ந்தேன். ஆனால் எதற்காக விதூஷகனை இந்தப் பாடுபடுத்தி வைத்தாய்?" என்று வினவினான். மாதலி, "நீ துயரத்திலாழ்ந்திருப்பதைப் பார்த்து, உனக்கு ரோஷமுண்டாக இந்தக் காரியம் செய்தேன். அடுப்பிலிட்ட விறகை அசைத்தால் நெருப்புப் பொறி பறக்கும். கிருஷ்ண சர்ப்பத்தைத் தடுத்தால் படமெடுக்கும். தூண்டினால் விளக்கு ஒளி வீசும். அது போல் உன் பௌருஷத்தைக் கொதித்தெழும்படி செய்த காரியம். பிறர் எதிர்க்க எதிர்க்க நம்முடைய பெருமை ஜ்வலிக்கும்" என்று சொன்னான். உடனே அரசன் விதூஷகனிடம் மந்திரியை ராஜ்ய காரியங்களைச் சரியாகப் பார்த்துக்கொள்ளச் சொல்லி யனுப்பிவிட்டு மாதலியுடன் மகேந்திரன் ரதத்திலேறிச் சென்றான்.

## 7. சகுந்தலா பரத ப்ராப்தி.

அசுரர்கள் யாவரையும் வென்று இந்திரனால் உயர்ந்த மரியாதையை அவன் அடைந்தான். இந்திரன் அவனுக்கு அர்த்தாசனம் கொடுத்துத் தன் மந்தார மாலையை அவன் அணியும்படி செய்து மிகவும்கௌரவித்தான். அரசனுடைய கீர்த்தியைத் தெய்வப் பெண்கள் பாடிப் புகழ்ந்தார்கள். இப்படிச் சகல வைபவத்தோடுஞ் சுவர்க்கத்திலிருந்து மாதலியின் ரதத்தில் ஏறிப்பூமியை நோக்கி இறங்கி வரும்பொழுது அவன் பூமி புலப்படும் ஆச்சரியத்தைக் கண்ணுற்றுக் களித்தான். "மேலே ஏறிவரும் மலை உச்சிகளிலிருந்து தரை இறங்குவது போலிருக்கின்றது. மரங்களின் இலைகளில் மறைந்திருந்த மரங்களுடைய அடிமரம் இப்பொழுது புலப்படுகின்றது. ஓடும் நீர் கண்ணுக்குத் தெரியாமலிருந்த ஆறுகள் நீர் நிறைந்து ஓடுகின்றன. யாரோ பூமியைப் பந்தாகத் தூக்கி எறிந்தாற்போல பூமி நம்மிடம் நெருங்கி வருகின்றது" என்று மாதலியைப் பார்த்துச் சொன்னான். இப்படிப் பேசிக்கொண்டே பூமியை நோக்கி ஆகாயத்திலிருந்து இறங்கும் பொழுதுஹேமகூடபர்வதத்தைக் கண்டு அரசன், "இது என்ன? மேற்குக் கடல் கிழக்குக் கடல் இரண்டையும் தொட்டு வியாபித்துப் பொன் வழிவதுபோல் விளங்கிக் கதிரவனின் ஒளி தாக்கப்பட்ட மாலை முகில்போல் ஜ்வலிக்கின்றதே" என்றான். மாதலி, "இதுதான் ஹேமகூடம். இங்கே சுவாயம்புமனுவின் குமாரரான மரீசியின் குமாரன் காச்யபப் பிரஜாபதியும் அவர் தர்மபத்னியான அதிதியும் தவஞ் செய்யும் இடம்" என்று வணக்

கத்துடன் சொல்லவே அரசன் அந்தத் திசையை நோக்கிக் கைகூப்பித் தலை வணங்கி அவரைக் கண்டு தரிசித்துச் செல்ல மாதலியை வேண்டினான். உடனே மாதலி ரதத்தை நிறுத்தினான். அந்த ஆகாய ரதம் நின்ற அழகை உணர்ந்த அரசன், "இதென்ன ஆச்சரியம்! ரதத்தின் சக்கரங்களின் ஒலியே இல்லை. தூசியும் எழவில்லை. சுவர்க்கலோக ரதமாகையின் பூஸ்பர்சமில்லாமல் நிற்கின்றபடியால் ரதம் இறங்கி நின்றும் நிற்பதுபோல் தெரியவில்லையே!" என்று சொன்னான். அரசன் காச்யபர் ஆசிரமத்தில் சென்றதும், "இது சுவர்க்கத்தைக் காட்டிலும் உயர்ந்த சாந்தியையும் சந்தோஷத்தையும் தருகின்றது. அமிருதமயமான தடாகத்தில் நீராடினது போல என் மனம் ஆனந்தத்தால் நிறைந்திருக்கின்றது. கல்பக விருக்ஷங்கள் நிறைந்த இவ் வனத்தில் சஞ்சரிக்கும் புனிதமான காற்றால் ப்ராணாயாமம் செய்வது மிகவும் உயர்ந்தது. பொற்றாமரை மலர்களின் உள்ளிருக்கும் சுவர்ணத்தூள்களால் நறுமணம் வீசும் இந்த நீரில் நீராடுவது என்ன பேரின்பம்! இந்த ரத்தின மயமான இடங்களில் உட்கார்ந்து தெய்வப் பெண்களாற் சூழப்பெற்றிருந்தும் அவர்களிடம் காமுற்று மனம் ஈடுபடாமல் ஈசனைத் தியானிப்பது என்ன பிரமானந்தம். பூமியிலுள்ளோரும் தவம் யாகம் முதலியவற்றைச் செய்து அதனால் பெற விரும்பும் அப்சர மாதர் நிறைந்த இவ்வழகிய விடத்தில் எத்தனை முனிவர்கள் சிறந்த தவத்தைச் செய்து மனமடங்கிய இன்புற்று ஈசனை சாக்ஷாத்கரிக்கின்றார்கள்!" என்றுவியப்பை யடைந்தான். மாதலியை நோக்கிக் காச்

யபர் எங்கே? என்று வினவ, அவன் "அவர் தாக்ஷாயணி தேவியின் முன்பாக அனேக ரிஷிபத்னிகளுக்குப் பெண்களுடைய தர்மங்களை உபதேசம் பண்ணிக்கொண்டிருக்கிறார்" என்று அறிவித்து அரசனை நோக்கி, "மகா முனிவர்களைத் தரிசிக்க வேளையறிந்து செல்லவேண்டும். தன் மகனை இந்திரனுக்குச் சகாயம் செய்த உன்னைப் பார்த்து உனக்கு ஆசீர்வாதம் பண்ண அவரும் விரும்புவர். நான் சென்று சமயமறிந்து வருகிறேன். இந்த அசோக மரத்தின் நிழலில் அமர்ந்திரு" என்று சொல்லிக் காச்யபர் இருக்குமிடத்திற்குச் சென்றான்.

அவன் அசோகமரம் என்று சொன்னது ஈசனே அவன் வாக்கில் புகுந்து அரசன் சோகத்தைத் தீர்க்கச் செய்த சங்கல்பமேயாகும். அரசனை அங்கே அமர்ந்திருந்தபொழுது அவன் வலது தோள் துடித்தது. அங்கே ஒரு பாலன் சிங்கக் குட்டியை விளையாடுவதற்குத் தூக்கிக்கொண்டு அதைப்பின் தொடர்ந்து வந்த பெருஞ்சிங்கத்தை அச்சமில்லாமல் அடித்து விரட்டும் காட்சியைக் கண்டான். அவனுடன் வந்த இரு பெண்களில் ஒருத்தி, "பையா, விட்டுவிடு. இது என்ன பௌருஷம்! உனக்குச் சரியாகவே ரிஷிகள் சர்வதமனன் என்று உனக்குப் பெயர் வைத்திருக்கிறார்கள்" என்றாள் மற்றொரு தெய்வப் பெண், "விடாவிட்டால் இப்பெரிய சிங்கம் உன்னைத் தூக்கிக்கொண்டு போய்விடும்" என்று பயமுறுத்தினாள். அப்பையன், "நான் தான் இதனிடம் மிகவும் பயந்தவன்" என்று சிரித்தான். அரசன், "இந்தப் பையனை பார்க்கும்பொழுதே அடக்கக்

கூடாத ஆனந்தம் எனக்கு உண்டாகின்றதே. மக்கட் பேறில்லாதவர்களுக்கு இது இயற்கைபோலும். இவன் தேஜஸ்வியாகவும் பராக்கிரமசாலியாகவும் விளங்குகிறான். நெருப்புப் பொரிபோல் உருவத்திற் சிறுவனாக இருந்தாலும் இவன் மகாசக்தியுடன் விளங்குகிறானே" என்று ஆச்சரியப்பட்டான். அப்பொழுது ஒரு தெய்வப் பெண், "சிங்கக் குட்டியை விட்டுவிடு. உனக்கு வேறொரு விளையாட்டுச் சாமான் தருகிறேன்" என்றாள். பாலன் அதை வாங்கக் கையை நீட்டக் கையை அரசன் பார்த்து, "காலையில் மலரும் தாமரைப் பூவைப்போலச் சிவந்து அழகு வாய்ந்த இவனுடைய கை ராஜ ரேகைகளுடன் பிரகாசிக்கின்றதே!" என்றான். அப்பொழுது அப்பெண் மற்றொருத்தியை நோக்கி, "நீ போய் பர்ணசாலையில் மண் மயிலைக் கொண்டு வா" என்றனுப்பினாள். அரசன் பாலனைப் பார்த்து மகிழ்ந்து, "கொஞ்சம் கொஞ்சம் வெளியில் தோன்றும் முத்தைப்போன்ற அழகிய பற்களை விளையாட்டுப் புன்முறுவலால் காட்டி மழலைச்சொற்களைச் சொல்லிக்கொண்டு மடியில் இருக்கும் குழந்தைகளைக் கொஞ்சி அவைகளின் உடலில் இருக்கும் தூசிகளால் அழுக்கடையும் மனிதர்களே மகாபாக்கியசாலிகள்" என்று எண்ணினான். அப்பொழுது அந்தப் பெண் துஷ்யந்தனைப் பார்த்து, "ஐயா! இந்தப் பையன் சிங்கக் குட்டியை வருத்துகின்றான். அதை விடுவியுங்கள்" என்றாள். அரசன் அப்பையன் அருகில் சென்று, "நீ ஆசிரமத்தின் அமைதிக்கு மாறாக நடப்பது சரியன்று. அதை விட்டு விடு"

என்று சொன்னான். அப்பெண், "இவன் ரிஷிகுமார னல்ல" என்றாள். அரசன் அப்பையனை இறுகத் தழுவி, "இவன் எக்குலத்திலுதித்தவனோ! இவனைத் தழுவியபொழுதே பரமசுகமாக இருக்கின்றதே. எனக்கே இப்படி இருக்கும்பொழுது இவனைப் பெற்றோர்களுக்கு எப்படி இருக்குமோ!" என்று நினைத்தான். அப்பெண், "இதென்ன ஆச்சர்யம்" என்றாள். அரசன் வியப்பிற்குக் காரணம் என்னென்று வினவ, அவள் "இப்பையன் உங்களைப் போலவே இருக்கிறான். ஒருவனையும் லக்ஷ்யமே செய்யமாட டான். ஆனால உங்களுடைய பேச்சுக்குக் கட்டுப் பட்டு வணக்கமாக இருக்கிறானே!" என்றாள். அரசன "இவன் யார்?" என்றுகேட்க "இவன் புருவம்சத்தவன்" என்றாள். அரசன், "அதனால்தான் இவனிடம் வம்ச சௌந்தரியமும் சாரூப்யமும் இருக்கின்றன. புருவம் சத்தரசர்கள் வெகுகாலம் அரசாண்டு பிறகு அரசை விட்டுத் தவஞ் செய்வது அவர்களது குலவிரதம். அத் தன்மையுள்ள பௌரவ குலத்தில் பிறந்த எந்த அரசனு டைய மகனோ இவன்?" என்று நினைத்துப்பின் "மனி தர்கள் இந்தப் புண்ணிய பிரதேசத்தில் எப்படி வர முடியும்?" என்றான். அவள், "இவன் தாய் அப்சரப் பெண்ணின் மகள். ஆனால் அவள் நாயகன் அவளைத் தள்ளிவிட்டமையின் அவளைப்பற்றி ஒருவரும் இங்கே பேசுவதுமில்லை, நினைப்பதுமில்லை" என்றாள். அரசன் "இவள் இதையெல்லாம் சொல்லும்பொழுது என்னைக் குறிப்பிடுவது போலவே தோன்றுகிறது. இவன் தாயின பெயரைக் கேட்கலாம். ஆனால் பிறர் மனைவிகளின் பெய

ரைக் கேட்கலாகாதே" என்று நினைத்துத் தன் ஆவலை அடக்கிக்கொண்டான்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருந்தபொழுது மண்மயிலைக்கொண்டுவரப் போன தெய்வப் பெண் சர்வதமனனைப் பார்த்து, "சகுந்தலாவண்யத்தைப் (பக்ஷியின் அழகை)பார்த்தாயா?" என்றாள். சகுந்தலா என்ற பெயர் காதில் பட்டவுடனே அச்சிறுவன் அன்புடன் திரும்ப அப் பெண்கள் இருவரும், "உன்னை ஏய்த்து விட்டோமே! தாயினிடத்தில் இவ்வளவு ஆசையா"? என்று சொல்லிக் கலீர் என்று நகைத்தார்கள். அரசன், "சகுந்தலை என்று பெயர் சொல்லுகிறார்கள். பெயர் ஒற்றுமையால்மட்டும் நான் ஆசைகொள்ளலாமா? இதென்ன! கனவாகவோ கானலாகவோ முடியுமோ," என்று வருந்தினான். அப்பொழுது அந்த பாலனுடைய கையில் இருந்த ரக்ஷை காணாமற்போகவே, "ரக்ஷை காணவில்லையே" என்று அவர்கள் தேடினார்கள். அரசன், "சிங்கக்குட்டியை அடித்தபொழுது அது கீழே நழுவி விழுந்தது. இதோ இருக்கிறது" என்று எடுத்துக் கொண்டு வந்தான். அவர்கள், "ஐயோ! கீழே போட்டு விடுங்கள்" என்றார்கள். "ஏன்"? என்று அரசன் வினவ, அவர்கள், "அது அபராஜிதை என்ற பெயருள்ள மூலிகை. அதைக் காச்யபர் கொடுத்தார். அது தரையில் விழுந்தால் புதல்வனும் பெற்றோருந் தவிர மற்றவர்கள் அதை எடுத்தால் அது சர்ப்பமாக மாறிக் கடிக்கும்" என்றார்கள். உடனே அரசன மகிழ்ந்து குழந்தையை வாரியெடுத்துத் தழுவி முத்தமிட்டு உச்சி முகந்து மகிழ்ந்தான. அந்தப் பெண்கள் இருவரும் அந்த ஆச்சரியத்தைச் சொல்லச் சென்றார்கள்.

அப்பொழுது அந்த பாலன் அரசனைப் பார்த்து, "என்னை விட்டுவிடுங்கள். அம்மாவினிடத்திற் செல்ல வேண்டும்" என்றான். அரசன், "குழந்தாய்! என்னுடன் சென்று உன் தாயைக் களிப்பிப்பாய்" என்று சொல்ல, அப்பாலன் "என் தந்தை துஷ்யந்த மகாராஜன். நீங்கள் அல்ல" என்றான். அச்சமயத்தில் சகுந்தலை அழுக்கடைந்த துகிலைத் தரித்தவளாய் வாடின முகத்தை யுடையவளாய்க் குழந்தையைப் பார்க்க வந்தாள். அரசன் அவளைப் பார்த்து, "அழுக்கடைந்த சீலையை உடுத்து உடல் மெலிந்து முகம் வாடி யிருக்கும் இந்த உத்தமி என் பிரிவாற்றாமையால் இந்தப் பரிதாப நிலையில் இருக்கிறாளே" என்று மிகவும் துக்கித்தான். அப்பொழுது பையன் ஓடி வந்து, "அம்மா, இவர் யாரோ அறியேன. இவர் என்னைத் தன் பிள்ளையென்று கட்டிக் கொள்ளுகிறாரே!" என்று கேட்டான். அரசனும் பின் தொடர்ந்து வந்து, "ப்ரியே, என் கொடுமை முடிவில் இன்பமாகவே முடிந்தது நான் உன்னை மறந்ததுபோல் நீயும் என்னைமறக்காமல் என்னிடம் அன்புடனிருப்பது என பாக்கியந்தான்" என்று சொன்னான். சகுந்தலை தன் மனத்தில் "மனமே! மிகவும் பதைக்காதே தெய்வம் இப்பொழுதாவது கண் திறந்து கோபம் நீங்கித் தயை நிறைந்து என் நாயகனை என்னிடங் கூட்டிவைத்ததே" என்று எண்ணினாள். அரசன் அவளைப் பார்த்து, "நினைவு உண்டாகி மறதி என்ற இருள் நீங்கிய பின் தெய்வாதீனமாக எனக்குக் கிடைத்த உன் தர்சனமானது கிரஹணம் நீங்கியபின் சந்திரனுக்கு நேர்ந்த ரோகிணீயின் தர்சனம்போன்றது"

என்றான். பாலன் தாயைப் பார்த்து, "அம்மா! இவர் யார்?" என்று கேட்க, அவள், "அப்பா! உன் அதிர்ஷ்டத்தைக் கேள்" என்றாள். அரசன் சகுந்தலையைப் பார்த்து, "என் குற்றத்தைப் பொறுக்கவேண்டும். நான் ஏற்றுக்கொள்ளாமல் உன்னை ஏசியதை மறந்துவிடு. அப்பொழுது எதனாலோ எனக்கு ஒருவிதமான மதிமயக்கம் ஏற்பட்டது. தமோகுணம் மேலிட்டகாலத்தில் இப்படி மனத்தில் குற்றங்கள் ஏற்படுகின்றன. பூமாலையைத் தலையில் யாராவது வைத்தாலும் குருடன் அதைப் பாம்போவென்று எண்ணி வெருண்டு கீழே தள்ளிவிடுகிறான். நீ என்னை மன்னிக்கவேண்டும்" என்று மன்றாடி வேண்டினான். சகுந்தலை அரசனைப் பிரியத்துடனும் நாணத்துடனும் நோக்கி, "நாதா, நான் என்னுடைய முற்பிறப்பிற் செய்த பாபத்தால அப்பொழுது நீங்கள் என்னை மறக்கலானீர்கள். ஆகையாலதான் பரமதயாமூர்த்தியான நீங்களும் என்னிடம் சினங்கொண்டீர்கள்" என்றாள். அரசன் அவள் கண்ணீரைத் துடைத்து மகிழ்வித்தான். அவள் அவன் கையில் மோதிரத்தைக் கண்டு "இதுதான் அந்த மோதிரம். இது எப்படிக் கிடைத்தது?" என்றாள். அதன் விவரத்தை அரசன் சொல்லி அதை அவள் கையில் போட முயன்றபோது அவள், "இதில் எனக்கு நம்பிக்கையில்லை. உங்கள் கையிலேயே அது இருக்கட்டும்" என்றாள்.

அச்சமயத்தில் மாதலி வந்து, "அரசனே! இந்த மகா பதிவிரதையான சகுந்தலையோடும் உங்கள் புத்திரனோடும் நீங்கள் சேர்ந்து இன்புறுவதைக் காண என

க்கு ஆனந்தமாக இருக்கின்றது" என்றான். அரசன், "எல்லாம் அன்புள்ள என் நண்பனால் கிடைத்தது. இது இந்திரனுக்குத் தெரியுமா?" என்று கேட்டான். மாதலி, "தேவர்கள் அறியாதது உண்டா?" என்று சொல்லி, அவர்களைக் காச்யபரிடம் போக அழைத்தான். சகுந்தலை தன்னுடன் வரச் சிறிது நாணினபொழுது அரசன் அவளைப் பார்த்து "பெரியோர்களிடத்தில் தம் பதியாகவே சென்று ஆசீர்வாதம் பெறவேண்டும்" என்று சொல்லி அவளையும் சர்வதமனனையும் காச்யபரிடம் அழைத்துச் சென்றான்.

தக்ஷப்பிரஜாபதியின் பெண்ணும் தன் மனைவியுமான அதிதியிடத்தில் காச்யபர் "இதோ வரும் துஷ்யந்தன் உன் மகன் இந்திரனின் தோழன். போர்களில் இந்திரனுக்கு உதவிபுரிந்து உலகத்தைக் காப்பவன். இவனது வில்லாலேயே அசுரர்கள் வெல்லப்படுவதால் இந்திரன் வஜ்ராயுதம் அவனுக்கு ஆபரணமாகமட்டும் உதவுகிறதே யொழிய ஆயுதமாக உபயோகப்படவில்லை" என்றார். அந்தச் சமயத்தில் துஷ்யந்தன் வந்து "எந்தப் பெரியோர்களிடத்திலிருந்து சூர்யனும், இந்திரனும், சாக்ஷாத் நாராயணனே வந்து அவதரித்த உபேந்திரனும் பிறந்தார்களோ அந்த உத்தமர்களை வணங்குகிறேன்" என்று சொல்லிச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். அவர்கள் "வெகுநாள் சக்கரவர்த்தியாக நீ பூமியை ஆண்டுவா" என்று ஆசீர்வதித்தார்கள். சகுந்தலை தன் மகனுடன் வணங்க அவர்கள், "துஷ்யந்தன் இந்திரன்போலும், உன் மகன் ஜயந்தன்போலும், நீ இந்திராணிபோலும், சுகமாக இருங்கள்" என்று அனுக்

னக்கு அளிக்கட்டும்" என்றான். இப்படிச் சொல்வது நாடகத்தின் முடிவுரையான பரதவாக்யம் என்று பெயர்.

பிறகு அவர்கள் பூலோகஞ்சென்று வெகுகாலம் வாழ்ந்து மகிழ்ந்து உலகத்தை வாழ்வித்து மகிழ்வித்தார்கள்.

## 8. சாகுந்தலத்தின் அழகு.

இந்த விஷயத்தைக் குறித்து வெகு விவரமாக நான் காளிதாஸனைப்பற்றி எழுதிய இங்கிலீஷ் புத்தகத்தில் உரைக்கின்றேன். இந்த நூலின் முக்கிய நோக்கம் காளிதாஸன் இயற்றிய நூல்களை உணர்த்துவதேயாகையால் அவைகளில் அலங்கார சாஸ்திரப் பொருத்தமும், உலக அநுபவமும், அரசியல் முறையும், மத ஸ்வரூபமும் எப்படி யமைக்கப்பட்டுள்ளனவென்று சுருக்கிக் காட்டுவதைத் தவிர விரித்துரைத்தற்கு இடம் இங்கில்லை. இந்த விஷயங்களைக் குறிப்பாகவும் சுருக்கமாகவும் தெரிவிக்கிறேன்.

சாகுந்தலத்தில் காளிதாஸனது சக்தியின் பக்குவநிலை நன்கு விளங்குகின்றது. அவரது கற்பனைசக்தியும், பாஷையின் சிறப்பும், மனிதர்களின் மனத்தின் மர்மங்களை அறிந்துணர்த்தும் திறமும், நாடக பாத்திரர்களுக்குத் தக்கவாறுள்ள சம்பாஷணைகளின் அழகும், உலக அநுபவமும், தர்மங்களை யுணர்த்தும் சக்தியும் உலகத்தில் பிரசித்திபெற்று விளங்கும் வேறெந்த நூலிலும் இத்துணைச் சிறப்புடன் அமைக்கப்படவில்லை. அதைச் சம்ஸ்கிருதத்தில் படித்தவர்கள்தான் அவ்விஷயங்களை நன்றாக அறிய முடியும்.

காளிதாஸனின் பெருமையை இந்த நாடகத்தில் நன்கு அறியவேண்டுமானால் பாரதத்தில் சாகுந்தலோபாக்யானத்தையும் சாகுந்தலா நாடகத்தையும் சேர்த்து வாசித்தல் வேண்டும். பாரதத்தில் ஆதி பர்வத்தில் சகுந்தலையின் கதை அழகாக உரைக்கப்பட்டபோதிலும் அதில் காளிதாஸன் திவ்விய நாடகக் கதையிலுள்ள சொல் நயமும் பொருள் நயமும் இல்லவேயில்லை. அதில் சகுந்தலையே தன் பிறப்பை அரசனுக்குத் தெரிவிக்கிறாள். நாடகத்திலோ அதை அவள் தோழிகள் அவனுக்கு அறிவிக்கிறார்கள். ஆச்ரம வர்ணனையின் அழகும் தோழிகள் மூலமாகச் சகுந்தலையின் அழகின் சிறப்பை உயர்த்தித் தெரிவித்தலும் காளிதாஸனுடைய கல்பனையேயாகும். பாரதக் கதையில் சகுந்தலை அரசனைப் பார்த்து அவனுக்குப் பிறக்கும் குழந்தைக்குப் பட்டம் கட்டுவதானால்தான் அவனைக் காந்தர்வ விவாகம் செய்து கொள்ளுவதாகச் சொல்லுகிறாள். இது பெண்களின் அணியான நாணத்திற்கு அவ்வளவு பொருந்தாதாகலால் காளிதாஸன் சகுந்தலையின் மணத்தை அவளுடைய சூதற்ற மனத்தின் காரியமாகவும் அவளுடைய மாசற்ற அன்பின் விலாசமாகவும் வர்ணிக்கிறார். பாரதத்தில் சகுந்தலை தன் மகனுடன் துஷ்யந்தனிடம் வருகிறாள். அத்தகைய கதையில் ரசக்குறைவு இருக்கின்றது. உயர்ந்த குணமுள்ள நாயகன் மனைவியை அவ்வளவு காலம் மறந்திருப்பானா? மனைவிதான் பிரிய நாயகனைத் தேடிச் செல்லாமலிருப்பாளா? இதுமட்டுமன்று. அவள் மகனே அவளுக்குப் புத்திமதி சொல்லி அவளை யழைத்

தைச் செல்லுகிறான். இதுவும் அவ்வளவு பொருந்தாது. ஆகையால் காளிதாஸன் துர்வாசரிஷி சாபம் என்ற யுக்தியால் ரசபங்கம் வாராமல் கதையைத் தொடுத்திருக் கிறார். சகுந்தலையும் கர்ப்பிணியாக விருக்கும்பொ ழுதே அரசனிடம் போகிறாள். அரசனது மறதி துர்வா சரின் சாபத்தாலுண்டானதால் அரசனும் குற்றமற்றவ னாக இருக்கிறான். பாரதக் கதையில் சகுந்தலை அரச னிடத்தில் பேசும் பேச்சு அம்பைப்போலவும் அதி விரிவாகவும் இருக்கிறது. நாடகத்திலோ அது பொருத் தமாகவும் சுருக்கமாகவும் இருக்கிறது. பாரதக் கதை யில் அவள் சினந்து திரும்பும்போது ஆகாயவாணி அவள் குழந்தை அவனுடைய மகன் என்று சொல் லவே அவன் அவளை அங்கீகரித்துக்கொண்டதாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. வியாசர் மகரிஷியானபடியா லே அவர் எழுதிய நூலின் கதைப்போக்கில் குறைவு ஒன்றுமில்லை. அரசன அவளை ஏற்றுக்கொள்ளுமிடம் மிகவும் அழகாகஇருக்கின்றது. உலகமெல்லாம் அவளை ஒப்புக்கொள்வதற்காகத் தான் அவளை மறுப்பதாக அவன் சொல்லுகிறான். ஆனாலும் காளிதாஸன கதை யில் அதிசுத்தமான வேறு சில அழகுகள் காணப்படு கின்றன. மேனகை சகுந்தலையை அழைத்துச் சென் றாள் என்பதில் ஒரு உயர்ந்த பொருத்தமும் அழகும் விளங்குகின்றது. காச்யபர் ஆசிரமத்துக்கு அவள் போ வதில் ராமாயணக் கதையில் சீதை வால்மீகி ஆசிரமத் திற்குப் போகும் கதையின் குறிப்பும் தோன்றுவதால் காளிதாஸன் அமைப்பு அதிசுந்தரமாக இருக்கின்றது. அதுவுந் தவிர காமசாஸ்திரம் அலங்கார சாஸ்திரம்

இவற்றின் முறைப்படி சிங்கார வர்ணனைகளில் உயர்ந்தது பிரேமையுள்ளவர்களின் பிரிவு (விப்ரலம்ப சிங்காரம்) வர்ணனைதான் என்பது திண்ணம். அதை வர்ணிக்கக் காளிதாஸனுக்கு முன்குறித்த யுக்தியால் இடமுங்கிடைத்தது. அதுவுந் தவிர பரதன் சுவர்க்கத்தில் பிறந்து வளர்ந்து பூமியை ஆளவந்தவன் என்று சொல்லுங் கதையிலும் உயர்ந்த நயம் இருக்கின்றது. இந்தப் புண்ணிய பூமியான பரத கண்டம் அல்லது பாரத வர்ஷம் என்ற பெயருள்ள நாட்டுக்குத் தன் பெயரைக் கொடுத்த மகா புருஷன் பிறப்பும் வளர்ப்பும் எப்படியிருக்கவேண்டும் என்ற சூக்ஷ்மமான த்வனியும் தோன்றுகின்றது. சிறுவர்களுக்குப் புண்ணியமான இடங்களில் வாசமும், பெரியோர்களின் பழக்கமும் ஆசீர்வாதமும் அவசியம் என்பதும் த்வனிக்கின்றது.

நாடகக் கதையின் சிறப்பு இப்படி யிருக்கப் பாஷையின் சிறப்பைச் சொல்லவே முடியாது. இனி சம்ஸ்கிருத பாஷையின் சிங்காரத்தின் எல்லையை வேறெங்குங் காணவே முடியாது. காளிதாஸனின் பாஷை சுருக்கமாகவும் கம்பீரமாகவும் ரசமாகவும் அலங்கார பயமாகவும் த்வனி நிறைந்தும் தேன் சுவை போன்ற சுவையுடன் கூடியதுமாகவும் இருக்கின்றது. வர்ணனைகளின் அழகும் அப்படியே. இயற்கை அழகுகளை சுவாபாவாலங்காரமாக வர்ணிப்பது மிகவும் அரிதேனும், அவை இனிமையும, அழகும் நிறைந்தவை. சம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் கவிகளின் வர்ணனைகளில் அதிசயோக்தியே விசேஷித்திருத்தலைக் காண்கிறோம். பொருள்களின் வனப்பை மிகுத்துச் சொல்

வதற்கு அதிசயம் அல்லது அதிசயோக்தி என்று பெயர். மான், குதிரை முதலிய மிருக வர்ணனையிலும், ஆசிரமம், காலை, மாலை முதலிய இயற்கை அழகின் வர்ணனைகளிலும், பெண்களின் அழகின் வர்ணனையிலும் சுபாவோக்தி என்ற அணியின் சிறப்பு அதிகமாக இந்த நாடகத்திற் காணலாம். உவமையிற் காளிதாஸன் சிறந்தவர் என்ற பழமொழி எல்லோரும் அறிந்த விஷயம். அதையும் இந்த நாடகத்திற் காணலாம். இந்த விஷயங்களைப்பற்றியும் நாடக நுட்பங்களைக் காளிதாஸன் உணர்ந்திருப்பதைப்பற்றியும் அரசியல், மதஸ்வரூபம், முதலியவைகளைப்பற்றியும பிறகு விவரமாகத் தெரிவிக்கிறேன்.

இந்த நாடகத்திலுள்ள பாத்திரர்களில் சகுந்தலையின் வர்ணனையே சிறந்து விளங்குகின்றது. ஷேக்ஸ்பியர் மகாகவி டெம்பெஸ்ட் என்ற நாடகத்தில் மிராண்டா என்ற சிமாட்டியை நன்கு உணர்ந்து வர்ணித்திருத்தல் போலவே, காளிதாஸனும் அதைவிடச் சகுந்தலையை மிகவும் அழகுபட வர்ணித்திருக்கிறார். சகுந்தலை முனிச்ரேஷ்டருக்கும் தெய்வலோகப் பெண்ணுக்கும் பிறந்தவள். ஆகையால் அழகும் அமைதியும் இயற்கையிலேயே வாய்ந்தவள். ஆசிரமத்தில் வனப்பின் மத்தியில், புண்ணியாத்மாக்கள் பழக்கத்தில், மான்கள் மயில்கள் குயில்கள் நடுவில் வளர்ந்தவள். மாசற்றவள்; கபடமற்றவள்; மகா புண்ணியவதி. அவளுக்குத் துஷ்யந்தனிடத்தில் உண்டான நட்பு சந்திரனுக்கும் ஆம்பலுக்குமுள்ள நட்பைப்போலவும், சந்திரனுக்கும் சந்திரகாந்தக் கல்லுக்

குமுள்ள உள்ளூரலைப்போலவும், சந்திரனுக்கும் சமுத்திரத்துக்குமுள்ள அன்பைப்போலவும் இயற்கையிலேயே ஏற்பட்டுள்ள பிரேமையாகும். உலகத்தில் அரசனுயிருந்து பல இன்பங்களை அனுபவித்த துஷ்யந்தனின் மனத்தை ஆசிரமப் பெண்ணுன சகுந்தலை கவர்ந்தது பூர்வ ஜன்ம நட்பாலும், அவளுடைய தூய்மையாலும், மாசற்ற குணத்தாலும், அதிரூபலாவண்யத்தாலுமே நேர்ந்ததாகும். அவளுக்கு அரசனிடத்தில் ஏற்பட்ட அளவற்ற பிரேமை அவளுடைய நாணம், தூய்மை, வாய்மை, அமைதி முதலிய நற்குணங்களுக்குப் பங்கமின்றிப் பரிமளித்தது. அவளுக்குக் கொடிகளிடத்திலும், செடிகளிடத்திலும், மான்களிடத்திலும், தோழிகளிடத்திலும் இருந்த அன்புக்கு அளவே இல்லை. இப்படிப் பறவைபோல விளையாடிக்கொண்டிருந்த அவளுக்கு வினையின் பயனுகத் துயரம் வந்தும் பத்தரைமாற்றுத் தங்கம்போல் அவள் மனத்தின் சோபை குன்ருமல் ஒளி வீசி ஜ்வலித்தது. வெகு விரைவாக உதித்த அன்பு துயரமாகிய நெருப்பில் விழுந்து பூவைப்போல வாடிக் கருகிப் போகாமல் தங்கத்தைப்போல முன்னிலும் பதின்மடங்காகப் பிரகாசித்தது. அப்படித் தவத்தில் பிறந்து, தவத்தில் வளர்ந்து, தவத்தில்பூத்து, தவத்தில் கனிந்த சீமாட்டியல்லவா நாட்டுக்கு இராணியாகவும் சக்கரவர்த்தித் திருமகனுக்குச் செல்வத்தாயாகவும் இருக்கவேண்டும். அவளுடைய குணதிசயங்களை விரித்துச் சொன்னுல் இந்த நூல் வெகு விரிவாகப் போய்விடும். சிறுவர்கள் இந்த நூலைமட்டும் வாசித்து நின்றுவிடாமற் காளிதாஸனுடைய உத்தம

நாடகத்தைச் சம்ஸ்கிருதத்தில் வாசித்து இன்புறுமாறு மிகவும் வேண்டுகின்றேன்.

துஷ்யந்தனோ தர்மமூர்த்தியான அரசன். மனத்தில் தூய்மை வாய்ந்தவன். "நல்லவர்களுக்குஐயம் வந்தால் அவர்கள் மனமே பிரமாணம்" என்று சொல்லக்கூடிய தர்மஸ்வரூபி. முனிவர்கள் மானைக் கொல்லக்கூடாதென்று வேண்டினவுடன் வேகத்தை அடக்கி அமைதியை அடைந்தான். கண்வர் ஆசிரமம் வந்தோமென்று அறிந்தவுடன் வணக்கத்துடன் தேரைவிட்டு இறங்கிக் கால் நடையாகவே அங்கே சென்றான். பரிவாரங்களால் ஆசிரம அமைதிக்குத் தீங்கு வருமென்று நினைத்து அவர்கள் தன்னை பின்பற்றப் புறப்பட்டு ஆடம்பரமாக அங்கே செல்லவில்லை. முனிவர்கள் அரக்கர்களிடமிருந்து தம்மைக் காப்பாற்றும்படி கேட்டுக்கொண்டபொழுது தன தாயார் நோம்புக்கு வரும்படி சொன்னதையும் தன் சொந்த சுகங்களையும் புறக்கணித்துக் கடமை செலுத்துவதிலேயே நோக்கமுற்றிருந்தான். சகுந்தலையினிடத்தில் அளவிடக்கூடாத விருப்பமுற்றிருந்தும்வரம்பு மீறாத புண்ணிய புருஷன். சகுந்தலையைத் துர்வாச சாபத்தால் மறந்தபொழுது பிறன் மனைவியைப் பார்க்கலாகாது, ஏற்றுக்கொள்ளலாகாதென்ற பாப பயத்தால் கட்டுப்பட்டிருந்தான். மோதிரம் பார்த்தவுடன் பிசகு செய்துவிட்டோம், அனியாயமாகச் சகுந்தலையை ஏற்றுக்கொள்ளாமல் தள்ளிவிட்டோம் என்று அறிந்த பிறகு அவன் அடைந்த பச்சாத்தாபத்திற்கு அளவே இல்லை. தன் வம்சத்திற்கு மாசில்லாமல் இருக்கவேண்டுமென்றும், தான் தர்மத்திற்குட்பட்டு

பாபத்திற்குப் பயந்து நடக்க வேண்டுமென்றும், தான் நெறி புரண்டாற் குடிகள் எல்லாம் நியாயமார்க்கம் மீறிப்போவார்களென்ற பயத்தாலுமே சகுந்தலையை அவன் ஏற்றுக்கொள்ள மறுத்தான். வலுவில் வந்த தேவதையைப்போல் விளங்கின புவன சுந்தரியான சகுந்தலையை யார்தான் விலக்குவார்கள்? அவனுடைய குணங்களில் குடிகளிடத்திலுள்ள அன்பே மிகவும் புகழ்தற்குரியதாம். தயையே உருவமெடுத்துத் தோன்றியவன். சகுந்தலையின் பிரிவால் வருந்திய பிறகு அவனுடைய தயை மேன்மேலும் ஓங்கி வளர்ந்தது. இறந்த செட்டியின் சொத்தைப் பாதுகாத்து அவனுக்குப் பின்னால் பிறந்த மகவுக்கு கொடுத்தான். உற்றார் இறந்து வருந்தியவர்களுக்கெல்லாம் தானே அந்தரந்த பந்துவாக இருப்பதாக முரசறைவித்தான். மனிதர்களிடம் மட்டுமேயன்றிக் குதிரைகளிடத்திலும் அன்பு பூண்டிருந்தான். வேட்டையாடி ஓடிக் களைத்த குதிரைகளை நன்றாகக் கழுவும்படி பாகனுக்குக் கட்டளையிட்டுப் பிறகுதான் ஆச்ரமத்திற்குச் சென்றான். ஆசிரம மான்களும் நீர் அருந்தும்படி செய்வதில் பிரியப்பட்டவன். இதுவுந்தவிர விதூஷகனிடத்தில் என்ன விளையாட்டு. சிரிப்பே யறியாமல் கருமமே கண்ணாயினாரான பிரபுக்களைப்போல் அவன் நடந்துகொள்ளவில்லை. விதூஷகனை மாதலி பிடித்துக்கொண்டபொழுது உடனே வில்லெடுத்து ஓடி அவனைக் காக்க முயன்றான். அவனுக்குப் பெரியோர்களிடத்திலிருந்த அன்புக்கும் வணக்கத்திற்கும் எல்லையே இல்லை. அசுரர்களை வென்று வெற்றி முரசுடன் வரும்பொழுது அவனைக்

காச்யபர் ஆசிரமத்தில் கொண்டுவிட்ட காளிதாஸனின் கருத்து உள்ளங்கை நெல்லிக் கனிபோல விளங்குகின் றது. புண்ணியாத்மாக்களுடனும் தபோவனங்களுட னும் சம்பந்தப்பட்ட அரசியலே தேச க்ஷேமங்களுக்கும் சுபங்களுக்கும் சம்பத்துக்களுக்கும் மங்களங்களுக்கும் முக்கிய ஆதாரம். இப்படி மகா புண்ணியவானுகவும் தர்மாத்மாவாகவும் இருந்த துஷ்யந்தனுக்குச் சகுந் தலை இராணியாகக் கிடைத்ததும், சக்கரவர்த்தித் திரு மகனான பரதன் மைந்தனாகக் கிடைத்ததும் மிகவும் பொருத்தமான பாக்கியமே. இதுதான் காளிதாஸனு டைய உத்தம நாடகத்தின் உத்தம மர்மம்.

கண்வரோ மகரிஷி, குலபதி, மகா தபசி. எடுத்து வளர்த்த பெண்ணினிடத்தில மிகுந்த அன்பு உடையவர். அவளுக்குத்தீங்கு வாராவண்ணந்தெய்வங்களை வணங்கச் சோம தீர்த்தஞ்சென்றார். சகுந்தலை துஷ்யந்தனை மணந் ததைக் குறித்துக் களித்து அவளுக்கு நல்ல புத்திமதி களைக் கூறி அவளை அனுப்ப மனமே வாராமல் பிறகு மனந் தெளிந்து அவளை அவனிடம் அனுப்பினார். இந்த நாடகத்தில் அந்த இடமே தேன்பாகைப்போல அமிர் தச் சுவையுள்ள இடம். அவருடைய அனுக்கிரகமே சகுந்தலையின் சர்வ க்ஷேமங்களுக்கும் மூலகாரணம்.

அப்படியே காச்யபர் அதிதி இவர்கள் வர்ணனையும் மிகவும் அழகு வாய்ந்துள்ளது. தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் மூலகாரணமான அந்தக் காச்யபப் பிரஜாபதியின் விரிவான அன்பும், அமைதியும், ஆனந் தமும் மனதைக் கவரக் கூடியதாக இருக்கின்றது. சாகுந்தலத்தில் அந்த இடமும் ரத்தினம்போன்றது.

அனசூயை, ப்ரியம்வதை இவ்விருவரது ஒற்றுமையைக்காட்டும் நயத்தாலேயே வேற்றுமையையுங்காட்டும் திறம் மிகவும் கவனிக்கத் தக்கது. பிரியம்வதை சாதுர்யமான பேச்சிலும் விளையாட்டிலும் தேர்ந்தவள். அனசூயை அமைதியிலும் தர்ம உணர்ச்சியிலும் தேர்ந்தவள். இருவருக்கும் சகுந்தலையிடத்திலுள்ள அன்புக்கு அளவே இல்லை.

குழந்தை சர்வதமனனது வர்ணனை ஒரு அங்கத்தில் மட்டும் இருந்தாலும் அது எவ்வளவு மனோகரமாக இருக்கின்றது! அவனுக்கு என்ன அழகு! என்ன தைரியம்! என்ன காம்பீர்யம்! என்ன வீரத்தன்மை! தாயினிடத்தில் என்ன பிரியம்! பெரியோர்களிடத்தில் என்ன வணக்கம்! அவனை சக்ரவர்த்தியாகப் பெற்ற இந்த நாடு அவனை மறக்க மனமில்லாமல் அவன் பெயரையே தன்பெயராக வைத்துக்கொண்டது.

இப்படியே மற்ற நாடக பாத்திரர்களும் பொருத்தமாகவும் சுருக்கமாகவும் அழகாகவும் இந்த நாடகத்தில் அமைக்கப்பட்டிருக்கின்றனர். அதனை முற்றும் விவரிக்க அவகாசம் இல்லை. ரவீந்திரநாத டாகூர் என்ற மகா கவி இந்த அழகிய சாகுந்தல நாடகத்தைப் பற்றிச் சொல்லுஞ்சில வார்த்தைகளைமட்டும் இங்கே சொல்லுகின்றேன்.

"கேதே என்ற மகா கவி சொன்ன செய்யுள் சாகுந்தலத்தின் காவிய மகிமையைமட்டும் உணர்த்துவதாக நினைக்கக்கூடாது. அந்தச் செய்யுள் காவ்ய ரசத்தை உணர்ந்த இன்பத்தைமட்டும் குறிக்கவில்லை. குண தோஷங்களைச் சரியாக அறிந்த ரசிகன் தீர்மானமாகச்

சொன்ன அபிப்பிராயம் அதில் அடங்கி இருக்கிறது. அவர் சொல்வது சாகுந்தலத்தில் மனதின் அழகிய பரிணாமமே முக்கிய நோக்கம் என்பதுதான். சாகுந்தலத்திலுள்ள பரிணாமம் பூ கனியாக மாறுவதும், இந்திரிய வின்பம் ஆத்ம சுகமாக மாறுவதும், மனிதத் தன்மை தெய்வத் தன்மையாக மாறுவதுமேயாம். தேக அழகைப்பற்றியதும் உறுதியில்லாததும் நச்வரமுமாக முதல் அங்கத்தில் காட்டப்பட்ட அன்பு ஏழாவது அங்கத்தில் காச்யபர் ஆசிரமத்தில் பரிசுத்தமான மனத்தைப்பற்றியதும் உறுதியானதும் அழிவில்லாததுமான அன்பாக மாறுவதுதான் நாடக ஹிருதயம். அழிவுள்ள இன்பம் அழிவில்லாத ஆனந்தமாகப் பரிணமிக்கின்றது. வெகு அழகாகக் காளிதாஸன் பூமியையும் சுவர்க்கத்தையும் ஒற்றுமைப் படுத்தியிருக்கிறார். ஆசை என்ற பூமியிலிருந்து பிரேமை என்ற சுவர்க்கம் அடைதல் இந்த நாடகத்தில் குறிப்பாகக் காட்டப்பட்டிருக்கின்றது. தவத்தால் பரிசுத்தம் அடைந்த ஆசையே பூர்ணப்பிரேமையாகக் கனிக்கின்றது. ஆசிரமத் தூய்மை என்ற அடிப்படையின்மேல் ஆனந்தம் என்ற அரண்மனையைக் காளிதாஸ மகா கவி கட்டியிருக்கிறார். நாயகன் நாயகியரின் அழகால் உண்டான அன்பை வைராக்கியத்தால் சுத்தப்படுத்தித் தெய்வத் தன்மை வாய்ந்து தெளிந்த உறுதியான பிரேமையாக அவர் ரசவாதியொருவன் ரசவாத வித்தையால் இரும்பைத் தங்கமாக மாற்றுவதுபோல் மாற்றி யிருக்கிறார். நாயகனால் உண்டான அன்பு உலகத்திற்கு நன்மை பயக்கவும் தெய்வ அனுக்

கிரகத்திற்குச் சாதனமாக இருக்கவும் வழி காட்டியிருக்கிறார். மலை யருவிபோல் வந்த அன்பு தூய்மை என்ற கடலை யடைந்து உயர்ந்த அமைதியைப் பெற்று விளங்கும் அழகை இந்த நாடகத்திற்போல வேறெங்கும் நாம் பார்க்க முடியாது. அவ்வளவு உத்தமகுணங்கள் வாய்ந்த சிறந்த நாடகம் சாகுந்தலம்."

# அத்தியாயம் 8.

## காளிதாஸனுடைய மற்ற நூல்கள்.

காளிதாஸ மகா கவி இன்னும் அனேக நூல்களை இயற்றி இருந்தாலும் அவைகள் முன்கூறிய நூல்களுக்குச் சமானமானவையல்ல. அந்நூல்களிலும் சில அவரால் இயற்றப்பெற்றனவாவென்று சிலர் சங்கிக்கின்றனர். இந்த அத்தியாயத்தில் அவருடைய ஏனைய கிரந்தங்களைச் சுருக்கமாக அறிவிக்கிறேன்.

அவருடைய மற்ற நூல்களாவன—ருதுசம்ஹாரம், ச்யாமலா தண்டகம், ச்ருதபோதம், ராக்ஷச காவியம், புஷ்ப பாண விலாசம், ச்ருங்கார ரசாஷ்டகம், ச்ருங்கார திலகம், கங்காஷ்டகம், சேது பந்தகாவ்யம், நளோதயம், காளி ஸ்தோத்ரம் என்பனவாம். இவற்றுள் ருதுசம்ஹாரம், ச்யாமலா தண்டகம், ச்ருதபோதம் இம்மூன்றையும் அவருடைய நூல்களாகச் சொல்லலாம். மற்ற நூல்கள் அவர் இயற்றியவை என்று துணிந்து சொல்லமுடியாது.

ருது சம்ஹாரத்தில் காளிதாஸன் ஆறு பருவங்களையும் வர்ணிக்கிறார். க்ரீஷ்ம ருது என்பது கோடை காலம் அல்லது முதுவேனிற் காலம். அதில் கதிரவன் வெப்பமாகவும், சந்திரன் சீதளமாகவுமிருத்தலின் நீராடுவோர்க்கு சுகந்தரும் நீரும் இன்பமான மாலைப்பொழுதும் நிறைந்திருக்கும். ஜனங்கள் அழகிய ஆடைகளை யணிந்து, சந்தனப் பூச்சும் பூசி, மங்கள

மான பாட்டுக்களைப்பாடி ஆனந்தமடைவார்கள். வெப்பத்தால் விலங்குகளும் பறவைகளும்வாடி நிற்கின்றன. பாம்பு மயிலின் நிழலைச் சென்றடைகின்றது. சிங்கம் யானையின்மேல் பாயாமல் உறங்குகின்றது. எருமைகள் நீர்க்குட்டைகளைத் தேடி அலைகின்றன. குரங்குகள் குகைகளைத் தேடுகின்றன, பறவைகள் மரங்களின் நிழலில் தங்கி யிருக்கின்றன. காட்டுத்தீ காடெங்கும் பரவுகின்றது. உலக முழுவதும் சூரியன் வெப்பத்தால் தபிக்கப்பட்டு ஏங்குகின்றது.

பிறகு வர்ஷருது (கார்காலம்) வர்ணிக்கப்படுகின்றது. யானைகளைப்போன்ற மேகங்களுடனும், கொடிகளைப்போன்ற மின்னல்களுடனும், வாத்தியங்களைப் போன்ற இடிகளுடனும், அரசனைப்போலக் கார்காலம் தொடங்குகின்றது. வான முற்றும் முகில்களால் மறைக்கப்பட்டிருக்கின்றது. கணவனைப் பிரிந்த பெண்கள் தங்கள் நாயகர்கள் எப்பொழுது வருவார்களென்று ஆவலுடன் எதிர்பார்க்கிறார்கள். ஆறுகள் நீர் நிறைந்து கடலை நாடுகின்றன. உலகம் எங்கும் குளிர்ந்து பசுமையாக விளங்குகின்றது. மயில்கள் ஆனந்தமாகக் கூத்தாடுகின்றன

பிறகு சரத்காலம் (முதிர்காலம்) வர்ணிக்கப்படுகின்றது. நீருண்டமேகங்கள் மழைபெய்த பிறகு வெளுத்துச் சிறு சிறு மேகங்களாக ஆகாயத்தில் போய்க்கொண்டேயிருக்கின்றன. இரவானது நக்ஷத்திரங்களை ஆபரணமாக அணிந்து, நிலாவை வெண்பட்டாக உடுத்தி, அழகிய யௌவன மங்கைபோல் விளங்குகின்றது. வயல்களில் பயிர்வளர்ந்து செழித்து நிற்கின்றது.

ஹேமந்தகாலம் என்பது முன்பனிக்காலம், ஹேமந்தகாலத்தில் குளிர் ஆரம்பிக்கின்றது. பயிர் பக்குவதசையை யடைகின்றது. புற்களின் நுனிகளில் சிறு பனித்திவலைகள் விளங்குகின்றன.

சிசிரருதுஎன்பது பின்பனிக்காலம். அப்போது வயல்களில் அறுவடையாகித் தானியங்களைக் களிப்புடன் ஜனங்கள் சேரகக் கட்டுகிறார்கள் குளிரதிகமாக விருப்பதால் ஒருவரும் சந்தனத்தை விரும்புவதில்லை; காற்றை எதிர்பார்ப்பதில்லை. நிலா விளங்கும் மேடைகளுக்கும் போவதில்லை. மக்கள் அகில், சாம்பிராணி, ஊதுவர்த்தி முதலியவைகளால் நறுமணத்துடனும்வெப்பத்துடனும் சுகமாக விருக்கும் அறைகளை நாடி இன்பமுற்றிருக்கிறார்கள்.

வசந்த ருது என்பது இளவேனிற்காலம். அது குளிர் நீங்கிப் பூக்கள் நிரம்பி உலகமெல்லாம் களிக்குஞ் சமயம். மன்மதன் பஞ்சபாணங்களையும் கரும்பு வில்லையுந் தாங்கி மாதர் மனத்தை வெல்லுங்காலம். அக்காலத்தில் மரங்களில் பூக்களும், பெண்களிடத்தில் அன்பும், காற்றில் நறுமணமும், மாலைப்போழ்துகளில் ஆனந்தமும், பகலில் அழகும் விளங்கும். அது வண்டுகள்பாடும் காலம்; குயில்கள் இனிமையாகக் கூவுங்காலம்; அசோகமரங்கள் மாணிக்கம்போன்ற சிவந்த மலர்களைத் தரிக்கும் காலம். எல்லாவிதமான அழகுக்கும் ஆனந்தத்திற்கும் இருப்பிடமான வசந்த காலம் எல்லோர் மனத்தையும் கவர்ந்து கொள்ளுந் தன்மை வாய்ந்த சமயம்.

ச்யாமலா தண்டகம் பரமேச்வரியின் அழகையும் அன்பையும் மகிமையையும் விவரிக்கின்றது. அதன் பாஷையின் சிறப்பை வர்ணிக்கவே முடியாது. முற்காலத்தில் அதைப் பாடம் பண்ணிச் சொல்லிக் களிக்காதவர்களே இல்லை.

ச்ருதபோதத்தில் யாப்பிலக்கணம் எளிய நடையில் சொல்லப்பட்டிருக்கின்றது.

ச்ருங்காரதிலகத்திலும், ச்ருங்கார ரசாஷ்டகத்திலும், புஷ்ப பாண விலாசத்திலும் ச்ருங்கார வர்ணனையே மிகுந்திருக்கின்றது. ராக்ஷஸ காவியத்திலும் அப்படியே. கங்காஷ்டகம் வெகு அழகும் காம்பீர்யமும் பொருந்தியது. மற்ற நூல்களில் தோன்றும் சிறப்புக்கள் காணப்படாவிட்டாலும் அவையும் அழகு வாய்ந்தவைகளாகவே யிருக்கின்றன. நளோதயத்தில் நள சரித்திரம் சொல்லப்படுகின்றது. அது சித்திரப் பேச்சும் சிலேஷைகளும் நிரம்பி யிருக்கும் காவியம். ஆனால் காளிதாஸனுடைய உயர்ந்த நூல்களில் காணப்பெறும் கற்பனைசக்தியும் கருத்துக்களின் சிறப்பும், பாஷையின் அழகும் நளோதயத்தில் விளங்கவில்லை.

# அத்யாயம் 9

## காளிதாஸனின் மகிமை.

காளிதாஸ மகா கவியின் சம்பூர்ண மகிமையை விரிவாகத் தெரிவிக்கும் பெரிய நூல் பின்னால் வெளியிடப்படுமாகையாலும், அவருடைய நூல்களின் பழக்கத்தை அதிகப்படுத்துவதே இந்நூலின் முக்கிய நோக்கமாக இருப்பதாலும் இங்கே அவர் மகிமையை விரிவாகவும் அநேகக் கோட்பாடுகளைச் சொல்லி விளக்கியும் உரைக்காமல் சுருக்கமாகவும் குறிப்பாகவும் அறிவிக்கின்றேன்.

காளிதாஸன் படிப்பிலும் குணத்திலும் உலக அனுபவத்திலும் சிறந்தவர் என்ற விஷயம் அவர் நூல்களைப் படிப்பவருக்கு நன்றாகப் புலப்படும். அவருக்கு வியாகரணம், அலங்கார சாஸ்திரம், வேதாந்த சாஸ்திரம் முதலிய அருமையான சாஸ்திரங்களில் நல்ல பழக்கமும் ஞானமும் இருந்த விஷயம் அவர் நூல்களிற் காணப்படும் உவமைகளாலும் உதாரணங்களாலும் தெளிவாக விளங்கும். அவருக்கு வைத்தியம், சங்கீதம், ஜோதிடம் முதலிய சாஸ்திரங்களின் ஞானமுண்டென்ற விஷயமும் அவர் நூல்களால் விளங்குகின்றது. இதுவுந் தவிர அவர் இந்தியா முழுவதும் சென்று இயற்கை யழகுகளையும், நாட்டிலுள்ளவர்களையும், அவர்கள் குணங்களையும் நன்றாக உணர்ந்தவர். அரண்மனை ஆனந்தங்களையும் ஆரண்ய ஆனந்தங்களையும் அனுபவித்தவர். தைரியமும் சாந்தமும் வாய்ந்தவர். அழகோடு கூடிய பொருட்களின் இன்பத்தை அறியும் திறமும் அடைய விருப்பமும் உள்ளவர். அவர் அடக்

கம், வணக்கம், குருபக்தி, தெய்வபக்தி, அன்பு, நன்றி யறிவு முதலிய நற்குணம் வாய்ந்த புண்ணிய புருஷன்.

காளிதாஸனுக்கு நம்முடைய நாட்டின் பெருமையின் உணர்ச்சி எவ்வளவு உயர்வாகவும் விரிவாகவும் அழகாகவும் இருந்தது என்று நாம் அறிய வேண்டும். இந்தியாவின் அழகு முழுவதும் அவருடைய காவியத்தில் சிறப்பிக்கப்பட்டிருக்கிறது. மேகஸந்தேசத்தில் ராமகிரியின் வடக்கே அளகாபுரிவரையிலுள்ள தேச சௌந்தர்யங்கள் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. ரகுவம்சத்தில் 4, 5 சர்க்கங்கள் இந்தியா தேசத்தின் அழகையும் பெருமையையும் வர்ணிக்கவே ஏற்பட்டுள்ளன. நம்முடைய நாட்டின் குணங்களை சௌந்தர்யமும் எப்பாகத்திலே பூர்ணமாக உரைக்கப்பட்டிருக்கிறது. காளிதாஸனுக்கு நம்முடைய நாட்டின் மலைகளிலும், ஆறுகளிலும், க்ஷேத்திரங்களிலும், தீர்த்தங்களிலும், பக்தர்களிடத்திலும், ஞானிகளிடத்திலும் இருந்த ஆசையை சொல்லி முடியாது. இமயமலையின் மகிமை அவர் நூல்களில் நிரம்பி இருக்கிறது. குமாரஸம்பவம் முழுவதும் இமய மலையின் பெருமையை உணர்த்துவதற்காகவே ஏற்பட்டது. காச்மீரத்தில் மட்டும் பல முறை ஒரு அருமையான அழகிய பலவற்றை அவர் வர்ணித்திருக்கிறார். அவருடைய நுட்பமான அறிவும் இயற்கை யழகுகளை உணர்ந்து உரைக்கும் தேர்ச்சியும் நாட்டின் வளங்களை அனுபவித்து மகிழ்ந்து உரைக்கும் அழகும் அவரை நன்றாக அறிந்து அவருடைய நூல்களை ஆழ்ந்து அனுபவித்துப் படிப்பவர்களுக்குத் தான் விளங்கும்.

காளிதாஸன் எழுதும் முறைகளின் அழகுகளை எல்லோரும் கொண்டாடிப் புகழ்ந்திருக்கிறார்கள். அவருடைய சொல் சுருக்கமாகவும் மதுரமாகவும் கம்பீரமாகவும் விளங்குகின்றது. அணிகளில் சிறந்த

உவமை அணியைப் பிரயோகிப்பதில் அவருடைய திறம் ஒப்புயர்வில்லாதது. "உபமா காளிதாஸஸ்ய" என்று சொல்வது வழக்கம். ரகுவம்சத்தில் ஆறுவது சர்க்கத்தில் அறுபத்தி யேழாவது சுலோகத்தில் அவர் வர்ணித்திருக்கும் அழகை மெச்சி அவரை தீமசிகா காளிதாஸன் என்றும் வியந்து சொல்வதுண்டு. ஜயதேவர் பிரஸன்னராகவம் என்ற நாடகத்தில் காளிதாஸனைப்பற்றிச் சொல்லும்பொழுது அவரைக் காவ்ய லக்ஷ்மியின் விலாஸம் என்று வர்ணித்திருக்கிறார்.

காளிதாஸனின் பெருமை காவியங்களிலும் நாடகங்களிலும் ஒரே மாதிரியாக விளங்குகின்றது. அவருடைய மகா காவியங்களில் நம்முடைய புண்ணிய பூமியில் பிறந்த பெரியோர்களின் அருமையான சரித்திரங்களும் ஈசனுடைய அவதார லீலைகளும் சிறப்பாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவருடைய நாடகங்களில் ரஸங்களின் பெருக்கும், சமயோசிதமான பாஷையும், கருத்தும் நிரம்பியிருக்கின்றன.

அவருடைய நூல்களில் மிகவும் சிறப்பாக வர்ணிக்கப்பட்டிருப்பது சிருங்கார ரஸம். அது தலைவன தலைவியருடைய இன்பம். அதை வர்ணிப்பதில் தலைகால் தெரியாமல் மனம்போன போக்காக வர்ணிக்காமல அடக்கமாகவும், அழகாகவும், ஆனந்தமாகவும், தர்மமாகவும், உலகத்திற்கு நன்மை பயக்கக்கூடிய முறையிலும் அவர் வர்ணித்திருக்கிறார். பெண்களின் மனத்தை அவர் உணர்ந்து வர்ணித்திருப்பதைப்போல் வேறொருவரும செய்யவில்லை. இளம்பிராயத்தில இருக்கும் குமாரர்களை வர்ணிப்பதிலும் அவர் திறம் உயர்ந்ததாக இருக்கின்றது. பரதன், ஆயுஸ், ரகு, குமாரக்கடவுள் இவர்களை வர்ணிக்கும் முறையும், திறமும், அழகும் வெகு ஆச்சரியமாக இருக்கின்றன.

மனிதர்களை வர்ணிக்கும் தேர்ச்சியைப் போலவே அவருக்கு இயற்கை அழகுகளை வர்ணிக்கும் திறமும் வாய்ந்திருந்தது. மலைகளையும், நதிகளையும், காடுகளையும் மரங்களையும், மலர்களையும் நன்றாகப் பார்த்தறிந்து அனுபவித்து மகிழ்ந்து வர்ணித்திருக்கிறார். மேக ஸந்தேசத்தில் பூர்வமேகம் முழுவதும் இயற்கை அழகு வர்ணனையே நிரம்பி இருக்கின்றது. உத்தர மேகம் முழுவதும் அன்பின் வர்ணனையே நிரம்பி இருக்கின்றது.

சங்க தர்மங்களை மிகவும் விரிவாகவும் அழகாகவும் காளிதாஸன் வர்ணித்திருக்கிறார். அரசனுடைய குணங்களை உரைக்கும்பொழுது அவன் குடிகளிடத்தில் அன்புள்ளவனாகவும் தர்ம ஸ்வரூபியாகவும் இருக்க வேண்டுமென்பது அவருடைய முக்கியமான கருத்து. நல்ல அரசனை “ராஜ்யாச்ரம முனி” என்று வர்ணித்திருக்கின்றார். அரசியலின் முறைகளை ரகுவம்சத்தில் விரித்துரைத்திருக்கின்றார். குடிகளும் தங்கள் தங்களுடைய கடமைகளை வழுவாமல் செய்து ஒற்றுமையுடன் கூடி இருந்து தெய்வபக்தி தேசபக்தி, ராஜ பக்தி நிறைந்திருக்கவேண்டுமென்பது தான் அவருடைய அருமையான உபதேசம். மற்ற அரசர்களை வென்றாலும் அவர்களைக்கொன்று அவர்கள் நாடுகளைக் கட்டிக்கொள்ளாமல் அவர்களிடம் கப்பம் வாங்கி அவர்களை நியாயமாகச் செங்கோல் செலுத்தி அரசியல் நடத்தக் கட்டளையிடவேண்டும் என்பதும் அவருடைய கொள்கை.

காளிதாஸனுடைய மதாசாரக் கொள்கைகள் சுயமாகவே உயர்வாகவும் கம்பீரமாகவும் இருப்பதுடன் நம்முடைய நாட்டின் தற்கால நிலைமையில் மிகவும் அறியவேண்டியவையாகவும் இன்றியமையாதவையாகவும் இருக்கின்றன. மதத் துவேஷங்களும், ஜாதித்

த்வேஷங்களும் கணக்கு மீறி வரம்பு தாண்டி நம்முடைய நாட்டைப் பாழாக்குகின்றன. காளிதாஸனின் மதம் வேதங்களில் உபதேசிக்கப்பட்ட சமரஸமான மதமே. கர்மம், பக்தி, யோகம், ஞானம் முதலிய சாராம்சங்களைக்கைப்பற்றி, என் தெய்வம், உன் தெய்வம் என்ற போராட்டமில்லாமல் சிவ விஷ்ணுத் த்வேஷ தூஷணைகளில்லாமல் மிகவும் விசாலமாகவும் சமரஸமாகவும் அன்பும், ஒற்றுமையும், ஆனந்தமும், அனுபவமும் விளையாடும் அவருடைய அருமையான நூல்களே நம்முடைய நாட்டின் உயிர்நிலை என்று நாம் அறிந்து அனுபவிக்கவேண்டும்.

இந்தக் கவிகுல சக்ரவர்த்தி பிறந்தகாலம் நம்முடைய நாடு செழித்து வெற்றியும் பெருமையும் புகழும் பெற்றிருந்த காலம். காளிதாஸன் நம்முடைய நாட்டின் தேவதையான பாரத மாதாவே சிறப்புடன் உருவெடுத்து வந்த அவதார புருஷன். அவரை அறிந்தால் நம்முடைய நாட்டை அறியலாம். அவரை அறியாவிட்டால் நம்முடைய நாட்டை அறிய முடியாது. வால்மீகி, வியாசர், காளிதாசன் இம்மூவர்களே காவ்யப் பிரபஞ்சத்தின் திருமூர்த்திகள். காளிதாஸனைப்பற்றி சொல்லப்பட்டிருக்கும் பழமையான அழகான ஒரு செய்யுளைச் சொல்லி இந்நூலை முடிக்கின்றேன் :—

காளிதாஸ கிராம் ஸாரம்
காளிதாஸஸ் ஸரஸ்வதீ
சதுர்முகோதவா சாக்ஷாத்
விதுர் நான்யேது மாத்ருசா :

(காளிதாஸனுடைய சொற்களின் அருமையைக் காளிதாஸனோ, ஸரஸ்வதியோ, பிரமனோ அறிய முடியும். எம்போன்றவர்கள் அறிய முடியுமா ?)

Printed by Srinivasa Varadachari & Co., Madras. 1,100—31-5-1926.